# குறுந்தொகைச் சொற்பொழிவுகள்





1940 நவம்பர் 30,
டிசம்பர் 1-ஆம் நாட்களில்
சென்னையில் நடைபெற்ற
குறுந்தொகை மாநாட்டில்
— நிகழ்ந்தவை —

திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.,
6.பவழக்காரத் தெரு, சென்னை.1.

கழக வெளியீடு—௨௧௫

# குறுந்தொகைச்
# சொற்பொழிவுகள்

[1940 நவம்பர் 30, டிசம்பர் 1-ஆம் நாட்களில்
சென்னையில் நடைபெற்ற குறுந்தொகை
மாநாட்டில் நிகழ்ந்தவை]

தலைமையுரை
நெய்தல் ::
முல்லை ::
பாலை :: ::
மருதம் ::
குறிஞ்சி ::

*

: திருநெல்வேலி, தென்னிந்திய :
: சைவ சித்தாந்த :
நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி :: சென்னை

# பதிப்புரை

இவ் வாண்டு மார்ச்சுத் திங்கள் 9, 10-ம் நாட்களில் இக் கழகத்தின் ஆதரவில் 'கலித்தொகை மாநாடு' நடைபெற்ற செய்தியைத் தமிழன்பர்கள் அறிவர். சங்க இலக்கியங்கள் ஒரு வியக்கத் தக்க முறையில் இப்போது தமிழ் மக்களின் உள்ளங்களை அள்ளி வருகின்றன. பலர் சங்க இலக்கியங்களில் ஆர்வங்கொண்டு பயில முற்பட்டிருக்கிறார்கள். உண்மையும், சுருக்கமும், சுவையும், மொழிவளமு முடைய இலக்கிய நூல்கள் பழுமரம் போல எல்லாரையுந் தம்மிடம் ஈர்ப்பது இயல்பன்றோ! மரம் பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி இரந்தழைப்பார் யாவரும் அங்கு இல்லையே. ஆதலின், யாணர்ப் பழுமரம் புள் இமிழ்ந்தன்ன ஊண் ஒலி அரவம், இச் சங்க நூல் நுகர்விலும் உண்டாதல் இயல்பேயாம். இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் தனித்து நுகர்வது தமிழர்கள் வழக்கன்று; ஆதலின், மாநாடுகள் கூடுகின்றன; தமிழ் மக்கள் ஊக்கங் கருதி இப்போது **குறுந்தொகை மாநாடும்** நடைபெறுகின்றது. மேலும் **அகநானூறு நற்றிணை** மாநாடுகள் முதலியன நடைபெறவிருக்கின்றன.

'கலித்தொகை மாநாடு' நடைபெற்றபோது, அம் மாநாட்டில் நிகழ்ந்த தலைமையுரையையும் சொற்பொழிவுகளையும் 'கலித்தொகைச் சொற்பொழிவுகள்' என்னும் பெயரோடு ஒரு நூலாக அம் மாநாட்டிலேயே வெளியிட்டோம். எல்லார்க்கும் அது மன நிறைவு தந்தது; மேலும் நடைபெறும் மாநாட்டுச் சொற்பொழிவுகளும் இங்ஙனம் நூலாக வெளிவரின் பெரும்பயனுயிருக்கும் என்னுங் கருத்தையும் அன்பர் பலர் புலப்படுத்தினர்.

ஆதலின், இப்போது நடைபெறுகின்ற இக் 'குறுந்தொகை மாநாட்'டிலும், தலைவர் **பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள்** தலைமையுரையோடு தமிழறிஞர் ஐவர் சொற்பொழிவுகளையுந் தொகுத்து இந்நூலை வெளியிடுகின்றோம்.

தலைவரவர்களும், சொற்பொழிவாளர்களும் தமக்குப் பல அலுவல்களிருந்தும் இதனை யொரு முதன்மையாகக் கருதி அன்புடன் எழுதி யளித்தமைக்கு எங்கள் மனமார்ந்த ஆழ்ந்த நன்றியை அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

கல்லூரிகளிற் கலைபயிலும் மாணவர்களுக்கும், குறுந்தொகையை ஆராய்வோர்க்கும் இச் சொற்பொழிவு நூல் நன்கு பயன்படு மென்று நம்புகிறோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

## பொருளடக்கம்



பண்டிதமணி
மு. கதிரேசச் செட்டியார்.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத்துத் தமிழாசிரியர்

பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியார்

அவர்கள் நிகழ்த்திய

# குறுந்தொகை மாநாட்டுத்

# தலைமை யுரை

அன்புமிக்க ஐயன்மீர்! அன்னைமீர்!

இக் குறுந்தொகை மாநாட்டில் நிகழும் அரிய சொற்பொழிவுகள் எல்லாவற்றையும் ஒழியாது கேட்டு மகிழும் பேற்றுக்கு உரிய பதவியை எனக்கு அன்புடன் அளித்த சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக அமைச்சர்க்கு என் நன்றியறிவை முதலிற் புலப்படுத்திக்கொள்ளுகிறேன்.

உலகத்துப் பருப்பொருள்களைக் காண்டற்குக் கருவியாக மக்களுக்கு அமைந்த புறக்கண்போலப் புறக்காட்சிக்குப் புலனாகாத நுண்பொருள்களை யறிந்து தெளிதற்குரிய அகக்கண் அமைதல் இன்றியமையாத தென்பது யாவரும் உணர்வர். பருப்பொருள்களைக் காணும் புறக்கண்ணும் அகக்கண்ணின் துணையின்றி அப்பொருள்களின் இயல்புகளைப் பகுத்துணர்தற்கு வலியுடையதாகாது. ஆகவே, புறக்கண்ணினும் அகக்கண் மக்கட்டன்மைக்குச் சிறப்பாக வேண்டப்படுவதென்பதை அறிகின்றோம். இவ் வகக்கண் யாதாக இருக்கலாம் எனின், இதற்கு விடையாகப் பேரறிஞர்கள் எல்லோருங் கூறியது ஒன்றே. அது கல்வி யென்பதை,

> "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டுங்
> கண்ணென்ப வாழும் உயிர்க்கு"

என்பதனால் உணரலாம். இக் கல்வி ஒவ்வொரு நாட்டினர்க்கும் அவ்வந் நாட்டு மொழி வாயிலாக இருத்தல் வேண்டும் என்பதும், பின்னர் வேண்டப்படும் வேற்று மொழிப் பயிற்சி அறிவாற்றற் கேற்ப இருக்கலாம் என்பதும் அறிஞர் கண்ட முடிபுகளாம். நமக்குரிய நாட்டு மொழியைப் புறக்கணித்து வேற்று மொழியில் எத்துணை

மேற்சென்ருலும் மொழியறிவாற் பெறும் பயன் முற்றும் பெற்றதாகமாட்டாது. இந் நிலையில் நாம் இன்றியமையாது பயிலவேண்டுவது நமக்குரிய தமிழ்மொழியேயாகும். இம் மொழிக்கண் உள்ள இலக்கிய நூல்களுள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்க இலக்கியங்கள் காலத்தால் முற்பட்டனவாம். மொழி வளமும், பொருள்களின் இயற்கையை உள்ளபடி எடுத்து விளக்கும் ஆற்றலும், உவமையழகும், ஊன்றிப் படிப்பார்க்கு உணர்ச்சி யின்பம் தரும்பச் செய்யும் இயல்பும் ஒருங்கமைந்து விளங்குவன சங்க இலக்கியங்களேயாகும். சில்வகை யெழுத்தாலாய செந்தமிழ்ச் சொற்களும், தொகைநிலைத் தொடர்களும், கருதிய பொருள்களைத் தெளிவுறுத்துவனவாக அப் பாடல்களிற் பரக்கக் காணலாம். அகமும் புறமுமாகிய பொருள்களை இயனெறியில் திறம்பாமல் உலகியல் ஒழுக்கத்தொடு இயைத்துப் புலனெறி வழக்கமாகப் பாடல் செய்யுந் திறம் சங்ககாலத்துப் புலவர்களுக்கு அமைந்ததுபோலப் பிற்காலத்தவர்பால் காண்ட லரிதாகும். பாடல்களில் அமையவேண்டிய ஆழமுடைமை, இனிமை, எளிமை என்னுங் குணங்களுள் ஆழமுடைமையும் இனிமையும் சங்க இலக்கியங்களில் நன்கு அமைந்துள்ளன என்பதை யாவரும் எளிதின் உணர்வர். எளிமை கால வேறுபாட்டால் அவ்விலக்கியங்களில் அருமையாக மாறுதல் அடைந்துள்ளது. அப் பாடல்கள் தோன்றிய காலத்து அந் நடை எளிமையாக இருக்கலாம். அக் காலத்துப் பயிற்சியில் முதிர்ந்த செந்தமிழ்ச் சொற்கள் இயல்பாக வழங்கப்பட்டிருக்கக் கூடுமாதலின், அப் பாடல் நடைகளும் அங்ஙனமே அமைந்துள்ளன என்று கோடல் பொருந்தும். இற்றைஞான்று மொழிநடையில் முதிர்ந்த பழஞ்சொற்களும் தொடர்களும் சிறிது சிறிதாகக் கைவிடப்பட்டு வந்தமையால் முன்னைப் பாடல் நடைகள், இப்பொழுது நமக்கு எளிமையில்லாதனவாகக் காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களுள் ஒரு சிலவற்றைத் தெளிவாகப் பொருளுணர்ந்து படித்து அடிக்கடி பழகி வருவேமாயின் அந்நடையும் நமக்கு எளிமையாக அமையும். எதுகை மோனை நிமித்தம் வறிதே அடைமொழிகளைப் புணர்த்துப் பொருட்சுருக்கமும் சொற்பெருக்கமும் அமைய யாக்கப்படும் பிற்காலத்தவர் பாடல்கள் நுண்ணறிவுடையார்க்கு இன்பஞ் செய்வனவாகா. ஒரு சிறு சொல்லேனும் வறிதே விரவாமல் உய்த்துணருந்

தோறும் "நவில்தொறும் நூல்நயம் போலும்" என்னும் முதுமொழிக் கிணங்க இன்பஞ் செய்வன சங்கப் பாடல்களே யாகும். இத்தகைய பொருள்வளஞ் சான்ற சங்க இலக்கியங்கள் இடையே சில நூற்றாண்டுகளாகத் தமிழ் மக்களாற் பயிலப்படாம லிருந்தன. இப்பொழுது ஒரு சில ஆண்டுகளாக அத் துறையில் விழிப்புடையராய்ப் பயில முற்பட்டிருப்பது மகிழ்ச்சி தருவதொன்று. இற்றை ஞான்று ஆடவரும் மகளிரும் சங்க இலக்கியங்களைப் படிக்கவும், அவற்றிற் கூறப்படும் இயற்கை முதலிய பொருளழகுகளை உணர்ந்து இன்புறவும், பெருங் கழகங்களில் பலருந் தெளிய எடுத்துரைக்கவும் தகுதியுடையராய் முன்வருதல் தமிழ ராக்கம் புத்துருப்பெற்று வளர்தற்கேற்ற சான்றாகும். இந் நிகழ்ச்சியில் இச் சென்னைமாநகரம் முற்பட்டிருப்பது சிறப்பாக நினைக்கத் தக்க தொன்று. பத்துப் பாட்டு மாநாடு, கலித் தொகை மாநாடு, சங்க இலக்கிய மாநாடு என மூன்று பேரவைகள் இதற்குமுன் நடைபெற்றன. இன்னும் பல நடைபெறுதற்குரிய முயற்சிகள் காணப்படுகின்றன. இன்று கூடிய மாநாடு "குறுந்தொகை" என்னும் அரிய நூலைப் பற்றியதாகும்.

குறுந்தொகை என்பது சங்க இலக்கியங்களாகிய தொகை நூல்கள் எட்டனுள் ஒன்று. இது நல்ல குறுந் தொகை என்று பாராட்டப்பட்டுள்ளது. அகப்பொருள் நுதலிய தொகை நூல்களுள் அடியளவாற் பெற்ற பெயர் இதுவாகும். நாலடிச் சிற்றெல்லையையும் எட்டடிப் பேரெல்லையையும் உடையது. அடியளவாற் குறுகியதன்றிப் பொருளளவாற் பெரியதென்றே கூறலாம். இதன்கண் மேற்கொண்ட அகத்துறைகளைத் தெளிவு படுத்துங் குறிப்புக்கள் வியத்தகு முறையில் அமைந்துள்ளன. கூறப்படும் பொருள்கள் வரையறையும் தெளிவு முடையனவாய் பயில்வார்க்குப் பெரிதும் இன்பஞ் செய்கின்றன. இதற்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடியுள்ளார். அது முருகப் பெருமானைப் பற்றிய வாழ்த்தாக இந் நூன்முகத்தே திலகம்போல ஒளிர்கின்றது. அப் பாடல் வருமாறு:—

"தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவழத் தன்ன மேனித் திகழொளிக்

**குன்றி யேய்க்கும் உடுக்கைக் குன்றின்**
**நெஞ்சுபக வெறிந்த அஞ்சுடர் நெடுவேல்**
**சேவலங் கொடியோன் காப்ப**
**ஏம வைக லெய்தின்றா லுலகே "** என்பதாம்.

இப் பாடலின் தூய்மையை நன்காராய்ந்த யாப்பருங்கலக் காரிகை உரையாசிரியர் எல்லாக் குற்றமும் தீர்ந்த செய்யுட்கு மேற்கோளாக இதனை எடுத்துக் காட்டியுள்ளார். இதன்கண் முருகப் பெருமானுடைய திருவடி, நிறம், ஒளி, ஆடை, வேல், சேவற்கொடி என்னும் இவை ஆறும் புனைந்துரைக்கப் பட்டன. முருகவேளை நினைக்கும் போதே தாமரைமலர் முன்னிற்பதும், அறுவகை வருணனையில் உள்ளஞ் சேறலும் புலவர் பெருமக்களுக்கு இயல்பாக நிகழத்தக்கன. நிவந்தோங்கு இமயத்து நீலப் பைஞ்சுனையாகிய சரவணப் பூம்பொய்கையில் பதுமப் பாயலில், அப் பெருமான் தோன்றிய உண்மையை நினைவுறுவார் உளக்கண்ணுக்குத் தாமரைமலர் எங்ஙனம் புலனாகாதிருத்தல் கூடும்? "நமக்குமாராய" என்னும் ஆறெழுத்தடக்கிய அருமறைக் கேள்வியும், ஆங்கம் மூவிரு முகனும் முறைநவின் றொழுகலும், மனங் கொள்ளுவார்க்கு அறுவகை இயைபு எவ்வாற்றாலும் அப் பெருமானுக்குப் பொருந்தியதென்று உயர்ந்த கவிகள் கருதுதல் இயல்பே. இதற்கேற்ப இக் கடவுள் வாழ்த்து ஆறடிகளால் ஆக்கப்பட் டிருப்பதும் ஈண்டு உணர்ந்து இன்புறத்தக்கது. இனி, முதலில் அப் பெருமானுடைய சிவந்த திருவடியே புனைந்துரைக்கப்படுகின்றது. கடவுளரைப் பாடுங்கால் அன்னார் திருவடி நினைவே கவிகளுக்கு முன்னிற்பதாகும். அதனாற் பெறும் பயன் நோக்கி அங்ஙனங் கூறல் மரபு. யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான் திருவடியும், யாவர்க்கும் கீழாம் அடியார் தலையும் ஒன்றுபடுவதே வேண்டப் படுவதாகும். இது கருதியே இறைவனோடு இரண்டறக் கலத்தலாகிய வீட்டு நிலைக்குத் "தாடலைபோல் அடங்கி நிற்றல்" என்று சைவப்பெரியார் எடுத்துக் காட்டுவர். "தாடலை என்னும் தொடரில், தாள் என்பத னிறுதியும், தலை என்பதன் முதலும் ஒன்றுபட்டுத் "தாடலை" என்றாயவாறுபோல, இறைவன் நிலையில் உயிர்நிலை தோய்ந்து இரண்டற்ற நிலையாதலே "வீடு"

என்பது புலனும். இங்ஙனம் திருவடியை முதற்கண் தொடங்குதலும், அத் திருவடிக்கட்பொருண் முடிபு கோடலும் ஆகிய மரபு குறுந்தொகைக்கண் அன்றி நற்றிணை, ஐங்குறுநூறு, அகநானூறு முதலியவற்றிலும் முறையே "மாநிலஞ் சேவடியாக" எனவும், "ஒருவன் இருதாள் நிழற்கீழ்" எனவும், "தாவில் தாள்நிழல் தவிர்ந்தன்று வுலகே" எனவும் கூறிய முறையான் உணரலாம். குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு இம் மூன்றும் முறையே குறுமை, இடைநிகர், நெடுமை ஆகிய அடியளவுபற்றித் தொடுக்கப்பட்டனவாம். இவற்றிற்கு முறையே பாரதம் பாடிய பெருந்தேவனார் முருகன், திருமால், சிவபிரான் இவர்களைப்பற்றிக் கடவுள் வாழ்த்துக் கூறியுள்ளார். இம் முறையில் ஆசிரியர் பிரமன், திருமால், சிவபிரான் இவர்களைப்பற்றிக் கருதியிருக்கலாம். பிரமனைக் கூறவேண்டிய பகுதியில் அப் பிரமனை மறைப்பொருள் வினவி அடக்கியருளிய ஆற்றல் முருகவேளுக்கு உள்ளதாலும், நிலக்கிழமை பற்றியும் இதற்கு முருகன் வாழ்த்துச் சிறந்ததென மேற்கொண்டார் போலும்.

இனி, நானிலத்து ஐந்திணை ஒழுக்கமும் இந்நூல் நுதலிய பொருளாதலின், அப் பொருளைக் கருக்கொண்டுள்ளது இப் பாடலென உணர்க. இங்ஙனம் நூல் நுதல் பொருளைத் தன்னகத் தடக்கி முதற்பாடல் புலப்படுக்குமாற்றைத் திருக்கோவையாரில் "திருவளர் தாமரை" என்னும் முதற் செய்யுட்குப் பேராசிரியர் செய்த நல்லுரையானும் உணரலாம். இக் கடவுள் வாழ்த்துப் பாடலில் அக் கருப்பொருள் அமைந்த முறையைச் சற்று ஆராயத் தொடங்குவேன். "தாமரை புரையுங் காமர் சேவடி" என்புழி மருத நிலத்துக் கருப்பொருள் ஆகிய தாமரையும், "பவழத் தன்ன மேனி" என்புழி நெய்தல் நிலத்துக் கருப்பொருள் ஆகிய பவழமும், "குன்றி யேய்க்கும் உடுக்கை" என்புழி முல்லைக்கு உரியதாகக் கருதப்படும் குன்றிமணிக் கொடியும், "குன்றின் நெஞ்சுபக எறிந்த" என்றதனுல் குறிஞ்சிக்கு உரிய மலையும் புலப்படுக்கப் பட்டுள்ளன. பாலைக்கெனத் தனியே நில மின்மையானும், முல்லையுங் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து, பாலை என்பதோர் படிவங் கொள்ளும்" ஆதலானும், அம் முறையில் குறிப்பாக அந் நிலமும் புலப்படுக்கப்பட்ட

தென்னலாம். குன்றியையும் குன்றத்தையும் ஒரேயடியில் இயைய வைத்த குறிப்பும் இதனை வலியுறுத்துவதாகும். ஈண்டுக் குறிஞ்சியல்லா ஏனை நிலங்களைக் கருப்பொருள்களாலும், குறிஞ்சியை முதற் பொருளாலும் பெறவைத்தது, "சேயோன் மேய மைவரை யுலகமும்" என்றபடி அந் நிலவுரிமை செவ்வேட்கு உள்ளது கருதியே.

முருகவேளின் இளமையும், அழகும், வீரமும், சிறப்பு முறையில் கவிகளின் உள்ளத்தைக் கவர்வனவாம். "தாமரை புரையுங் காமர் சேவடி" என்பதனால் இளமைச் செவ்வி புலனாம். தாமரை இதழ்போன்ற மென்மையும், செம்மையும் ஈண்டு இளமையைப் புலப்படுப்பன. "பவழத் தன்ன மேனித் திகழொளி" என்றதனால், திருமேனி நிறமும் அந் நிறத்தில் விளங்கும் பேரொளியும் அழகைப் புலப்படுப்பன. முருகனது ஒளியின் பெருமையை "முன்னேவந்து எதிர்தோன்றும் முருகனே பெருகொளியால்" என்னும் பெரியார் மொழியானும் உணரலாம். "குன்றின் நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்" என்றதனால் வீரம் புலனாம். உலகம் கொடியவர்களால் துன்புறுங்கால் தம் வேற்படை கொண்டு பகையொழித்து இன்புறுத்தற்கு வீரம் இன்றியமையாதது ஆகலின், காத்தற் றொழிலுக்கு உதவியாக வீரம் முதற்கண் அடுத்துக் கூறப்பட்டது. அளியும் தெறலும் அரசர்க்கு இன்றியமையாதனவாம். அந் நிலையில் தெய்வ அரசாகிய முருகவேட்குக் "காப்ப" என்றதனால் அளியும்' "குன்றின் நெஞ்சுபக எறிந்த" என்றதனால் தெறலும் உள்ளன என ஆசிரியர் பெருந்தேவனார் புலப்படுத்துள்ளார். முருகவேளின் காவலிற்பட்டு உலகம் இன்பமயமான நாட்களை எய்துகின்றது என்னும் பொருள் தோன்ற, "காப்ப, ஏம வைகல் எய்தின்று லுலகே" என இவ் வாழ்த்து முடிக்கப்பட்டது. இதனால் மக்களுக்கு உரிய அன்பின் ஐந்திணை ஒழுக்கம் இந்நூல் நுதலிய பொருளாகும் என்பது குறிப்பிற் புலப்படுத்தவாறும். இவ் வாழ்த்துப் பாடலில் மருத நிலத்துக் கருப்பொருள் முதலிலும், குறிஞ்சிக் கருப்பொருள் ஈற்றிலும் அமைந்துள்ளன. இதனால் "ஊடுதல் காமத்திற் கின்பம்; அதற்கின்பம், கூடி முயங்கப் பெறின்" என்னும் முதுமொழிப்படி ஊடலும் கூடலும் முறையே

நிகழும் இன்பவியல்பு புலப்படுக்கப்பட்டது என்பதும் போதரும். இங்ஙனம் இக் குறுந்தொகைக்கு அமைந்த கடவுள் வாழ்த்துப் பாடல் நுண்பொருள் பலவற்றையும் தன்னகத்து அடக்கி நுண்ணுணர்வினோர்க்கு நவில் தொறும் உணருந்தோறும் முருகன் திருவடி இன்பம் போன்ற பேரின்பத்தைப் பயத்தலால் இன்பவூற்றாகத் திகழ்வதாகும்.

அன்பர்களே!

இனி, இந் நூலின் உட்பகுதியில் நுழைந்து பல பொருள் நயங்களைப் பின்னே சொற்பொழிவாற்ற முன் வரும் புலவர் வாயிலாக உணர்ந்து இன்புறலாம். ஆயினும், நறுஞ்சுவைப் பொருளை நுகர்தற்கு வேட்கை விஞ்சினார், பின்னவர் காலந்தாழ்த்துத் தரும்வரை காத்திருத்தற்கு மனம் ஒருப்படுவாரல்லர். ஏதோ கைக் கெட்டிய அளவு முந்துற நுகர்தற்கு விரும்புதல் இயல்பே. அம் முறையிற் சிற்சில பகுதிகளை அறிவு கருவியாக நுகர்ந்து இன்புறலாமென நினைக்கின்றேன். இந் நூலின் இயல்பை விளக்கமாகப் பேச நினையின் மிக விரியும் ஆதலின், ஒரு சில நயங்களை மட்டில் ஆராயலா மென எண்ணுகின்றேன். அவை:— **1.** உவமை யழகு, **2.** குண வருணனை, **3.** தேற்று முறை, **4.** உள்ளுறை, **5.** மக்கள் மன நிலை, **6.** காதலின் இயல்பு என்பனவாம். இவையும் சுருங்கிய அளவில் முறையே கூறப்படும்.

## 1. உவமை யழகு

சங்க இலக்கியங்களுட் பெரும்பாலும் அமைந்த அணிகள் தன்மை நவிற்சியும் உவமையுமாம். பொருள் களைத் தெளிவுறுத்துவது உவமையாகும். ஒருபுடை யொத்தல் உவமமெனக் கொண்டு உள்ளத்துணர்வுக்குக் கொள்ளத் தக்க அளவின் அன்றி உவமை கூறுவர் பிற்காலத்துப் புலவர். சங்கப் புலவர் காணும் உவமைகள், பொரு ளோடு ஒத்த தன்மையால் நெருக்கம் உடையனவாய் நின்று உணர்வுக்கு இன்பஞ் செய்வனவாம். அவற்றுள், இங்கே ஒரு சிலவற்றைக் குறிப்பிடுவேன். மனையாளை யஞ்சி யொழுகும் ஒராடவன் இயல்பு, "கையுங் காலுந் தூக்கத் தூக்கும், ஆடிப் பாவை போல, மேவன செய்யும்" என்று உவமை கூறித் தெளிவுறுத்தப்பட்டது.

கண்ணுடியின் முன்னின்ருர், தம் கையையும் காலையுந் தூக்குங்கால், அக் கண்ணுடியில் தோன்றும் எதிருருவாகிய பாவையும் அங்ஙனமே தூக்குமென்பது எளிதிற் காணப்படுவதொன்று. இதனுல் "ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே" என்புழிப்போல, இறைமை தலைவிபாலதாக, அவள் இயக்கியாங்கு இயங்குதல் தெளிவுறுத்தப்பட்டது. இது பரத்தை கூற்ருதலின், அவள் மனம் வேறுபட்ட நிலையிற் கூறியது பற்றித் தலைமகன் பெருமைக்கு இழுக்காகாதென்பது ஈண்டு அறியத் தக்கது.

பிறிதோரிடத்து, சிறிய உயிரில் அமைந்து கிடக்கும் பெரிய காதலின் இயல்பை உவமிக்கக் கருதிய ஆசிரியர்,

"சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" என்கின்ருர்.

வேரிற் பழுக்கும் பழத்தை நீக்குதற்குக் கோடெனவும், சிறு பழத்தை நீக்குதற்குப் பெரும் பழமெனவுங் கூறினர். மரக்கொம்பை மகளிர்க்கு உவமையாக்குதல் கவிமரபு. இங்கே உடலோடு உயிர்க்குள்ள ஒற்றுமை கருதியும், உயிர் அணுவென்று கூறப்படுதல் பற்றியும், தலைவியின் இளமைச் செவ்வி நினைந்தும் சிறு கோடு உவமையாயிற்று. இத்தகைய சிற்றுயிரில் தங்கிய வேட்கையோ மிகப் பெரிதென்பது போதரவும், நுகருந் தலைமகனுக்கு அது பேரின்பஞ் செய்யுமென்பது பற்றியும் காமத்திற்குப் பெரும்பழம் உவமையாயிற்று. காமம் நறுங்கனியாகக் கூறப்படுதலை,

"தாம் வீழ்வார் தம்வீழப் பெற்றவர் பெற்ருரே
காமத்துக் காழில் கனி"

என்னுந் திருக்குறளாலும்,

"கன்னிமை கனிந்து முற்றிக் காமுறக் கமழுங் காமத்
தின்னறுங் கனியைத் துய்ப்பான் ஏந்தலே"

என்னும் சிந்தாமணிச் செய்யுளாலும் உணரலாம். காதலின் வளர்ச்சியை ஆடவர் மகளிர் பிரிவிற் காண்டல் போலக் கூடற் காலத்திற் காண்டற் கியலாது. கூட்டத்தில் இருவரும் உள்ளம் இயைந்து இன்பம் நுகர்வர். அந் நிலையில், அவ் வின்ப நிலை,

"மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லெனிற் சொல்லுமா றெங்ஙனே"

என்ற பெரியார் மொழிப்படி வெளிப்படுத்துச் சொல்லுந் தரத்ததன்று. பிரிவுத் துன்பம் வாய்விட்டுக் கூறும் இயல்பினது. இதுபற்றியே இங்கே தோழி "உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே" என்றனள். கூடலில் நிகழும் இன்பத்தினும் பிரிவின்கண் நிகழுந் துன்பம் மிகப் பெரிதா மென்பதனை,

"எரிதலைக் கொண்ட காமத் தின்பநீர்ப் புள் ளியற்றால்
பிரிவின்கட் பிறந்த துன்பம் பெருங்கட லனைய தொன்றால்"

என்னும் சிந்தாமணியாசிரியர் கூற்றாலும் உணரலாம். இங்கே இன்பத்தையுந் துன்பத்தையும் நீராகக் கொண்டு, அவ்வின்பம் நீர்த்திவலை யளவினதென்றும், பிரிவுத் துன்பம் நீர்ப் பெருக்காகிய கடலளவின தென்றும் கூறியது உணர்ந்து இன்புறத்தக்கது. 'காமமோ பெரி' தென்றதும் பிரிந்த நிலையில் நிகழ்வது கருதியே. முதிர்ந்த பெரும்பழம் கொள்ளுவாரில்லை யாயின், தனக்கு ஆதாரமாகிய சிறிய கொம்பையும் இறுத்துத் தானும் வீழும். அதுபோலத் தலைவியின் காதற் பெருங்கனியை, உரிய தலைவன் நுகர முற்பட் டிலனேல், அதற்கு ஆதாரமாகிய தலைவியின் சிற் றுயிரையும் இறந்துபடச்செய்து தானுங் கெடு மென் பதும் இங்கே உணரத்தக்கது.

இனி, களவொழுக்கத்திற் றலைப்பட்டு மீண்ட தலை மகனது வேறுபாடு கண்ட பாங்கன், அவ் வேறுபாட்டிற் குரிய காரணத்தை வினவியபொழுது, ஓர் இளம்பெண் ணால் இங்ஙனம் நேர்ந்ததென்று தலைமகன் கூறியதாக ஒரு பாடல் உள்ளது. அது :—

"சிறுவெள் ளரவின் அவ்வரிக் குருளை
கான யானை யணங்கி யா அங்கு
இளையள் முளைவா ளெயிற்றள்
வளையுடைக் கையளெம் அணங்கி யோளே"

என்பதாம். சிறிய வெள்ளிய பாம்பின் குட்டியானது காட்டில் திரியும் பெரிய யானையை வருத்தினாற்போல, நாணல் முளைபோன்ற கூரிய பற்களையுடைய ஓர் இள நங்கை என்னை வருந்தச் செய்தாள் என்பது இதன்

பொருளாகும். மிகச் சிறிய கோவினுற் கொல்லத்தக்க பாம்புக்குட்டி, மலைபோன்ற யானையையும் வருந்துமென்பதை,

"அஞ்சனக் கோவி ணுற்று நாகமோ ரருவிக் குன்றிற்
குஞ்சரம் புலம்பி வீழக் கூர்நுதி யெயிற்றிற் கொல்லும்"

என்னும் சிந்தாமணிச் செய்யுளாலும் அறியலாம். இங்கே, தலைவன் யானையைத் தனக்கு உவமையாகக் கூறியதனுல், தலைமையிலக்கணத்துக்குப் பொருந்தாத தற்புகழ்தல் பெறப்படுகின்றதே; அங்ஙனம் பெறவைக்கலாமோ வெனின், சென்றதற்கு இரங்குகின்ருனுதலின் தற்புகழ்தல் ஆகா தென்பது கருத்து. இங்கே,

"ஒண்ணுதற் கோஒ உடைந்ததே ஞாட்பினுள்
நண்ணாரு முட்குமென் பீடு"

என்னுந் திருக்குறளும், 'ஞாட்பினுள் நண்ணாரு முட்குமென் பீடு' என்பதனுற் பெறப்பட்ட தற்புகழ்தலைப் பரிகரித்தற்கு, "கழிந்ததற் கிரங்கலில் தற்புகழ்தல் அன்ருயிற்று" என்று கூறிய பரிமேலழகர் உரைப் பகுதியும் ஒப்பு நோக்கி இன்புறத் தக்கன. இங்ஙனம் பாங்கன் கேட்டதற்குத் தலைமகன் இறுத்த விடையை ஏற்றுக்கொள்ளாமல், பாங்கன், பேராற்றல் படைத்த நீ ஒரு சிறுமகளால் இத் தன்மையை யாதல் நின் பெருமைக்கு இழுக்காகுமென்று இடித்துரைத்தாஞக, அக் கழற்றுரையைத் தலைமகன் மறுத்துரைக்கு முகமாக ஒரு பாட லுள்ளது. அஃது,

"இடிக்குங் கேளிர் நுங்குறை யாக
நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல
ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கிற்
கையி லூமன் கண்ணிற் காக்கும்
"வெண்ணெ யுணங்கல் போலப்
பரந்தன் றிந்நோய் நோன்றுகொளற் கரிதே"

என்பது. இதன்கண் ஓரழகிய உவமை எடுத்தாளப்பட்டது. கதிரவனது கடும் வெயிலெறிக்கும் வெப்பத்தையுடைய பாறையின்கண்ணே, கையில்லாத ஊமன் தன் கண்ணினுலே பாதுகாக்கும்படி வைக்கப்பட்ட வெண்ணெய் உருகுதல்போல, இக் காதல் பரந்துளது;

பொறுத்தற்கரிதாயிற்று என்பதாம். ஊமன் இலக்கணத்தைச் சிந்தாமணியாசிரியர்,

"கையி னாற்சொலக் கண்களாற் கேட்டிடும்
மொய்கொள் சிந்தையின் மூங்கை"

என்று கூறினர். பிறர் கையினாற் கூறுஞ் செய்திகளை ஊமன் தன் கண்களாற் கேட்குமெனவும், பேச இயலாமையினால் நினைந்த கருத்துக்கள் அளவில்லனவாக உள்ளத்தில் நிறைந்திருக்கு மென்பது கருதி 'மொய்கொள் சிந்தையின் மூங்கை' எனவுங் கூறினர். இங்ஙனம் பேச இயலாமையோடு கையுமில்லையானால், வெண்ணெ யுருகிப் பரத்தலைக் கண்ணினாற் கண்டும் பிறர்க்குத் தெரிவிக்க இயலாமையோடு அவ் வெண்ணெயைப் பெயர்த்தெடுத்துப் பிறிதோரிடத்து வைக்கவும் அவ்வூமர்க்கு இயலாவாம். அதுபோல, இந்நோயைப் பொறுக்கவும் பிறர்க்கு வெளிப்படுத்திக் கூறி ஆறுதலடையவும் இயலாதவனாயினே னெனவும், என்னை இடித்துரைக்கு நண்பரே இதனை நும் காரியமாக நிறுத்தலைச் செய்யின் நன்றாமெனவும் தலைமகன் கூறினா னென்பது இப் பாடற் கருத்து. இத்துணையும் உவமை நயங்கள் ஒருவாறு புலப்படுக்கப்பட்டன.

## 2. குண வருணனை

இனி, ஒரு குணத்தை யெடுத்துச் சிறப்பித்துக் கூறுங்கால், அதற்குப் பேரெல்லையாக எம்மட்டிற் கூறலாமோ அத்துணையுங் கூறி, அக் குணத்தின் பெருமையை விளங்கவைத்தலை இந் நூலிற் பலவிடத்துங் காணலாம். தலைமகள் தன் காதலனோடு மேற்கொண்ட நட்பைப் பற்றிக் கூறும்போது "நிலத்தினும் பெரிதே, வானினு முயர்ந்தன்று, நீரினு மாரள வின்று" என்று கூறியதாக ஒரு பாடற் பகுதி காணப்படுகிறது. திருக்குறளிற் பெருமைக் கெல்லையாக நிலம் வான் கடல்கள் கூறப்பட்டுள்ளன. இவ்வெல்லாம் பெருமை யென்னும் ஒரு பொதுத்தன்மைபற்றி யெழுந்தனவாம். இவ் வுண்மையைப் பற்றி வினாவிய அனபாயசோழ அரசற்கு, இவை எடுத்தாளப்பட்ட மூன்று திருக்குறள்களையும் எடுத்துக்

காட்டி எழுதி யுய்த்த பெருமைபற்றிச் சேக்கிழார் பெருமான் திருக்கைகள்,

"மண்ணிற் கடலின் மலையிற் பெரிதென
எண்ணியெழு திக்கொடுத்த ஏற்றக்கை"

என்று பாராட்டப் பெற்றன. இங்ஙனம், திருக்குறளில் பெருமை யொன்றேபற்றிக் கூறப்பட்டனவாக, இங்கே ஒவ்வொரு வகையினும் வேறு வேறு பொதுத் தன்மை கண்டு கூறியது இன்புறத்தக்கது. சிறந்த நட்பென்னுங் குணம் சுருங்கியதாக இல்லாமற் பரந்தும், அப் பரப்பிற் கேற்ப உயர்ந்தும், அதற்கேற்ப ஆழ்ந்தும் இருத்தல் வேண்டும். பிறராற் சிதைக்க முடியாதபடி வேர் ஆழ்ந்திருத்தலைப் பிற்காலத்துப் புலவரும்,

"ஒருநாட் பழகினும் பெரியோர் கேண்மை,
இருநிலம் பிளக்க வேர்வீழ்க் கும்மே

என்று கூறுவர். இங்ஙனம் மூன்று தன்மையும் வாய்மையும் வாய்க்கப்பெற்று எல்லாம்வல்ல இறைவன் எங்கும் நிறைந்த நிலைபோல அகன்று உயர்ந்து ஆழ்ந்திருத்தற்கு முறையே நிலத்தையும், விண்ணையுங், கடலையும் உவமைகளாகக் கண்டது பாராட்டத்தக்கதே. இம் மூன்று தன்மைகளையும் இறைவனுக் குரியனவாக ஆளுடைய அடிகள் தம் அநுபவ முறையிற் கண்டு கூறிய

"..............வேதங்கள்,
ஐயாவென வோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே

என்னும் திருவாசகப் பகுதி ஈண்டு நினைந்து இன்புறத் தக்கது. இங்கே நுண்மை ஒன்று மிகுதியாகக் கூறப் பட்டுள்ளது. அதற்குக் காரணம் அணுவினும் அணுவாய் நிற்கும் இறைவனிலக்கணம் இந் நட்புக் குணத்திற்குப் பொருந்தாது என்பதே.

## 3. தேற்று முறை

ஒருவர்க்கு ஆற்றொணுத் துயரம் நேர்ந்தவிடத்துத் தேற்றப் புகுவார், துயர முற்றூர் உள்ளத்துட் பதியுமாறு ஆறுதல் மொழி கூறவேண்டும். ஆங்ஙனங் கூறப் படு மொழியும் உண்மையாக இருப்பின் நலமாம். இந்நிலையில் தலைமகனுடைய பிரிவு கருதி வேறுபட்ட தலை

மகளுக்குத் தோழி ஆறுதல் கூறுமுகமாக ஓர் இனிய பாடல் இங்கே காணப்படுகின்றது. அது :

"வினையே ஆடவர்க் குயிரே வாணுதல்
மனையுறை மகளிர்க் காடவ ருயிரென
நமக்குரைத் தோருந் தாமே
அழாஅல் தோழி அழுங்குவர் செலவே"

என்பதாம். ஓரமையம் பொருளீட்டக் கருதிய தலைமகன் அச் செய்தியை வெளிப்படையாகக் கூற அஞ்சிக் குறிப்பிற் புலப்படுத்த நினைந்தான். உண்மைக் காதலன் எக் காரணத்தை முன்னிட்டேனும் தன் உயிரனைய காதலியைப் பிரியநேரின் அச் செய்தியை வெளிப்படக் கூறினால், அவள் ஆற்றொணாத்துயர மெய்துவா ளென் றெண்ணி முதலில் ஒருவாறாகத் தன் எண்ணத்தை அவள் அறிந்து கொள்ளுமாறு குறிப்பிற் புலப்படுத்தலும், பின்னர் விரைந்து திரும்புவேன் என்று கூறிப் பிரிவை வெளிப் படுத்தலுஞ் செய்வன். இதனை,

"முனிவரும் மன்னரும் முன்னுவ பொன்னால் முடியும்"

என்று பொதுவாக நீதி கூறுவான் போன்று பேசத் தொடங்கியதும் தலைவி பிரிவுக் குறிப்புணர்ந்து அழத் தொடங்கினாள் என்று கூறிய திருக்கோவைப் பாடலும், அதன்பின் ஒருவாறாகத் தேற்றி யான் பிரிந்து விரைவில் வருவேன் என்றானாக, அதுகேட்ட தோழி, 'பிரிந்துபோத லில்லையாயின் அதனை எனக்குச் சொல்; அங்ஙன மின்றிப் பிரிந்து சென்று விரைந்து வருதலைச் சொல்லை யாயின் அதனை அப்பொழுது உயிர் வாழ்வார்க்குச் சொல்' என்னுங் கருத்துத் தோன்றச்

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை"

என்னுந் திருக்குறளும் புலப்படுத்துவனவாம். இத்திருக் குறட் கூற்றுத் தோழியதாயினும் வேறுபாடின்மை பற்றித் தலைவியதாகக் கொள்ளுதலும் பொருந்தும். இம் முறையில் இங்கே தன் பிரிவைக் குறிப்பிற் புலப் படுத்த எண்ணிய தலைவன் பொதுவாக 'வினையே ஆடவர்க் குயிர்' என்றான். இந் நீதி மிக உயர்ந்தது. தொழின் முயற்சி யின்றி மக்கள் வாழ்க்கை நடைபெறுதல் அரிதாகலின், அஃது ஆடவர்க் குயிராகு மென்பது உண்மையே.

இவ் வுயர்ந்த குறிக்கோளைப் பொதுநீதியாகத் தலைவன் கூறிய அளவில் அவன் பிரியக் கருதுகின்ருன் என்பதைக் குறிப்பான் அறிந்த தலைமகள் துயரமிக்கு வேறுபட்டாளாக, அஃது உணர்ந்த தோழி அவளை நோக்கி, ‘ஆடவர்க்கு வினை உயிர் என்று கூறிய தலைவரே முன்னொரு முறை மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிரென்று கூறியுமுள்ளார்; கற்பரசியாகிய நினக்கு உயிர் அவராக, நின்னை விட்டு எங்ஙனம் பிரிந்துறைவர்? அவர் கொள்கைப்படி எவ்வாற்ருனும் பிரிவாரல்லர்; வருந்தல் வேண்டா; ஆறுதலடைக’ என்று தேற்றுவாளாயினள். இங்ஙனந் தேற்றும் அறிவாற்றல் உடையவளாகத் தோழியி னுயர்வைப் புலப்படுத்திய கவியி னுட்கோள் வியத்தற்குரியது.

## 4. உள்ளுறை

இனி அகப்பொருட் பகுதியிற் பேசு மக்கள், கருத்தைக் கருப்பொருள் வருணனையில் உள்ளுறை பொருளாக அமைத்துக் குறிப்பிற் புலப்படுமாறு வலியுறுத்தலைப் பலவிடத்துங் காணலாம். இவ்வழகு தமிழ்மொழிக்கே சிறந்ததென்னலாம். செம்பொருளினுங் குறிப்புப் பொருள்களே அறிவுடையார்க்கு இன்பஞ் செய்வனவாம். தமிழ் மொழியிலுள்ள சங்கத்துச் சான்ருேர் பாடல்க ளெல்லாம் பெரும் பாலுங் குறிப்புப் பொருள்களை உடையனவாகவே காணப்படுவன. இதற்கு எடுத்துக் காட்டாக ஒன்று காட்டுவேன். தலைவியின் இயைபு கருதி நள்ளிரவில் தலைமகன் வருதலை யறிந்த தோழி வழியில் உறும் இடையூறுகளால் தலைவற்குத் தீங்கு நேருங்கொலோ என்றஞ்சி இரவில் வருதலை விலக்க முற்பட்டுக் கூறுமுகமாக ஒருபாடல் உள்ளுறை நயந்தோன்ற உள்ளது. அது :—

“ கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமரு மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
யோங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
சாரல் நாட நடுநாள்
வாரல் வாழியோ வருந்துதும் யாமே ” என்பதாம்.

இதன்கண், தலைமகனது குறிஞ்சி நிலத்து வருணனையாக ‘ ஆண் குரங்கு இறந்ததாக அதன் பிரிவில்

கைம்மைத் துன்பத்தை ஆற்றாத அதன் பெண் குரங்கு தன் இளங்குட்டியைச் சுற்றத்திடைச் சேர்த்துவிட்டு, உயர்ந்த மலையினின்றும் வீழ்ந்து உயிரை மாய்த்துக் கொள்ளும்' என்னுஞ் செய்தி கூறப்பட்டுள்ளது. இதனால், நின் நிலத்துள்ள விலங்கும் பிரிவாற்றாது இறந்துபடுதலை அறிகின்றாய்; ஆதலின், நினக்கு இடையூறு நேருமேல் தலைவி உயிர்வாழ்தலை விரும்பமாட்டாள் என்பது அறிவிக்க வேண்டிய தொன்றன்று என்று தோழி தலைமகனுக்குச் சொல்லக் கருதிய செய்தி குறிப்பிற் புலப்படுதலை யறியலாம்.

## 5. மக்கள் மனநிலை

இனிப் பழங்காலத்துத் தமிழ் மக்கள் மனநிலைகளை யறிதற்குச் சங்கநூல்களே சிறந்த கருவிகளாகும். ஒருவனும் ஒருத்தியுந் தம்முட்கொண்ட காதல் எத்தகைய இடையூற்றானும் பிறழ்ச்சி எய்துவதன்று. காதல் வயத்தான் ஒன்றுகூடுவார் தம் மணத்திற்குச் சான்றாக வேறு பொருள்களை எதிர்பார்ப்பதில்லை. அவரவர் உள்ளங்களே சான்றாவனவாம். களவொழுக்கத்து நெடுங்காலம் பயின்றுகற்பு முறையில் மணஞ் செய்துகொள்ளாதிருந்த தலைவனியல்பைக் குறித்துத் தலைமகள் தோழியை நோக்கி, 'தோழீ! தலைவன் என்னைக் களவில் மணந்த காலத்தில் சான்றாவார் வேறொருவரு மிலர்; தலைவர் ஒருவரே இருந்தனர்; அவரே தாம் கூறிய சூளுறவினின்றுந் தப்பியொழுகுவாராயின், யாஞ் செய்யத்தக்கது யாதுளது? அவ்விடத்து அவ்வமயம் ஒரு நாரை மாத்திரம் இருந்தது; அதுவும் ஓடும் நீரில் தா னுண்ணும்பொருட்டு ஆரல் மீனின் வரவை எதிர்பார்த்து நின்றதாகலின், எம் நிகழ்ச்சியைக் கண்ணுற்றிராது; 'காணாத தொன்றைப்பற்றிச் சான்றாதற்குந் தமிழ் நிலத்துப் புள்ளும் ஒருப்படாது; வாய்மைநெறி யொழுகும் இயல்பின தாகலின்' என்று தலைவி கூறினளாம். இவ் வரிய கருத்தைப் புலப்படுத்தும் பாடல்:—

"யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீ ராரல் பார்க்கும்
குருகு முண்டுதான் மணந்த ஞான்றே" என்பதாம்.

இங்கே தலைமகள், சான்றாதற்குத் தகுதியில்லாத அஃறிணைப் பொருளாகிய நாரையைக் குறித்துக் கூறியது எங்ஙனம் பொருந்தும்? எனின்; கூறுவேன், தமிழ் நிலத்துப் பெண்மக்களுடைய கற்பின் பெருமை குறித்து அவர் மண நிகழ்ச்சிக்கு அஃறிணைப் பொருள்களுள்ளும் நிலையியற் பொருள்களாகிய மர முதலியன சான்றாகிய நிகழ்ச்சி சிலப்பதிகாரத்திற் கண்ணகி யென்னுங் கற்பரசி வாயிலாக வெளிப்பட்ட,

" வன்னி மரமும் மடைப்பளியுஞ் சான்றாக,
முன்னிறுத்திக் காட்டிய மொய்குழலாள்"

என்னுஞ் செய்தியா லறிகின்றோம். மரமாகிய நிலையியற் பொருளும், மடைப்பள்ளியாகிய செயற்கைப் பொருளுந் தமிழ் மகளிர் கற்பிற்குச் சான்றாகுமாயின், இயங்கியற் பொருளாகிய நாரையைக் குறித்தது பொருந்தா தென்று எங்ஙனம் எண்ணலாம்?

## 6. காதலின் இயல்பு

உண்மைக் காதல் வயப்பட்ட மகளிர், தம் காதலர் எக்காரணத்தாலாவது தம்மொடு அளவளாவுதலில் தவிர்ந் தொழுகுவாராயினும், அக் கணவன்மாரிடத்துள்ள உண்மை அன்பிற் சிறிதுங் குறைபாடிலராய் ஒழுகும் இயல்பினர் என்பதை இந்நூலிற் பரக்கக் காணலாம். இச் செய்திக்கு எடுத்துக் காட்டாக, " குறுந்தாட் கூதளி " என்னுந் தலைப்புடைய பாடலும், " தச்சன் செய்த சிறுமா வையம் " என்னுந் தலைப்புடைய பாடலும் குறிப்பிடத்தக்கன. முறையே அப் பாடற் கருத்துக்கள் வருமாறு:—' ஒருயர்ந்த மலையில் பெரிய தேனடையைக் கண்ட ஒரு முடவன் அதனைப் பெறுதற் கியலாமையால் தன் உள்ளங்கையைச் சிறிய கொள்கலமாகக் குவித்து அம் மலையின் கீழிருந்தபடியே அத் தேனிறாலைப் பல முறைசுட்டித் தன் கையையே நாவினாற் றுழவி இன்புறுதல்போலக், காதலர் நல்கார் நயவாராயினும் யான் அவரைப் பலமுறை காண்டலும் என் உள்ளத்திற் கினிதாகும்' என்பதும், ' சிறு குழந்தைகள் தாம் உருட்டி விளையாடுஞ் சிறுவண்டியை ஏறிச் செலுத்தி இன்புறு ராயினும் அவ் வண்டியை இழுத்து நடத்தி அவ் வின்பத்தை அடைதல்போல என் கணவரை

மெய்யுற்று இன்பம் அடையப் பெறேனாயினும் அவரது நட்பை மேன்மேலும் பெருக வளர்த்து இன்பம் அடைவேன்' என்பதும் ஆம். இங்கே குறிக்கப்பட்ட காதற் பண்புகள் எத்துணைச் சிறப்புடையனவாகக் காணப்படுகின்றன என்பது உணர்ந்தின்புறத்தக்கது.

அறிஞர்களே!

இதுகாறுஞ் சங்கத்துச் சான்றோர்களின் இலக்கியப் பெருமையும், அவற்றுள் குறுந்தொகை என்னும் அழகிய நூலின் மாண்பும் ஒருவாறு புலப்படுத்தப்பட்டன. இலக்கியச் சுவையே தம் வாழ்க்கை நலமெனக் கொண்டு துய்த்தின் புறும் உணர்வுடைப் பெருமக்கட்கு, இன்ப ஊற்றாக வுள்ள இன்னோரன்ன நூலாராய்ச்சிகள் தேவ ரமிழ்தி னுஞ் சிறந்த சுவை பயப்பனவாம். இதுவரை பொறு மையோ டிருந்து செவி சாய்த்த நும் எல்லோர்க்கும் என் வணக்கத்தை உரிமைப்படுத்துகின்றேன். இம்மட்டில் யான் தரும் சிறு சுவை விருந்தை நிறுத்தி, ஏனை அறிஞர்கள் இந் நூன்முகமாகத் திரட்டி வைத்திருக்கும் பெரு விருந்தை நீவிர் துய்க்குமாறு நும்மையும், வரை யாது வழங்குமாறு என் நண்பர்களாகிய சொற்பொழி வாளர்களையும் வேண்டுகின்றேன்.

தமிழ்மொழி நீடு வாழ்க.

23–11–40

மு. கதிரேசன்



வித்துவான்
இராஜ. சிவ. சாம்பசிவ சர்மா.



வித்துவான்
ம. இராசமாணிக்கம்.



வித்துவான்
பா. சொக்கலிங்கம்.



பண்டிதர்
லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்.



வித்துவான்
ஔவை சு. துரைசாமி பிள்ளை.

# குறுந்தொகைச் சொற்பொழிவுகள்



## க. நெய்தல்

[வித்துவான் இராச. சிவ. சாம்பசிவ சர்மா.]

'ஆனைமுக னறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞானகுரு வாணியையு ளுடு.'

I

சங்கம் மருவிய நூற்களைப் பாட்டு, தொகை, கீழ்க்கணக்கு என முத்திறப்பட வகுத்துள்ளனர். அவை பத்துப் பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என்பனவாம். அவற்றுள் எட்டுத் தொகையை எண்பெருந் தொகை எனவுங் கூறுவர்.

எட்டுத்தொகை என்பது நற்றிணை, குறுந்தொகை, ஐங் குறுநூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் நூற்களைக் கொண்டன. இவை தொகை எனப்படுதலாலேயே பல்வேறு காலத்திலிருந்த புலவர்கள் பாடிய செய்யுட்களைப் பின்னொரு காலத்தில் ஒருவர் ஒருங்கு திரட்டித் தொகுத்திருத்தல் வேண்டும் என்பது பெறுதும். எட்டுத்தொகை நூல்களைக் குறிப் பதாய்,

"நற்றிணை நல்ல குறுந்தொகை யைங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை"

என்னும் பழைய வெண்பா ஒன்றுள்ளது.

இவற்றுள் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, கலித்தொகை, அகநானூறு என்பன அகப்பொருள்பற்றி

யனவாகவும், பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு என்பன புறப்பொருள் பற்றியனவாகவும் அமைந்துள்ளன.

அறம், பொருள், இன்பம், வீடு எனும் உறுதிப் பொருள்கள் நான்கனுள் வீடு என்பது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின், துறவறமாகிய காரணவகையால் கூறப்படுவதல்லது இலக்கணவகை யால் கூறப்படாமையின் நூல்களில் கூறப்படுவன ஏனைய மூன்றுமேயாம் என்க. அவற்றுள், அறமும் பொருளும் புறப் பொருளாகவும் இன்பம் அகப் பொருளாகவும் வகைப்படுத்திக் கூறுவது தமிழ் நூனெறி. அகம், புறம் என்பவற்றின் இயல்பு தொல்காப்பியத்தில் இனிது கூறப்பட்டுள்ளது.

குறுந்தொகை என்னும் நூல் நான்கடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையும் வாய்ந்த ஆசிரியப் பாவால் கடவுள் வாழ்த்துளப்பட நானூற்றிரண்டு செய்யுட்களைக் கொண்டது. இத்தொகை முடித்தான் பூரிக்கோ என்பதும், இத்தொகை பாடிய கவிகள் திப்புத்தோளார் முதல் அம்மூவனார் இறுதியாக இருநூற்றைவர் என்பதும், நூலினிறுதியில் காணும் குறிப்பால் அறியலாகும்.

இந்நூற்குக் கடவுள் வாழ்த்துப் பாடியவர் பாரதம் பாடிய பெருந்தேவனாராவர். இவர் நற்றிணை, ஐங்குறுநூறு, அகநானூறு, புறநானூறு என்பவற்றிற்கும் கடவுள் வாழ்த்துப் பாடியுள்ளார்.

நற்றிணை என்னும் நூல் ஒன்பதடிச் சிற்றெல்லையும் பன்னிரண்டடிப் பேரெல்லையும் வாய்ந்த ஆசிரியப் பாவால் கடவுள் வாழ்த்துளப்பட நானூற்றொரு செய்யுட்களைக் கொண்டது.

அகநானூறு என்னும் நூல் பதின்மூன்றடிச் சிற்றெல்லையும் முப்பத்தோரடிப் பேரெல்லையும் வாய்ந்த ஆசிரியப் பாவால் கடவுள்வாழ்த் துளப்பட நானூற்றொரு செய்யுட்களைக் கொண்டது.

இவற்றை உற்று நோக்குமிடத்து இத்தொகை தொகுத்த ஞான்று அகப்பொருட் செய்யுட்களாகிய ஆசிரியப்பாக்களை யெல்லாந் திரட்டிப் பின் மேற்கூறிய அடி வரையறைப்படி நெடுந்தொகை (அகநானூறு),

நற்றிணை, குறுந்தொகை எனப் பெயர் தந்து முத்திறப் படுத்தி மூந்நூல்களாக்கினர் என்பது புலனும்.

அகநானூற்றினைத் தொகுத்தான் உப்பூரி குடிகிழான் மகனுவான் உருத்திரசன்மன் என்பான்; தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி.

நற்றிணையைத் தொகுப்பித்தான் பன்னாடு தந்த பாண்டியன் மாறன் வழுதி; தொகுத்தான் யாவன் என்று தெரியவில்லை.

குறுந்தொகையைத் தொகுத்தான் பூரிக்கோ; தொகுப்பித்தான் பெயர் தெரியவில்லை.

ஐங்குறுநூற்றினைத் தொகுத்தார் கூடலூர் கிழார்; தொகுப்பித்தார் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேர லிரும் பொறையார்.

இவற்றுள், குறுந்தொகையே முதலில் தொகுக்கப் பெற்றதா யிருத்தல் வேண்டும் என்று ஆராய்ச்சியால் புலனுகின்றது என்பர் சிலர். குறுந்தொகையுள் கூறப் பட்டுள்ள சில உவமைகளால் பெயர் பெற்ற ஆசிரியர்கள் சிலர், அப்பெயராலேயே பிற தொகை நூல்களிலும் குறிக்கப்படுகின்றனர் என்னும் இதுவே, அதற்குப் போதிய சான்றுகு மென்பர். இதுவே தமிழ்ச் சான்றோர்களின் மரபுமாகு மென்று கோடற்கும் இயைவதாம் என்பர். குறுந்தொகைக்குப் பின்னரே நற்றிணை, அகநானூறு முதலானவை தொகுக்கப் பெற்றிருக்க வேண்டும் என்று அறியப்படுமாயின், "நற்றிணை, நல்ல குறுந்தொகை" என்னும் பாட்டின் முதலில் குறுந்தொகையைக் கூருது நற்றிணையைக் கூறியதன் காரணம் என்னையோ என்பது விளங்கவில்லை. 'நற்றிணை நல்ல குறுந்தொகை' என்னும் இச்செய்யுள் பழைமையானது என்பதொன்றன்றி இதனைப் பாடியவர் யார், எக்காலத்தவர், என்பவற்றை அறிய முடியவில்லை. இச்செய்யுள் எட்டுத்தொகை நூல்களிவை என்பதை விளக்குவதன்றிப் பிறிதின்று.

மற்றும், இச் செய்யுளில் அகப்பொருளுக் குரிய நூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு என்பவற்றை ஒருங்கு தொகுத்துக் கூறியும், புறப்பொருளுக்குரிய நூல்களான பதிற்றுப்பத்து, பரிபாடல், புறநானூறு என்ப

வற்றை ஒருங்கு தொகுத்துக் கூறியும் இருத்தற்கு மாருக, விரவிக் கூறியிருத்தலால் இச்செய்யுள் எட்டுத் தொகை நூல்களை அறிவதற்கெனப் பிற்காலத்தவரால் செய்யப்பட்டதாதல் வேண்டும் என்பது உணரற்பாலது. நூல்கள் தொகுக்கப்பெற்ற காலத்ததாயின், ஐங்குறு நூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அக நானூறு, புறநானூறு என்பவற்றின் உரையாசிரியர் களில் எவரேனும் ஒருவர் இச்செய்யுளைச் சுட்டாது விடுவரோ? விடாரன்றே.

இனி, அகப்பொருளுக்குரிய நூல்களாவன கலித் தொகை, அகநானூறு, ஐங்குறுநூறு, என்பவற்றை ஆழ்ந்து நோக்குமிடத்துச் சில செய்திகள் காணப் படுகின்றன. அவை நற்றிணை, குறுந்தொகை எனு மிரு நூல்களுக்கும் கிடைத்திருப்பனவாகத் தெரியவில்லை. கலித்தொகையைப் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் எனப் பிரித்திருப்பதையும் ஒவ்வொரு திணையை யும் இன்னின்னர் பாடினர் என்பதையும், திணைகளி லுள்ள செய்யுட்டொகையும்,

1. " பெருங்கடுங்கோன் பாலை கபிலன் குறிஞ்சி
மருதனிள நாகன் மருதம்—அருஞ்சோழன்
நல்லுத் திரன் முல்லை நல்லந் துவன்நெய்தல்
கல்விவலார் கண்ட கலி."

2. " போக்கெல்லாம் பாலை புணர்தல் நறுங்குறிஞ்சி
ஆக்கமளி யூடல் அணிமருதம்—நோக்கொன்றி
இல்லிருத்தல் முல்லை இரங்கியபோக் கோர்நெய்தல்
புல்லுங் கலிமுறை கோப்பு."

3. " இறைவாழ்த் தொன்றே ழைந்துபாலை நாலேழொன்
றிறைகுறிஞ்சி யின்மருத மேழைந்து—துறைமுல்லை
யீரெட்டொன் றுநெய்த லெண்ணுன்கொன் றைங்கலியாச்
சேரெண்ணே ழைவைம் பதே."

என வரும் பாடல்களால் அறியலாம்.

ஐங்குறு நூற்றைப்பற்றி,

" மருதமோ ரம்போகி நெய்தலம் மூவன்
கருதுங் குறிஞ்சி கபிலன்—கருதிய

பாலையோத லாந்தை பனிமுல்லை பேயனே
நூலையோ தைங்குறு நூறு "

என்னும் வெண்பா இனிது விளக்குகின்றது. மேற்கூறிய இரண்டு நூல்களிலும் பாலை, குறிஞ்சி, மருதம், முல்லை, நெய்தல் எனவும், மருதம், நெய்தல், குறிஞ்சி, பாலை, முல்லை எனவும் முறையே திணைகளைக் கோத்துள்ள முறை குறித்திருப்பதும் உணரத்தக்கதே.

அகநானூற்றின் பாடல்களைப் பாடிய புலவர்கள் பல்லோர் ஆதலின் அவர்கள் பெயர்களைக் குறிக்கும் பாட்டொன்று மில்லையேனும், திணைகளை எவ்வாறு அமைத்துப் பாடியுள்ளனர் என்றறிதற்குப் பழைய செய்யுட்கள் சில வுள. அவை இத்தனையாவது எண்ணுள்ள பாடல் இத்திணைக்குரிய செய்யுளாகும் என்று காட்டுகின்றன. அதனால் அக் கோப்பிலும் ஓர் முறை பயின்றுள்ளது என்று உணரலாம். அவையாவன :—

1. " வியமெல்லாம் வெண்டே ரியக்கம் கயமலர்ந்த
தாமரையா றுகத் தகைபெறீஇக் காமர்
நறுமுல்லை நான்காக நாட்டி வெறிமாண்ட
எட்டு மிரண்டுங் குறிஞ்சியாகக் குட்டத்
திவர்திரை பத்தா இயற்பட யாத்தான்
தொகையில் நெடியதனைத் தோலாச் செவியான்
வகையி னெடியதனை வைப்பு."

2. " ஒன்றுமூன் றைந்தேழொன் பான்பாலை யோதாது
நின்றவற்றில் நான்கு நெறிமுல்லை—அன்றியே
ஆறு மருதம் அணிநெய்தல் ஐயிரண்டு
கூறு தலைவகுறிஞ்சிக் கூற்று."

3. " பாலை வியமெல்லாம் பத்தாம் பனிநெய்தல்
நாலு நளிமுல்லை நாடுங்கால்—மேலையோர்
தேறு மிரண்டெட் டிவைகுறிஞ்சி செந்தமிழின்
ஆறு மருத மகம்."

பரிபாடல் என்னும் தொகைநூலைக் குறித்து,

" திருமாற்கிருநான்கு செவ்வேட்கு முப்பத்
தொருபாட்டுக் காடுகாட் கொன்று—மருவினிய

**வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப
செய்யபரி பாடற் றிறம்''**

என்னும் ஒரு வெண்பா அதனமைப்பு முறையை விளக்கிச் செய்யுட்டொகையையும் சுட்டுகின்றது.

பதிற்றுப்பத்தில் ஒவ்வொரு பத்தி னிற்றுப் பதிகத்தால் பாடியவரையும் பாடப்பட்டவரையும் அறியலாகும். நற்றிணை, குறுந்தொகை, புறநானூறு என்ற மூன்று நூற்குமே அவற்றைப்பற்றிக் கூறும் பழம் பாடல் ஒன்றுமில்லை போலும்! நிற்க.

அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்னும் முத்தொகை நூல்களும் ஒரு காலத்திலேயே தொகுக்கப் பெற்றிருக்க வேண்டுமென்பது அவற்றின் அடியளவு வைத்துத் தொகுத்துள்ள முறையால் ஊகித் தறியக் கூடும். அகத்திணைக் குரிய இம்மூன்று தொகைநூல்களும் ஒரே காலத்தில் தொகுக்கப் பெற்றதாயின் திணை குறித்து ஒருவழியாக மூன்றையும் தொகுத்திருக்கலாமன்றோ? அகநானூற்றில் 1, 3, 5, 7, 9 என்னும் எண் பெற்றன பாலையாகவும், 2, 8 என்னும் எண் பெற்றன குறிஞ்சியாகவும், 4 எனும் எண் பெற்றது முல்லையாகவும், 6 எனும் எண் பெற்றது மருத மாகவும், 10 எனும் எண் பெற்றது நெய்தலாகவும் அமைந்திருத்தலே போல, நற்றிணை, குறுந்தொகை என்னும் நூல்களில் அம்முறை அமையவில்லை. நற்றிணையிலும், குறுந்தொகையிலும் திணைகள் ஒருவகையாக வமையாது பலவாறு அமைந்துள்ளனவாக இப்பொழுது கிடைக்கும் பதிப்புக்களால் அறிகிறோம்.

இதனைச் சிறிது ஆழ்ந்து நோக்குமிடத்து, நற்றிணை, குறுந்தொகை என்னும் இரு தொகைநூல்களும் திணை குறிக்கப்படாமலே, துறையைக் கூறும் கருத்துடன் அமைந்தன வாதல் வேண்டுமென்று தோற்றுகின்றது. ஏட்டுப் பிரதிகளிலும், கடிதப் பிரதிகளிலும் திணை குறிக்கப்படாமலே அவை காணப்படுகின்றன. சென்னைப் பழந் தமிழ் நூல் நிலையப் பிரதியிலும் திணை குறிக்கப் படவில்லை. எனவே, திணைகளைக் குறித்து நற்றிணையையும், குறுந்தொகையையும் வெளியிட்டார் முறையே பின்னத்தூர் திரு. அ. நாராயணசாமி அய்யர் அவர்களும், திருக்கண்ணபுரத்துத் திரு மாளிகைச் சௌரிப்பெருமாள்

அரங்கன் என்பவருமே யாவர். மகாமகோபாத்தியாய, தாக்ஷிணாத்ய கலாநிதி, டாக்டர். உ. வே. சாமிநாதய்யர் அவர்கள் உரையெழுதி வெளியிட்டுள்ள குறுந்தொகையில் திணை குறிக்கப்படவில்லை. குறுந்தொகையை உரையோடு வெளியிட்ட திரு. இராமரத்தின மய்யரும், மூலம் மட்டும் வெளியிட்ட வித்துவான். சோ. அருணசல தேசிகரும், சங்க இலக்கியத்தை வெளியிட்ட சைவ சித்தாந்த சமாசமும், சௌரிப் பெருமாளரங்கனரால் வெளியிடப்பட்ட திணைகுறித்த பிரதிக்கொப்ப வெளியிட்டனராதல் வேண்டுமென்று கருதற் கிடனுண்டு. எனவே, அகநானூற்றில் எண்கள் குறித்து 'இவை நெய்தல்,' 'இவை குறிஞ்சி' என்று திணைகளைக் குறிப்பிட்டாற்போல ஏன் நற்றிணையிலும் குறுந்தொகையிலும் குறிப்பிடவில்லை என்ற வினு எழுகின்றது. அறிஞர் சிலர் கூறுமாறு குறுந்தொகையே முதன் முதலாகத் தொகுக்கப்பட்டதேல், அகநானூற்றில் திணைகளை எண்முறைக் கேற்ப அமைத்தாற் போல் குறுந்தொகைக்கு அம்முறை கையாளப்படாமைக்குத் தக்கதொரு காரண மிருத்தல்வேண்டு மன்றே ?

அகநானூற்றைத் தொகுத்தான் உப்பூரிகுடி கிழான் மகன் உருத்திரசன்மன்; தொகுப்பித்தான் பாண்டியன் உக்கிரப் பெருவழுதி. உருத்திரசன்மனே நக்கீரனர் இயற்றிய களவியலுரையைக் கேட்க, இறைவனல் சுட்டப்பட்டுக் காரணிகனய் அமர்ந்தோன். நக்கீரரது செய்யுட்கள் அகநானூறு, நற்றிணை, குறுந்தொகை என்னும் மூன்று நூற்களிலும் உள்ளன. உருத்திரசன்மன் நக்கீரரது களவியலுரையைக் கேட்டானெனில் நக்கீரரும் உருத்திரசன்மனும் ஒரு காலத்தவராதல் வேண்டும். உருத்திரசன்மனைக்கொண்டு பாண்டியன் உக்கிரப்பெருவழுதி அகநானூற்றினைத் தொகுப்பித்தான் எனில், மூவரும் ஒரு காலத்தவராதல், கூறுமலே அமையுமன்றே? மற்றும், சொற்குற்றம் காணது பொருட்குற்றம் காணப்பட்டதும் இறையனரால் ஏழை யந்தணனுக்காக இயற்றித் தரப்பட்டதுமான 'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் அருஞ்செய்யுள் குறுந்தொகையுள் இரண்டாவது செய்யுளாக அமைந்திருத்தலும் இங்கு அறியத் தக்கது. இதனல் நக்கீரர் காலத்தின் இறுதியிலோ அல்லது அவர்க்குப் பின்போ, குறுந்தொகை என்னும் தொகைநூலும் பிறவும் தோன்றியதெனல் பொருந்தும்.

பேராலவாயர் என்று பிறநூல்களிலும், இறையனுர் என்று இந்நூலிலும் வந்துள்ளன ஒருவரைக் குறிப்பனவோ என்பது ஆராயத்தக்கது. நக்கீரர் காலம் கி. பி. இரண்டாம் நூற்ருண்டு என்பர் ஆசிரியர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள். அவ்வாருயின் கி. பி. இரண்டாம் நூற்ருண்டின் இறுதியிலோ, மூன்ரும் நூற்ருண்டின் தொடக்கத்திலோ அதன் பின்போ குறுந்தொகை முதலாயின தொகுக்கப்பட்டதாதல் வேண்டும் என்று கொள்ளலாம். நற்றிணையும் குறுந்தொகையும் கலியும் ஐங்குறுநூறும் பரிபாடலும் கி. பி. ஐந்து ஆரும் நூற்ருண்டுகளில் தொகுக்கப்பெற்றனவாகும் என்று திரு. பி. டி. சீனிவாச அய்யங்கார் அவர்கள் கூறுவது இங்கு உணரத்தக்கது. எனில், குறுந்தொகையே முதலில் தொகுக்கப்பட்டது என்பதற்குரிய ஆதாரம் யாதெனவும் ஆராய்தல் அவசியமாகின்றது. ஏனெனில் எல்லாத் தொகைகளும் ஏறக்குறைய ஒரே காலத்தில் தொகுக்கப் பெற்றனவாதலால் என்க.

கலித்தொகையில் கூறப்பட்டுள்ள ஐவரில் பாலே பாடிய பெருங்கடுங்கோ, மருதனிளநாகன், கபிலர் என்பார் மூவரும் பாடிய செய்யுட்கள் குறுந்தொகையி லுள்ளன. சோழன் நல்லுருத்திரன், நல்லந்துவன் (நவ்வந்துவன்) எனும் இருவர் பாடல்கள் இல்லை. குறுந்தொகை 274-ம் செய்யுளைப் பாடியவர் உருத்திரன் என்றுமட்டும் குறிக்கப்பட்டுள்ளது. அவர் சோழன் நல்லுருத்திரனுகலாமோ என்ற ஐயப்பாடும் தோற்றுகிறது. சோழன் நல்லுருத்திரன் பாடியனவாக நற்றிணையிலும் அகநானூற்றிலும் பாடல்கள் இல்லை. மற்றையோர் பாடல்கள் இருநூற்களிலு முள்ளன. எனவே, சோழன், நல்லுருத்திரன் கலித்தொகையில் பாடிய மற்றையோர்க்குக் காலத்தால் பிற்பட்டவனுதல் வேண்டும். அன்றேல், கலித்தொகையில் முல்லைக்கலியும், புறநானூற்றில் 73-ம், செய்யுளையும்மட்டும் பாடியவனுதல் வேண்டும். இவன்பெயரோ, சோழன் நல்லுத்தரன், சோழன் நல்லுருத்திரன், சோழன் நல்லுத்திரன், நல்லுத்திரன், நல்லுருத்திரனுர், உருத்திரன், உருத்திரனுர் எனப் பலபடியாகக் காணப்படுகின்றன. ‘சங்க நூற் புலவர்கள் பெயர் அகராதி’யை வெளியிட்ட சைவ சித்தாந்த மாகா சமாசத்தார் உருத்திரனுர் வேருகவும்,

சோழன் நல்லுத்திரன் வேருகவும், நல்லுத்திரனர் வேருகவும் கொண்டனர் என்று தெரிகிறது. சங்கப் புலவர்களின் பெயர்த்திரிபுகளால் விளையும் இடர்ப்பாடு எடுத்தியம்பவல்ல தொன்றன்று. அவ்விடர்ப்பாடு ஆராய்ச்சிக்கே ஒரு முட்டுக்கட்டையாதல் வருந்தத் தக்கது. எட்டுத்தொகை நூல்கள் யாவும் கி. பி. இரண்டாம் நூற்ருண்டிற்குப் பின் ஆரும் நூற்ருண்டிற் குட்பட்டதான இடைப்பட்ட காலத்தில் தொகுக்கப்பட்டிருத்தல் வேண்டுமெனக் கொள்ளலாம். அதுவே பொருந்துவது மாகும்.

தொகைப்படுத்திய காலம் முதலே நற்றிணை, குறுந்தொகை என்னும் இரண்டிற்கும் அகநானூற்றைப் போல் திணை குறித்தாரல்லர் என்பது முற் கூறினும். அதற்குக் காரணம் இருத்தல் வேண்டும். குறுந்தொகைச் செய்யுட்களில் மயக்கமிருத்தலின் விடுத்தனரோ என்று எண்ணவும் இடமுண்டு. பின்னர்த் திணை குறித்தார்களும் இடர்ப்பாடுற்று வேறுபடுகின்றமையால் இதனை உணரலாம். உதாரணமாக 'கருங்கால் வேம்பின்' என்ற குறுந்தொகை 24-ம் செய்யுள் பாலைத்திணையாகக் குறிக்கப்பட்டுள்ளது. அது முல்லைத்திணையாகலாம் என்று திரு. வெ. வேங்கடராஜுலு ரெட்டியார் அவர்கள் கருதுகிறுர்கள். 'மாக்கழி மணிப்பூ' என்னும் 55-ம் செய்யுளும், 'பூவிடைப் படினும்' என்னும் 57-ம் செய்யுளும் நெய்தல் திணையாகக் குறிக்கப்பட்டுள்ளவற்றைக் குறிஞ்சித்திணையாக திரு. இராமரத்தினமய்யர் அவர்கள் கொண்டனர். 'யாருமில்லை தானே கள்வன்' என்னும் 25-ம் செய்யுளும், 'குணகடற்றிரையது பறைதபு நாரை' என்னும் 128-ம் செய்யுளும்; 'நெருப்பி னன்ன செந்தலை யன்றில்' என்னும் 160-ம் செய்யுளும் குறிஞ்சித்திணைக் குரியனவாகப் பதிப்பிக்கப்பட்டுள்ளவற்றை நெய்தற்றிணைக் குரியனவாகக் கொள்வாரு முண்டு. இவ்வாறே 'எம்மணங்கினவே' என்னும் மருதத்திணைக் குரியதாகக் குறிக்கப்பட்டுள்ள 53-ம் செய்யுளைக் குறிஞ்சித் திணையாக எண்ணவும் கூடும் என்று ஐயுறுதற்கு இடனுண்டு. நெய்தல் எனப் பிற பதிப்புக்களில் குறிக்கப்படும் 51, 57, 81, 109, 145, 172 184, 305, 321, 381 என்னும் எண்ணுள்ளவற்றைக் குறிஞ்சியாகவும் 372-வது குறிஞ்சியை நெய்தலாகவும், நெய்தலான 49, 349,

என்பவற்றை மருதமாகவும், 92, 375 என்பவற்றைப் பாலையாகவும், 197, 200, 386 என்பவற்றை முல்லையாகவும், திரு. இராமரத்தினமய்யர் கொண்டது அறியத்தக்கது. இவற்றால் மயக்கங் கருதியே பண்டைய ஏடுகளில் குறுந்தொகைக்குத் திணைகுறியாது விட்டனரோ என்று கருதற்கு இடனுண்டு. திரு. ஐயரவர்களும் இம் மயக்கம் கருதியோ, பண்டையோர் திணை குறிக்கவில்லையே என்று நினைத்தோ, தம் பதிப்பில் திணை குறிக்காமல் விட்டனர் போலும்! இவற்றாலும், பழைய ஏடுகளில் திணை குறிக்கப்படாமையாலும், ஏடெழுதுவோரால் திணை குறியாமல் விட்டனர் என்று கருதுதலினும் தொகுத்தோராலேயே திணை குறிக்கப்படவில்லை என்று கொள்வதே பொருந்துமாறு அறிக.

குறுந்தொகைக்கு உரை எழுதியோர் பேராசிரியரும், நச்சினார்க்கினியரும் என்றும், அவருள் பேராசிரியர் இருபது செய்யுட்களுக்குமட்டும் உரையெழுதாது விட்டனர் என்றும், எஞ்சிய அவ்விருபது செய்யுட்களுக்கும் நச்சினார்க்கினியர் உரையெழுதினர் என்றும்,

‘நல்லறி வுடைய தொல்பே ராசான்
கல்வியுங் காட்சியுங் காசினி யறியப்
பொருடெரி குறுந்தொகை யிருபது பாட்டிற்
கிதுபொரு ளென்றவ னெழுதா தொழிய
இதுபொரு ளென்றதற் கேற்ப உரைத்தும்’

என்பதும்,

“பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியும்
ஆரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்கும்—சாரத்
திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
விருத்திநச்சி னார்க்கினிய மே”

என்பதும் ஆகிய இரு உரைச் சிறப்புப் பாயிரங்கள் கூறுகின்றன. இவ் விரு உரைகளும் கிடைக்கவில்லை. இவற்றின் உண்மையும் ஆராய்தற்பாலதே. அதற்கு வேண்டுவ கூறிப் பின்னர் ஆராய்வோம்.

குறுந்தொகை என்னும் நூல் கிடைக்கப்பெற்றுப் பதிப்பிக்கப்பட்டிருக்கு மளவில் அறிதற்குரியன சில வுள. எல்லாப் பதிப்புக்களிலும்—ஏடுகளிலும்—கடவுள்

வாழ்த்துளப்பட 402 செய்யுட்களை யுடையதாகக் காணப்படுகின்றது இந்நூல். நற்றிணையும் அகநானூறும் கடவுள் வாழ்த்து நீங்கலாக நானூறு செய்யுட்களை யுடையன. ஒரு வகையாகவும் ஏறக்குறைய ஒரே காலத்திலும் திரட்டித் தொகுக்கப்பெற்றதாகிய தொகை நூல்கள் மூன்றில், இரண்டு நூல்களில் நானூறு செய்யுட்களிருந்து, ஒன்றில் மட்டும் நானூற்றொரு செய்யுட்களிருப்பது சிறிது கவனித்தற்குரியதே. ஒருகால் ஏடுதேடி எழுதியோர் பிழையாகவுமிருக்கலாம். இதனை ஆராய்தல் குறுந்தொகை என்னும் நூல் செம்மைபெற அமைதற்கு ஏதுவு மாகலாம்.

அவ்வாறு கிடைக்கப்பெற்றுள்ள 402 செய்யுட்களையும் நுணுகிப் பார்ப்போமாயின் 307, 391 என்னும் எண்ணுள்ள இரண்டு செய்யுட்களும் ஒன்பதடிகள் பெற்றுள்ளன. குறுந்தொகைச் செய்யுட்கள் நான்கடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையு முடையன என்பதை முன்பே கூறினோம். அவ்விரண்டு செய்யுட்களுள் 391-ம் செய்யுள் எட்டடியாக்கியும் ஒன்பதடியாக்கியும் இருவகையாக எழுதப்பட்டுள்ளது. திரு. ஐயரவர்கள் ஒன்பதடியாகப் பதிப்பித்துள்ளனர். அன்னார், அச்செய்யுளை எட்டடியாகவே கொண்டு 307-ம் செய்யுளை நீக்கிவிடின் குறுந்தொகையும் நானூறு செய்யுட்களையே யுடையதாகு மென்று கூறுதலும் அறியத்தக்கது. அதனால் குறுந்தொகையில் நீக்கத்தக்கனவும் சேர்க்கத்தக்கனவும் உண்டுபோலும்!

'இமையவில் வாங்கிய வீர்ஞ்சடை யந்தணன்' என்னுங் குறிஞ்சிக்கலியின் இரண்டாவது பாட்டிற்கு உரையெழுதுமிடத்து, நச்சினார்க்கினியர் வினையுவமப் போலியை விளக்குகையில், 'நன்றே என்னும் குறுந்தொகையும் அது' என்று குறித்துள்ளார்.

'நன்றே' என்னும் முதலுள்ள செய்யுள் குறுந்தொகைப் பதிப்புக்களுள் காணப்படவில்லை. நச்சினார்க்கினியர் " இது வினையுவமப்போலி. இது.

" உள்ளுறை யுவம மேனை யுவமமெனத்
தள்ளா தாகுந் திணையுணர் வகையே "

என்னும் (தொல்) அகத்திணையியற் (46) சூத்திரத்தினும்,

809—3

"உடனுறை யுவமஞ் சுட்டுவகை சிறப்பெனக்
கெடலரு மரபி னுள்ளுறை ஐந்தே"

என்னும் (தொல்) பொருளியற் (48) சூத்திரத்தினும், யாம் கூறிய உரையா னுணர்ந்துகொள்க. மேலும், இத்தொகை யுள் ஏனையுவமம் வந்தும், ஏனையுவமம் உள்ளுறை யுவ மத்திற்குச் சிறப்புக் கொடுத்துத் திணையுணர்தலைத் தள்ளாது நிற்கும் பாட்டுக்கட் கெல்லாம் இச்சூத்திரங்களே விதியாகக் கொள்க. 'நன்றே' என்னும் குறுந்தொகையும் அது," எனக் (கலி. குறிஞ்சி-2 உரை) கூறியுள்ளார். அவர் தாம் அவ்விரு சூத்திரங்கட்கு உரை கூறியவிடத்து, 'நன்றே' என்னும் குறுந்தொகைச் செய்யுளை மேற்கோ ளாகக் காட்டினாரில்லை. அந்தோ! பிற்காலத்தில் அச் செய்யுள் கிடைக்கப் பெறுமல் மறைந்துவிடும் என அவர் எங்ஙனம் கணித்தறியக் கூடும்! எனினும், 'நன்றே' எனத் தொடங்கும் செய்யுள் ஒன்று குறுந்தொகையைச் சார்ந்ததென்று அறிகிறோம்.

"இவளே நின்னல திலளே யாயும்
குவளை யுண்கண் இவளல திலளே
யானு மாயிடை யேனே
மாமலை நாட மறவா தீமே"

என்னும் செய்யுள் ஒன்று. குறுந்தொகைச் செய்யுள் என்று பாங்கி யடைகொடுத்தலுக்கு மேற்கோளாகச் சுன்னுகம் அ. குமாரசுவாமிப் பிள்ளையவர்களது நாற்கவிராச நம்பி யியற்றிய அகப்பொருள் விளக்கம் என்னும் நூற்பதிப் பில் காணப்படுகின்றது. குறுந்தொகைப் பதிப்புக்கள் ஒன்றிலும் அச்செய்யுள் காணப்படவில்லை. குறுந் தொகையைச் சார்ந்தனவாகவும் இக்காலப் பதிப்புக்களி லும் ஏட்டுப்பிரதிகளிலும் காணப்படாதனவாகவும் குறுந்தொகைச் செய்யுட்கள் இரண்டுள்ளன என அறிகிறோம்.

இப்பொழுது கிடைத்திருக்கும் குறுந்தொகைச் செய்யுட்கள் 402ல் பத்துச் செய்யுட்கட்கு ஆசிரியர் பெயர்கள் காணப்படவில்லை. மற்றவற்றின் ஆசிரியர் களாய் இருநூற்றறுவர் பெயர்கள் கிடைத்துள்ளன. 'இந்தொகை பாடிய கவிகள் இருநூற்றைவர்' என்ற குறிப்பிற்கு இது மாறுபடுகின்றது. "பத்துச் செய்யுட் களின் ஆசிரியர் பெயர் தெரியாத காலத்தும் ஒருவர்

பெயர் மிகுதியாகக் காணப்படுகின்றது. எழுதுவோருடைய பிழையால் ஒரேவகையான பெயர்கள் சில, வேறுவேருகத் தோற்றும்படி சில வேறுபாட்டோடு அமைந்திருத்தலாலும், ஒராசிரியருக்குரிய சிறப்புப் பெயர் மட்டும் ஒரு செய்யுளிலும் இயற்பெயர் மட்டும் மற்ருெரு செய்யுளிலும் எழுதப்பட்டிருத்தலாலும் வேறுசில காரணங்களாலும் இத்தொகை வேறுபாடு உண்டாகியிருத்தல் கூடும். சங்ககாலத்துப் புலவர் பெயர்களில் இங்ஙனம் உள்ள பிறழ்ச்சி ஆராய்ச்சியாளர்க்கு மிக்க துன்பத்தை விளைக்கின்றது," எனத் திரு. ஐயரவர்கள் எழுதுவது இங்கு நன்கறியத்தக்கது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் மட்டும் நச்சினுர்க்கினியர், பேராசிரியர் என்னுமிருவராலும் சற்றேறக்குறைய 236 இடங்களில் குறுந்தொகைச் செய்யுட்கள் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. குறுந்தொகையுள் 237 செய்யுட்கள்வரைப் பல்வேறு உரையாசிரியர்களால் உதாரணங்களாக எடுத்தாளப் பட்டுள்ளன. அகப்பொருள் விளக்கவுரையாசிரியர் பெரும்பாலான குறுந்தொகைச் செய்யுட்களை மேற்கோளாகக் காட்டியுள்ளார். சற்றேறக்குறைய இருபத்தொன்பது உரையாசிரியர்கள் இந்நூற் செய்யுட்களை மேற்கோள்களாக எடுத்தாண்டிருந்தும் ஒருவராலாவது 'நன்றே' என்ற குறுந்தொகைச் செய்யுள் சுட்டப் படாமலும் முழுதும் எடுத்துக் காட்டப்படாமலும் போனது விந்தையோ! அச் செய்யுளின் மாயமோ! அறியேம். அதனுல் "நன்றே என்னும் குறுந்தொகையும் அது" என்று கூறும் உச்சிமேற் புலவர்கொள் நச்சினுர்க்கினியர் கூற்று பொய்யெனக்கொண்டு புரை கூறலும் சாலுமோ! அத்தொடக்கமுடைய குறுந் தொகைச் செய்யுள் ஒன்று உளதெனப் பிறர் எவரும் குறித்திடாததும் அறிதற் பாலதே.

பேராசிரியர், தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்பவற்றிற்கு எழுதிய வுரை கிடைத்திலது. மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என்பவற்றிற்கு எழுதிய உரையே கிடைக்கப் பெற்றுள்ளது. அவர் தாம் எழுதிய உரைகளில் குறுந்

தொகைக்கு உரை எழுதியிருத்தலைக் குறிப்பாகவும் சுட்டிலர்.

"யானே ஈண்டையேனே" என்னும் இக் குறுந்தொகை போல வருவனவும் இச்சூத்திரத்தா னமைக்க. பேராசிரியரும் இப்பாட்டில் மீனெறி தூண்டில் என்றதனை ஏனையுவமம் என்றார்" என்று நச்சினார்க்கினியர் தொல்காப்பியப் பொருளதிகார அகத்திணையியல் 46–ம் சூத்திரத்திற்கு எழுதிய குறிப்பால், பேராசிரியர் குறுந்தொகைக்கு உரை எழுதினா ரென்று கோடலாமாயினும், அவர் தொல்காப்பியம் பொருளதிகாரம் முழுமைக்கும் உரை யெழுதியிருந்தார் எனவும், அதில் அகத்திணையில் 46–ம் சூத்திரத்திற்கு உரையெழுதுமிடத்து, 'யானே ஈண்டையேனே' என்னும் குறுந்தொகைச் செய்யுளை உதாரணமாக எடுத்துக் காட்டி, அதில் 'மீனெறி தூண்டில்' என்றதனை ஏனையுவமம் எனக் கொண்டார் எனவும் கூறலே சாலச் சிறப்புடையதாகப் பொருந்துவதாம் என்பது ஓர்ந்தறிதற்பாலது. அங்கு நச்சினார்க்கினியர், 'இப்பாட்டின்' எனச் சுட்டுதலும் அறியத்தக்கது. நச்சினார்க்கினியர் தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்பவற்றிற்கு எழுதிய உரைகளில் குறுந்தொகைச் செய்யுட்களை மிகுதியும் உதாரணங்களாக எடுத்துக் காட்டி யிருத்தல்போல், மெய்ப்பாட்டியல், உவமவியல், செய்யுளியல், மரபியல் என்பவற்றிற்கு உரையெழுதிய பேராசிரியர் அவ்வளவு மிகுதியாகக் குறுந்தொகைச் செய்யுட்களை உதாரணங்களாகக் காட்டவில்லை. மற்றும், திருக்கோவையாருக்கு உரை யெழுதியவர் பேராசிரியரே என்பர். அவ்வாறாயின், அங்குக் குறுந்தொகைச் செய்யுட்களையேனும் அல்லது அவற்றிற்குத் தாம் கண்ட உரையையேனும் குறித்திருக்கலாமன்றோ! திருக்கோவையாரில்,

"'உவவின நாண்மதி' என்றது 'கால குருகு' என்பது போலப் பன்மை ஒருமை மயக்கம்" என 108-ம் செய்யுள் உரையிலும்,

'கள்ளகத்த கழுநீர் மலர்' என்பது 'கால குருகு' என்பதுபோல நின்றது; பெயரெச்சமெனினு மமையும்"

என 123-ம் செய்யுளுரையிலும் ஆகிய இரண்டிடங்களில் மட்டும்

"யாரு மில்லைத் தானே கள்வன்
தானது பொய்ப்பின் யானெவன் செய்கோ
தினைத்தா ளன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீ ராரல் பார்க்குங்
குருகு முண்டுதா மணந்த ஞான்றே"

என்னும் குறுந்தொகை 25-ம் செய்யுளில் வந்துள்ள 'கால குருகு' என்பதுமட்டும் காட்டப்பட்டுள்ளது. அத் திருக்கோவைப்பதிப்பில் குறுந்தொகை 26-ம் செய்யுள் எனப் பதிப்பித்துள்ளது தவறுதலும், அது 25-ம் செய்யுளாதலும் அறியத்தக்கது. இவற்றை நோக்குமிடத்துப் பேராசிரியர் குறுந்தொகைக்கு உரை எழுதினரோ என்னும் ஐயப்பாடுந் தோற்றுகின்றது. நச்சினார்க்கினியரைச் சிறப்பித்துக்கூறும் உரைச் சிறப்புப் பாயிரத்தில்,

'நல்லறிவுடைய தொல்பேராசான்'

என்றது பேராசிரியரைக் குறிக்கும் என்று கொண்ட மயக்கமோ எனவும் எண்ணுதற்கு இடந்தருகின்றது.

பேராசிரியர் என்பார் இருவர் இருந்தனர் எனவும், ஒருவர் இளம்பூரணவடிகளால் சுட்டப்படும் ஆத்திரையன் பேராசிரியன் என்பவரும், மற்றவர் தொல்காப்பியத்திற்கு உரைகண்ட பேராசிரியர் என்பவரும் ஆவர் என்பார் அறிஞர். யாப்பருங்கல விருத்தியில் கூறப்படும் பேராசிரியர், இவ்விருவரினும் வேறயவர் எனவும், அவர் மயேச்சுரர் என்னும் பெயருடையார் எனவும், அதற்கு வேண்டும் குறிப்புக்களுடன் கூறப்பட்டிருத்தலால் அறிகிறோம். எனவே, தொல்காப்பியத்திற்கு உரைகண்ட பேராசிரியரையே, "'மீனெறி தூண்டில்' என்றதனை ஏனையுவமம் எனக் கூறினர்" என்று நச்சினார்க்கினியர் சுட்டினராதல் வேண்டும். திருக்கோவையாருக்கு எழுதிய வுரை பேராசிரியர் உரையோ என்று துணிவதற்குத் தனிப்பட ஆராயவேண்டுவதும் அவசியமே.

'நல்லறிவுடைய தொல் பேராசான்' என்னும் தொடர் அப்பேராசிரியரையே குறித்தது எவ்வாறோ? அறியோம். அவ்வுரைச் சிறப்புப் பாயிரத்தில் தொல்

காப்பியத்திற்கு உரைகண்ட பேராசிரியரையே 'தொல் பேராசான்' எனக் குறித்திருப்பதாக உணரக்கிடக்கின்றது. எனினும், அத்தொடர் பேராசிரியரைக் குறித்தது என்பதினும் 'நற்றமிழறிவு வாய்ந்த பழைமையான பெருமை பொருந்திய ஆசிரியன்' எனப் பொருள் கொண்டு அக்காலத்தில் பேராசிரியனாய்த் திகழ்ந்த ஒருவரைக் குறித்திருக்க வேண்டுமென்று கோடலே சாலச் சிறந்ததாமெனின் அதுவும் ஒருவாறு பொருந்தும் என்க. பேராசிரியர் பெயரைப் பேராசான் எனக் குறித்தல் இவ் வோரிடமேயன்றிப் பிறிதோரிடத்துங் காணுமாறில்லை. நச்சினார்க்கினியர் 'பேராசிரியர்' எனக் குறிப்பதே இதற்குச் சான்று.

பேராசிரியர் எழுதாதுவிட்ட இருபது குறுந்தொகைச் செய்யுட்கட்கு நச்சினார்க்கினியர் உரையெழுதினர் என அச்சிறப்புப் பாயிரமும்,

> "ஆரக் குறுந்தொகை யுளைஞ்ஞான்கும்......
> விருத்தி நச்சினார்க் கினியமே"

என்னும் அடிகளும் குறிக்கும். நச்சினார்க்கினியர் குறுந்தொகையில் இருபது செய்யுட்களுக்கு உரை எழுதினரோ என ஆராயுமிடத்து அதற்கு அவ்வுரைச் சிறப்புப் பாயிரச் செய்யுட்களன்றி வேறொரு சான்று மில்லை. அவ்விருபது செய்யுட்களும் எவை என்பதும் புலப்படவில்லை. ஈற்றிருபது செய்யுட்களாகலாம் என்று தமிழ்ப் பேரறிஞர் கருதுகின்றனர். நச்சினார்க்கினியர் தாம் எழுதிய தொல்காப்பியம், பத்துப் பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி என்னும் நூல்களின் உரைகளில் தாம் குறுந்தொகைக்கு 'உரையெழுதியதைக் குறித்தாருமல்லர்; குறிப்பாகச் சுட்டினருமல்லர். நச்சினார்க்கினியர் எழுதிய உரையில் யாண்டுங் காண்டிகையுரை எனவே குறிக்கப்பட்டிருக்கவும் சிறப்புப் பாயிர அகவலும் அதற்கொப்ப, 'உரைநடையிட்ட காண்டிகையுரைத்தும்' எனக் கூறவும், பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவக சிந்தாமணி முதலாய நூல்களின் இறுதியில் 'நச்சினார்க்கினியர் உரை முற்றும்' எனக் குறிக்கப்பட்டிருக்கவும், திருவாவடுதுறை மடத்துப் புத்தகசாலையிலுள்ள ஒரு பழைய திருக்குறட் பரிமேலழகருரைப் புத்தகத்தினிறுதியில் 'முருகு பொருநாறு' 'நாலடி நான்மணி'

'நற்றிணை நல்ல' என்னும் வெண்பாக்கள் மூன்றனோடும் எழுதப்பட்டிருந்ததாகக் குறிக்கப்படும் 'பாரத் தொல்காப்பியமும்' என்னும் வெண்பாவி னீற்றில் 'விருத்தி நச்சி னார்க்கினியமே' என்று குறிக்கப்பட்டுள்ளது. இவ்வுரைச் சிறப்புப் பாயிரச் செய்யுட்கள் பதினான்காம் நூற்றாண்டில் விளங்கிய நச்சினார்க்கினியர் காலத்திற்கும் பிற்பட்டவை என்பது தெளிவு. இச்செய்யுட்கள் நச்சினார்க்கினியர் உரையைக் கொண்ட நூல்கள் எவை என அறிதற்காகப் பிற்காலத்தில் தோன்றியவை என்பதில் கொள்ளத் தடையென்? 'நற்றிணை நல்ல குறுந்தொகை,' 'முறுகுபொருநாறு,' 'மருதம் ஓரம்போகி,' 'பெருங் கடுங்கோன் பாலை,' 'போக்கெல்லாம் பாலை,' 'திருமாற் கிருநான்கு,' 'இறை வாழ்த் தொன்றே,' 'வியமெல்லாம் வெண்டே ரியக்கம்,' 'ஒன்று மூன்று,' 'பாலை வியமெல்லாம்,' 'நின்ற நீதி வென்றநேமி' என்பவை யெல்லாம் பிற்காலத் தெழுந்தன என்பதும், அவை யாவும் இக்காலத்தன, இன்னார் பாடியன என அறியக்கூடாதன என்பதும் அவை நூற் பெயர், தொகை, எண், திணை முதலியன காட்ட வெழுந்தன என்பதும், அவை ஆராய்ச்சிக்கு முற்றும் உறுதுணை செய்யா என்பதும், மாமாயமாய் வந்தன என்பதும் அறிவால் அறிந்து கொள்ளத்தக்கனவே யன்றி வேறென் கூறக்கிடக்கின்றது? அவையேபோல் பாடினாரும் காலமும் அறியலாகாதமைந்த நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப் பாயிரச் செய்யுட்களும் மாமாயமாய் வந்தன என்று கூறுவதன்றி வேறு என்ன கூறக்கிடக்கின்றது? இவற்றால் குறுந்தொகைக்கு நச்சினார்க்கினியர் உரை யெழுதினார் என்று கூறுதல் எவ்வாறு ஒவ்வும்?

நச்சினார்க்கினியரே தம் தொல்காப்பிய உரையில் மிகுதியான குறுந்தொகைச் செய்யுட்களை மேற்கோளாகக் காட்டியுள்ளனர். அவர் ஆங்காங்கு உரை போல் விளக்கி எழுதிச் செல்லும் முறை மிகவும் அருமை வாய்ந்ததும், நயம் பொருந்தியதும், அறியத் தக்கதுமாகும். அவற்றுட் சில ஈண்டு அறிவாம் :—

1. "'பூவொத்தலரும்......கண்ணே'—(குறுந்-72)

என வரும் இக் குறுந்தொகையுட் குரீஇயோப்புவாள் கண்ணென வழிநிலைக் காட்சியைப் பாங்கற்குக் கூறின

மையின், அத்திணைக்கதிர் முற்றுதற்குரிய இளவேனிலும் பகற் பொழுதுங் காட்சிக்கண் வந்தன. 'கொங்குதேர் வாழ்க்கை' என்பதும் இளவேனிலாயிற்று; தும்பி கொங்கு தேருங் காலம் அதுவாகலான்."

(தொல். அகத். நச். சூ-16)

2. "'நிலந்தொட்டுப் புகார்...காதலோரே'—(குறுந் - 130) செவிலி தேடத் துணிந்தது. இக் குறுந்தொகையுள் நம் மாற் காதலிக்கப்பட்டார் என்றது அவ்விருவரையும். தாயருமுள ரென்றதனாற் றந்தையுந் தன்னையரும் வந் தால் இன்னது செய்வலென்றலும் உள வென்று கொள்க."

(தொல். அகத். நச். சூ. 38.)

3. "ஒன்றேனல்லேன்......மற்றென்றினனே"—(குறுந்-208) இக்குறுந்தொகை பிற்தொன்றின் பொருட்டுப் பொரு கின்ற யானையான் மிதிப்புண்ட வேங்கை நசையற உணங்காது மலர் கொய்வார்க்கு எளிதாகி நின்று பூக்கும் நாடனென்றதனானே, தலைவன் நுகருங் காரணத் தானன்றி வந்து எதிர்ப்பட்டுப் புணர்ந்து நீங்குவான் நம்மை இறந்துபாடு செய்வியாது ஆற்றுவித்துப் போயின னெனவும், அதனானே நாமும் உயிர் தாங்கியிருந்து பலராலும் அலைப்புண்ணு நின்றனம் வேங்கைமரம் போல எனவும், உள்ளத்தான் உவமங்கொள்ள வைத்த வாறு காண்க."

(தொல். அகத் நச். சூ-47)

4. "'கொங்குதேர் வாழ்க்கை......பூவே'—(குறுந்-2) இதனுள் 'தும்பி' என்றது முன்னிலையாக்கல்; 'கண் டது மொழிமோ' என்றது சொல்வழிப்படுத்தல்; 'கூந் தலின் நறியவு முளவோ' என்றது நன்னய முரைத்தல்; 'காமஞ் செப்பாது' என்றது என்னிலத்து வண்டா தலின் எனக்காகக் கூறாது மெய்கூறெனத் தன் இடம் அதுவாகக் கூறலின், இடமணித்தென்றது; 'பயிலியது நட்பு' என்றது தன்னிலை யுரைத்தல்."

(தொல். களவு. நச். சூ-101)

5. "'பூவிடைப்படினும்......நாமுயற்கே'—(குறுந். 57) முற்பிறப்பில் இருவேமாய்க் கூடிப்போந்தனம். இவ்வுல கிலே இப்புணர்ச்சிக்கு முன்னர் யாம் வெவ்வேறாயுற்ற

துன்பத்து இன்று நாமே நீங்குதற்கெய்திய பிரிவரிதாகிய காமத்துடனே இருவர்க்கும் உயிர்போவதாக; இஃதெனக்கு விருப்ப மென்றான்; என்பதனால் தங்கிலையுரைத்தலும் பிரிவச்சமுங் கூறிற்று.'

(குறிப்பு:—தலைமகன் கூற்றாக்கினார் நச்சினார்க்கினியர். தலைவி கூற்றெனப் பதிப்புக்களில் இருத்தல் காண்க).

(தொல். களவு. நச். சூ-101.)

6. "'தீண்டலு மியைவது......தோளே'—(குறுந்-272)

கழறிய பாங்கற்குக் கூறுந் தலைவன் இவனான் இக்குறை முடியாது; நெருநல் இடந்தலைப்பாட்டிற் கூடியாங்குக் கூடுவல்; அது கூடுங்கொ லென்று கூறுவான் அற்றை ஞான்று மெய்தொட்டுப் பயின்றதே கூறினான்."

(தொல். களவு, நச். சூ-102)

7. "'நள்ளென்றன்றே......துஞ்சாதேனே'—(குறுந்-6)

இதனுட் பொழுது சென்றதில்லை என்றும், மாக்கள் இன்னும் துயின்றில ரென்றும், அருமைவாயில் கூறிய வழித் தலைவி யாமமும் நள்ளென்றும் மாக்களும் துயின்றும் வந்திலரென வருந்திக் கூறியவாறு காண்க."

(தொல், களவு, நச். சூ-111)

8. "'மெய்யோ வாழி......மென்றோளே'—(குறுந்-121)

கோடு ஆற்றப் பாயாது வேண்டியவாறு பாய்ந்து அதனை முறித்த முசுப்போல நாம் குறிபெறுங் காலத்து வாராது புட்டாமே வெறித்தியம்புந் துணையும் நீட்டித்துப் பின்பு வருதலிற் குறித்த வாயாத் தப்பு அவன்மே லேற்றி அதற்குத் தோள் பசந்தன வென்று பின்னொரு நாள் அவன் வந்துழித் தோழியை நோக்கி இவ்விரவு மெய்யோ எனவே அவ்விரண்டும் பெற்றாம்."

(தொல். களவு. நச். சூ-111)

9. 'அரும்பற மலர்ந்த...கொடியோ னையே'-(குறுந்-26)

10. 'யாருமில்லை தானே......ஞான்றே'— (குறுந்-25)

இவற்றுள் துறந்தான்போலவும் மறந்தான்போலவுங் கருதித் தான் தீது மொழியினு மெனவும், யா னெவன் செய்கோ எனவும் தோழி வினவாக் காலத்து அவன்

தவற்றை வரை விடை வைத்தலின் ஆற்ருமைக்கு அறிவித்தாள்."

(தொல். களவு. நச், சூ-112)

**11.** "'மள்ளர் குழீஇய...—மகனே'—(குறுந்-31) யாண்டுங் காணே னென அவனுள் வழிபட்டுக் கூறினமையிற் கற்பின்பாலதாய்த் தோழியும் தலைவனும் பெண்டன்மையிற் றிரியக் கருதாது நன்கு மதித்தவாறு காண்க."

(தொல். களவு, நச். சூ-114)

**12.** "'நெய்தற் பரப்பில்......நுதலே'—(குறுந்-114) 'வந்தனன்' என்றும் 'என் மகள்' என்றும் ஒருமை கூறிச் 'செல்கம்' என்ற உளப்பாட்டுப் பன்மையால் தலைவி வரவுங் கூறி இடத்துய்த்தவாறு முணர்த்தினாள். 'செலவியங் கொண்மோ' என்றது நீயே அவளைப் போகவிடுவாய் என்றதாம்."

—(தொல். களவு. நச். சூ-114)

**13.** "'மனையுறை கோழி......தெருவே'—(குறுந்-139) இதனுள் 'அம்பலொடு வார' லெனவே பன்னாள் நீத்தாமையுங் கண்ணின்று பெயர்த்தமையுங் கூறிற்று. கோழிபோலத் தாயர் மகளிரைத் தழீஇ இக்கொண்டாரென்றலிற் புறம்போயும் பயமின் றெனக் காத்த தன்மை கூறிற்று."

—(தொல். கற்பு. நச். சூ-150)

**14.** "'அயிரை பரந்த......யானே'—(குறுந்-178) இதனுள் முலையிடைக் கிடந்தும் பனிக்கின்ற நீர் அரியமாகிய காலத்து எங்ஙனம் ஆற்றினீரென யான் நோவா நின்றேன். இங்ஙனம் அருமை செய்தலால் தேற்றுதற்கு உரியேனாகிய என்னைச் சிறப்பித்துக் கூறல் ஆகாது என்றவாறு காண்க."

—(தொல். கற்பு. நச். சூ-150)

**15.** "'குணகடற் றிரையது பறைதபு நாரை'—(குறுந்-128) என்பதனுள் நாரை தெய்வங் காக்கும் அயிரை இரையை வேட்டாற்போல் நமக் கரியளாயினாளை நீ வேட்டா யென்பதனாற் குறிபிழைத்துழி ஊடினமை கூறிற்று.

—(தொல். கற்பு. நச். சூ-156)

**16. " 'நசைபெரி துடையர் சென்ற வாறே'—(குறுந்-37)**

இதனுண் முன்பே நெஞ்சத் தன்புடையார் அதன்மேலே களிறு தன் பிடியின் பெரும்பசி களைதற்கு மென்றோலை யுடைய ஆச்சாவைப் பிளந்து அந்நாரைப் பொளித் தூட்டும் அன்பினையுடைய அவர் சென்ற ஆறதனைக் காண்பார்காண் என்று அன்புறுதகுந கூறிப் பிரிவாற்ரு தவளை வற்புறுத் (தவாறு) தியவாறு காண்க. நம்மேல் இயற்கையாக அன்பிலனென்று ஆற்ருளாவ ளென்று கருதாது இவளை ஆற்றுவித்தற்பொருட்டு இவ்வாறு கூறலின் வழுவா யமைந்தது."

—(தொல். பொருளி. நச். சூ-231)

**17. " 'கன்றுதன் பயமுலை...நினக்கே '—(குறுந்-225)**

இதனுள் தான் கெட்டவிடத்து உதவின உதவியை அரசுரிமையை எய்திய மன்னன் மறந்தாற்போல, நீ இறந்து துயருற்றகாலத்து யான் தலைவியை நின்னோடு கூட்டிய செய்ந்நன்றியை மறவாது இன்று நீ வரைந்து கொள்வையாயின் இவள் கூந்தல் நினக்குரிய வென்றவழி உவமையும் பொருளும் ஒத்து முடிந்தமையின் முன்னின்ற நாட வென்பது உள்ளுறை யுவமமன்ருய் இறைச்சியாம். என்னை? தன் கன்றிற்குப் பயன்பட்டுப் பிறர்க்கு உயிரைக் கொடுக்கின்ற திணையைத் தான் உண்டு அழிவு செய்கின்ருற்போல நீ தன் கருமஞ் சிதையாமற் பார்த்து எமக்குயிராகிய இவளைத் துயருறுத்தி எம்மை இறந்து படுவித்தல் ஆகாதென்று உவமை யெய்திற்றேனும், பின்னர் நின்ற பொருளோடியையாது இவ்வுவமம் உள்ளுறையுற்றுப் பொருள்பயவாது இறைச்சியாகிய நாடன் என்பதனுள்ளே வேருேர் பொருள் தோற்று வித்து நின்றதேயா மாதலின். முலை மாந்த என்றது தன் கருமஞ் சிதையாமற் பார்த் தென்னும் துணையன்றி உள்ளுறையுவமப் பொருளை முற்ற உணர்த்தாமை யுணர்க."

உள்ளுறையுவமம், இறைச்சி என்பவற்றை ஆராய் தலும் அகப்பொரு ளிலக்கியங்களைத் துருவியாராய்தற் குத் துணையாகும்.காலம் வாய்க்குமேல் பின்னர் அவற்றை ஆராய்ந்து தனிக்கட்டுரையாக்கவும் கருதியுள்ளேன்.

இதுகாறும் எடுத்துக்காட்டிய இவை நச்சினார்க்கினியர் இனிது விளக்கி உதகரித்துக் காட்டியவற்றுள் ஒரு சிலவே. இவற்றை நோக்குமிடத்து நச்சினார்க்கினியர் குறுந்தொகை முழுவதற்கும் உரை யெழுதியிருந்திருப்பாராயின் எத்துணைச் சிறப்புடையதா யிருக்குமென ஊகித்தறியலாம். அத்தகையார் குறுந்தொகையுள் இருபது செய்யுட்கட்கு உரையெழுதி யிருப்பராயின் அச்செய்யுட்களில் ஒன்றிரண்டையேனும், அவற்றின் உரைகளுடன் தாம் எழுதிய தொல்காப்பிய உரையில் குறித்திடாதிருப்பரோ? அல்லது 'குறுந்தொகையுள் இவ்வாறு கூறினும்' என எங்கேனும் சுட்டாதிருப்பரோ? மேற்காட்டியவை ஏன் அவர் எழுதிய குறுந்தொகைச் செய்யுட்களாக விருத்தலாகாது எனின், கூறுதும். நச்சினார்க்கினியர் மேற்கோள்களாக எடுத்தாண்ட குறுந்தொகைச் செய்யுட்கள் பலவற்றுள் ஒரு சிலவான பதினேழே எடுத்துக்காட்டினும். அவையும், 2, 6, 25, 26, 31, 37, 57, 72, 114, 121, 128, 130, 139, 178, 208,225, 272 என்னும் எண்ணுள்ள குறுந்தொகைச் செய்யுட்கள். அவற்றுக்கும் அவர் உரையெழுதி யிருந்திருப்பராயின் 'இவ்வாறு கூறினும் காண்க' எனத் திண்ணமாகக் கூறுதிரார். அவர் 382 முதல் 401 வரையிலுள்ள செய்யுட்கட்கே உரையெழுதினர் எனக்கொள்ளின் அச்செய்யுட்களில் சிலவற்றை மேற்கோளாகக் காட்டிய விடத்துச் சுட்டியிருப்பார். இவற்றால் குறுந்தொகையில் இருபது செய்யுட்கட்கு நச்சினார்க்கினியர் உரையெழுதினார் என்பதை உரைச்சிறப்புப்பாயிரச் செய்யுட்களின் துணை கொண்டன்றி வேறு எவ்வாற்றான் அறுதியிட்டுக் கூறவியலும்? நிற்க.

" கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி
காமஞ் செப்பாது கண்டது மொழிமோ
பயிலியது கெழீஇய நட்பின் மயிலியல்
செறியெயிற் றரிவை கூந்தலின்
நறியவு முளவோ நீயறியும் பூவே "

—(குறுந்-2)

என்னும் இச் செய்யுளின் ஆசிரியர் 'இறையனார்' என்று கூறப்பட்டுள்ளது.

இச்செய்யுளை ஆலவாய் இறையனார், தருமி என்னும் பிரமசாரிக்குப் பொற்கிழி பெறப் பாடிக் கொடுத்தனர் எனத் தமிழ் நாவலர் சரிதை, கல்லாடம், திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம், கடம்பவன புராணம், சீகாளத்திப் புராணம், பரஞ்சோதி முனிவர் திருவிளையாடற் புராணம் முதலியன கூறும். இறையனார் அகப்பொருள் அறுபது சூத்திரங்களைக் கொண்டதொரு நூல். இறையனார் என்பார் மதுரைச் சோமசுந்தரக் கடவுளே என்பது அவ்விரண்டின் வரலாற்றாலும் அறியலாகும்.

"என்றும் புலராது யாணர்நாட் செல்லுகினும்
நின்றலர்ந்து தேன்பிலிற்று நீர்மையதாய்க்—குன்றாத
செந்தளிர்க் கற்பகத்தின் தெய்வத் திருமலர்போன்
மன்புலவன் வள்ளுவன்வாய்ச் சொல்"

என்னுந் திருவள்ளுவ மாலைச் செய்யுளும் இறையனார் பாடியதே.

பேராலவாயார் என்பார் நற்றிணையில் 51, 361 என்னும் எண்ணுள்ள இரண்டு பாடல்களையும், அகநானூற்றில் 87, 296 என்னும் எண்ணுள்ள பாடல்களையும், புறநானூற்றில் 247, 262 என்னும் எண்ணுள்ள பாடல்களையும் பாடியுள்ளார். இவரை மதுரைப் பேராலவாயர் என்றுங் கூறுவர்.

'கொங்குதேர் வாழ்க்கை' என்ற செய்யுளில் நக்கீரர் சொற்குற்றமின்று; பொருட்குற்றமுண்டென வாதிட்ட காலத்துச் சிவபிரான் ஒரு புலவராக வர, அப்பொழுது நும் பெயர் யாதென்றார்க்கு, "யாம் பேராலவாயர் என்னும் பெயருடையோம்' என்று கூறியதாகப் பழைய திருவிளையாடல் கூறும். இதனை நோக்கிடின் பேராலவாயரும், இறையனாரும் மதுரைச் சோமசுந்தரக் கடவுளே என்பது புலனும். எனவே, எட்டுத்தொகை நூல்களைச் சேர்ந்த அகநானூறு, நற்றிணை, புறநானூறு என்பவற்றில் பேராலவாயர் என்றும், குறுந்தொகை, இறையனாரகப் பொருள், திருவள்ளுவ மாலை என்பவற்றில் இறையனார் என்றும் குறிப்பிடக் காரணம் என்னோ என்று ஆராய்வதற்கு உள்ளம் துள்ளுகின்றது. நக்கீரர் முன் வாதிட வருங்கால் பேராலவாயர் என்று

பெயர் கூறியும், எதன் பொருட்டு வாதம் எழுந்ததோ அச்செய்யுளி னடியில் இறையனுர் எனக் குறித்தும் இருத்தலால் இருவராகக் கொள்ளுதல் எவ்வாறு இயலும்? இறையனு ரகப்பொருளுக்குக் 'களவியல்' என்னும் பெயருண்டென்பதும், ஆலவாயில் அழனிறக் கடவுள் ஆசிரியர் என்பதும் அறியக் கிடப்பதும் அன்றி, அந்நூற்கு 'இறையனுர் களவியல்' என்னும் பெயர் உண்டென்பதை நச்சினர்க்கினியர் 'இறையனுர் களவிய லுள்ளும்' என (தொல். அகத். நச். சூ. 53)க் கூறு மாற்ருலும் அறியலாகும். (மதுரை) ஆலவாய் அழனிறக் கடவுளும், பேராலவாயரும், மதுரைப் பேராலவாயரும், இறையனுரும் ஒருவரே எனலாகுமன்ருே?

'பேராலவாயர் மதுரையையும், பூதப்பாண்டியன் செழியனையும், சிறப்பித்துள்ளார் (அகம். 296). அவர் ஒல்லையூர் தந்த பூதப் பாண்டியன் காலத்தவர் என்று தெரிகிறது. அப்பூதப் பாண்டியன் இறக்க, அவன் மனைவி பெருங்கோப்பெண்டு தீப்பாயப் புகுதலும் இவர் அதனைக் கண்டு பரிந்து ஆற்ருராய் வருந்திப் பாடி யுள்ளார் (புறம் 247). இவை போன்ற செய்திகளால் பேராலவாயர் வேறு; இறையனுர் வேறு' என்று எண்ணவும் மனம் துணிகின்றது. இப்பேராலவாயர் கி. பி. 25- முதல் கி. பி. 50 வரை யெனக் குறிக்கப்படும் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன் காலத்தவர் எனின், அவன் இறக்க, அவன் மனைவி தீப்பாயப் புகுதல் கண்டு வருந்திப் பாடிய இவரும் அக்காலத்தவரே யாதல் வேண்டு மன்ருே? அஃதாவது, கி. பி. முதல்நூற்ருண் டாகும். நக்கீரர் காலம் கி. பி. இரண்டாம் நூற்ருண் டாகுமென முன்பு கூறினும். எனவே, பேராலவாயர் வேறு; நக்கீரரோடு வாதிட்ட பேராலவாயர் வேறு, என்று புலப்படுகின்றது. முதல் நூற்ருண்டுப் பேராலவாயர் மண்ணகத்துப் பிறந்த தமிழ்ப் புலவர் போலும்! இரண்டாம் நூற்ருண்டுப் பேராலவாயர் அனைத்துயிர்க்கும் இறைமை எய்திய இறையனுர் போலும்! என்ன விந்தை! ஆராய்ச்சியின் ஆபாசம்தான் என்னே! இறையனுர் என்பாரும் வேருருவர் ஆய்விடு வாரோ? நிற்க.

'கொங்குதேர் வாழ்க்கை' என்னும் செம்பொருட் டொடர் கொண்டதும், சிவபிரானாகிய இறையனாரால் இயற்றப்பட்டதுமான செய்யுளைக் குறுந்தொகையின் முதற் செய்யுளாக அமைக்காது, திப்புத்தோளார் என்னும் புலவரால் இயற்றப்பட்டதும், 'செங்களம்பட' எனத் தொடங்குவதுமான செய்யுளை முதலில் அமைத்துத் தொகுத்தது என்னையோ என மனம் ஐயுற் றலையும். திணைகளில் முதன்மையதான குறிஞ்சித் திணைக்குரிய வெற்றிகொள் சேயின் வியன் பெருங் குன்றமே திப்புத் தோளார் பாடிய பாட்டில் கூறப்படுதலால் பொருந்துவ தாகக் கொண்டனர் போலும்! இது கருதிப் போலும் பாரதம்பாடிய பெருந்தேவனாரும் கடவுள் வாழ்த்தில் குறிஞ்சிக் கிழவனான முருகனைத் துதிப்பாராயினர் எனக் கூறல் உவகை யூட்டுமன்றோ!

'கொங்குதேர் வாழ்க்கை' என்ற செய்யுளைப் 'பிரம சாரியான தருமி பொற்கிழி பெறச் சிவபெருமானாகிய இறையனார் பாடிக் கொடுத்த 'சிந்தா சமுத்தி யகவல்' எனத் தமிழ் நாவலர் சரிதை கூறும். இது திருவிளை யாடற் புராணக் கதை. பாணபத்திரருக்கு மாண் பொருள் கொடுத்து வரவிடுமாறு எழுதிய திருமுகப் பாசுரம் பதினோராந் திருமுறையி லுள்ளது. அதன் வர லாறும் திருவிளையாடற் புராணக்கதையே யாகும். எனின், 'கொங்குதேர் வாழ்க்கை' என்ற செய்யுளும் பதினோராந் திருமுறையில் ஏன் இடம் பெறவில்லை? என்றாலோ, அகப்பொருள் பற்றிய காரணத்தாலும் அடியள வாலும் குறுந்தொகையுட் கோத்தாரெனக் கொள்ளல்வேண்டும் போலும்!

"பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை
நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு
பூக்கமழ் பொதும்பிற் சேக்குந் துறைவனோ
டியாத்தேம் யாத்தன் று நட்பே
அவிழ்த்தற் கரிதது முடிந்தமைந் தன்றே"

என்பது குறுந்தொகை 313-ம் செய்யுள். இச்செய்யுளைப் பாடிய ஆசிரியர் பெயர் கிடைக்கவில்லை.

"பெருங்கடற் றிரையது சிறுவெண் காக்கை
நீத்துநீ ரிருங்கழி யிரைதேர்ந் துண்டு

**பூக்கமழ் பொதும்பர்ச் சேக்கும்**
**துறைவன் சொல்லோ பிறவா யினவே''**

என்பது ஐங்குறுநூற்று 162-ம் செய்யுள். இதனைப் பாடியவர் அம்மூவனார். இவை இரண்டும் நெய்தல் திணைக்குரியன. இவற்றை ஆழ்ந்து நோக்குவோமாயின் ஏடெழுதுவோராலோ பிற காரணத்தாலோ ஐங்குறு நூற்றுச் செய்யுளோடு 'துறைவன்' என்பதற்குப் பின் இரண்டடி சேர்க்கப்பட்டுக் குறுந்தொகை ஏட்டில் இடம் பெற்றிருக்க வேண்டுமென்று எண்ண இடமுண்டாகின்றது. இவ்வாறே சில பாடல்கள் ஐயுறத்தக்கனவா யுள்ளன.

தொல்காப்பியப் பொருளதிகாரவுரையில் காட்டப் பட்டுள்ள சில செய்யுட்கள் — அளவால் எட்டடி கொண்டவை —குறுந்தொகைச் செய்யுளாகக் கருதற் கேற்ப அமைந்துள்ளன. இவற்றைப்பற்றி யாதொன்றும் துணிந்து கூற வியலவில்லை; எனினும் ஆராச்சிக்குரிய தாக விருத்தல் அறியத்தக்கது.

இதுகாறும் கூறியவை யாவும் முற்ற முடிந்த முடிபன்று. என் சிற்றறிவிற் கெட்டியவரை ஆராய்ந்தவை. ஆராய்ச்சி என்பது முடிவிலா ஒன்று. அதிலும் பழைமை யானவற்றை ஆராய்தலில் உள்ள துன்பங்கள் மிகப் பல. ஆதலின், அறிவுடையோர் காய்தலுவத்தல் அகற்றி இச் சிறு ஆராய்ச்சியை ஏற்றுப் பின்னும் ஆராய்வாராக.

**'வாரம் பட்டுழித் தீயவும் நல்லவாம்**
**தீரக் காய்ந்துழி நல்லவும் தீயவாம்.'**

## II

ஐந்திணைகளில் நெய்தல் ஒன்று; மற்றவை குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம் என்பன. இவற்றிற்கு முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்பன உண்டு. அவற்றை விரிக்கிற் பெருகும்; நம்பியகப்பொருள், தமிழ்நெறிவிளக்கம், தொல்காப்பியம் முதலியவற்றுள் காண்க. நிலமும் பொழுதும் முதற்பொருளாகவும், விலங்கு, புள், மரம், பூ முதலியனவும், மக்களும், தெய்வமும், தொழிலும் முதலாயின கருப்பொருளாகவும், புணர்தல் பிரிதல் முதலியனபற்றி உள்ளத்தே தோன்றும் உணர்ச்சிவகைகள் உரிப்பொருளாகவும் கொண்டனர். திணை என்பது ஒழுக்கம்.

நெய்தலுக்கு 1. முதற்பொருள் – கடலும் கடல் சார்ந்த இடமும் நிலம். சூரியன் தோன்றும் காலமான எற்பாடும், அறுவகை இருதுவும் பொழுது.

2. கருப்பொருளாவன :— தெய்வம், - வருணன்; உயர்ந்தோர் - சேர்ப்பன், புலம்பன், பரத்தி, நுளைச்சி, திமிலர். தாழ்ந்தோர் - நுளைச்சியர், பரதர், பரத்தியர், அளவர், அளத்தியர்.

புள் - கடற் காகம், அன்னம், அன்றில்.
விலங்கு - சுறு, முதலை.
நீர் - உவர்நீர்க்கேணி, கவர்நீர்.
பூ - தாழம்பூ, முண்டகப்பூ, நெய்தற்பூ, அடம்பம்பூ.
மரம் - கண்டல், புன்னை, ஞாழல்.
உணவு - மீன், உப்பு விற்றுப் பெற்ற பொருள்.
பறை - மீன்கோட்பறை' நாவாய்ப் பம்பை.
யாழ் - விளரியாழ் (நெய்தல் யாழ்)
பண் - செவ்வழிப்பண் ; ஊர் - பட்டினம், பாக்கம்.
தொழில் - மீன் பிடித்தல், உப்புண்டாக்கல், அவை விற்றல், மீனுணக்கல், அவற்றையுண்ண வரும் பறவைகளை யோட்டுதல், கடலாடல்.

3. உரிப்பொருள் :—இரங்கலும் இரங்கல் நிமித்தமும்.

தலைவன் பிரிந்துழித் தலைவி ஆற்றியிருப்பது முல்லை எனப்படும். அங்ஙனம் ஆற்றியிராது தலைவ னேவலிற் சிறிது வேறுபட்டிருந்து இரங்கல் நெய்தல் எனப்படும். கடலுங் கானலுங் கழியும் கண்டொறும் இரங்கலும், தலைவன் எதிர்ப்பட்டு நீங்கியவழி இரங்கலும், பொழுதும் புணர்துணைப் புள்ளுங் கண்டு இரங்கலும் போல்வன இரங்கல். அக்கடல் முதலியனவும் தலைவன் நீங்குவனவுமெல்லாம் நிமித்தம் என்பன இங்கு அறியத் தக்கன.

குறுந்தொகையுள் நெய்தற் றிணைக்குரிய பாக்களை இங்கு அறிவோம். இரங்கலும் இரங்கல் நிமித்தமும் கூறும் பாக்களில் கூறும் முறையும் உவமமும் அறியத் தக்கன. குறுந்தொகையுள் நெய்தல்திணைக் குரியனவாக

71 பாட்ல்க ளுள்ளன. இவற்றைப் பாடியோர்களும் செய்யுள் எண்களும் :—

1. அம்மூவனார் :—49, 125, 163, 303, 306, 318, 340, 351, 397, 401
2. அறிவுடை நம்பி :—230
3. அஞ்சியாந்தை :—(அஞ்சில் ஆந்தையார்). 294
4. அண்டர் மகன் குறுவழுதி:- 345
5. ஆரியவரசன் யாழ் பிரம தத்தன் :—184
6. இளம்பூதனர் :—334
7. உலோச்சனர் :—175; 177, 205, 248
8. ஐயூர் முடவனர் :—123
9. ஓரம்போகியார் :—124
10. ஓத ஞானியார் :—227
11. ஔவையார் :—102, 200
12. கயமனர் :—9
13. கச்சிப்பேட்டு நன்னுகையார் :—172, 197
14. கபிலர் :—246
15. கல்லாடனர் :—248
16. கல்பொரு சிறு நுரையார் :- 290
17. கணக்காயன் தத்தன் :-304
18. கவை மகன் —324
19. காமஞ்சேர் குளத்தார் :—4
20. குன்றியனர் :—51, 117
21. கூடலூர் கிழார் :—166
22. கொல்லனழிசி :—145
23. சாத்தன் :—349
24. சிறைக்குடி ஆந்தையார் :— 57
25. செய்தி வள்ளுவன் பெருஞ் சாத்தன் —228
26. சேந்தன் கீரன் —311
27. தாமோதரன் :—92, 195 (தோதான்)
28. தும்பி சோகீரன் :—316, 320
29. நரி வெரூஉத்தலையார் :— 5, 236
30. நம்பிகுட்டுவன் :—109, 243
31. நன்னுகையார் :—118, 325
32. நெய்தற் கார்க்கியர் :—55, 212
33. பதுமனர் :—6
34. பரணர் :—328
35. படுமாற்றூர் மோசிகீரன் கொற்றன் :—376
36. பெரும்பாகன் :—296
37. பெருங்கண்ணன் :—310
38. பொன்னுகன் :—115
39. மதுரை எழுத்தாளன் சேந்தன் பூதன் :—226
40. மாலை மாறன் ;—245
41. மீளைகிழான் நல்வேட்டன்:- 341
42. வட வண்ணக்கன் :—81 (வடமவண்ணக்கன் பேரி சாத்தான்)
43. வாயிலான்றேவன் :—103
44. வெண்பூதி :—97
45. வெள்ளூர்கிழார் மகனர் வெண்பூதியார் :—219
46. வெண் மணிப்பூதி :—299
47. வெள்ளிவீதியார் :—386

இவற்றுள், கச்சிப்பேட்டு நன்னுகையாரும். நன்னுகையாரும் ஒருவரே யாகலாம் என்றும் வெண்பூதி, வெள்ளூர் கிழார் மகனர் வெண்பூதியார், வெண்மணிப்பூதி என்னும் முப்பெயர்களும் ஒருவரையே குறிப்பதாகும் என்றும்

கொண்டால் நெய்தற்றிணையைப் பாடியோர் 44 புலவர்களாவர்.

இனி, இவர்கள் பாடிய செய்யுட்களில் காணும் நயங்களையும், பொருள்களையும், பிறவற்றையும் குறிப்போம்.

(4) தலைவன் பிரிவிடை ஆற்ருள் எனக் கவலை கொண்ட தோழிக்குத் தலைவி சொல்லுகிற பாட்டில் தலைவியின், முகம் நம் அகக்கண்ணிற்குப் புகைப்படம் பிடித்துக் கொடுத்தாற்போல் 'இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி அமைதற்கு அமைந்த நம் காதலர் அமைவிலராகுதல் நோம்' என்று கூறுகிருர். இமைதீய்ப் பன்ன கண்ணீர் என்றதால் பிரிவின் மெலிவிஞல் கண்களில் நீர் நிறைந்து தேங்கிக் கலங்கிநிற்கும் நிலை கூறப்படுகிறது. கண்ணீர்க்கு வெப்பமுண்டு என்றும் அறிகிருேம்.

(5) புன்னை கடல்நீர்த் திவலைகளை அலைகள் எறிய அரும்பும். குருகு புன்னைமரக்கிளையில் உறங்கும். பல இதழ்களையுடைய தாமரை முதலான நீர்ப்பூக்கள் கண்ணிற்கு உவமை கூறப்பட்டுள்ளது மகிழ்ச்சியளிக்கின்றது.

(6) நள்ளிரவு; இருள் செறிந்த நள்ளிரவு. ஊர் அடங்கிவிட்டது. தாயும் தோழியும் தூங்கிவிட்டனர். தலைவிமட்டும் தனித்துத் தூங்காது தலைவன் பிரிவால் மெலிவுற்றுத் தோழியை நெருங்கி, "இடையிரவோ செறிந்த இருளையுடையதா யுள்ளது ; மக்கள் சொல்லாடல் ஒழிந்து இன்புறு துயில் கொண்டனர். உலகத்திலுள்ள எல்லா உயிர்களும் வெறுப்பின்றித் துயில்கின்றன. நான் ஒருத்தியே உறங்காதிருக்கின்றேன். என்னை ஆற்றுவித்தற்குரிய தோழியே, நீயுமா உறங்குவது? எனக் கேட்பதுபோலக் கூறும் மொழிகள் நெஞ்சத்தை நெகிழச் செய்கின்றன.

(9) தலைமகன் பரத்தையிற் பிரிந்து வாயில் வேண்டிப் புக்கவிடத்துத் தலைவியின் கற்பொழுக்கத்தை வெளியிட்டுத் தலைவியைக் கண்டு மகிழ்தற்கு இயலும் என்று தோழி கூறுகின்றவள், "தலைவனுகிய நின் செயலைக் கண்டு (பரத்தையைச் சார்ந்ததை) தோழியாகிய என்னிடத்தும் கூற நாணுற்று மறைத்தலையுடையவ

ளானாள் தலைவி. ஆதலின், கற்புக்கடம் பூண்டவளானாள். அத்தகையாளது வருத்தத்தை, மூட்டுவாயையுடைய செப்பினுள் தனிப்பட அமைத்த, சூடப்படாத பூவைப்போல உடல் மெலிந்தவளானாள்; அதனால் அறிந்தேன் ;" என்று மொழிதல் எவ்வளவு கம்பீரமும் சுவையும் பொருந்தியுள்ளது!

பசுமையான இலைக்குமேல் உயர்ந்து தோன்றும் திரண்ட காம்பைக்கொண்ட நெய்தல் மலர் கழியில் நீர் மிகுந்தோறும் குளத்தில் மூழ்கிய மகளிர் கண்களை ஒக்கும் எனக் கூறல் எவ்வளவு அழகுற அமைந்துளது!

நெய்தல் மலர்களைப் பரத்தையராகக் கூறி, அம்மலர்கள் மகளிர் கண்களை மானும் என்றமையால் தலைவனுக்குச் சிறப்புடைய தலைவியைப் போன்றனர் என்னும் கருத்துத்தோன்ற அமைத்ததும் உணரத் தக்கது. இங்கு,

" வேயாது செப்பி னடைத்துத் தமிவரும் வீயினன்ன
தீயாடி சிற்றம் பலமனை யாடில்லை யூரனுக்கின்
றேயாப் பழியென நாணியென் கண்ணிங்க
னேமறைத்தான்
யாயா மியல்பிவள் கற்புநற் பால வியல்புகளே "
—(சிற். 374)

என்னும் திருச்சிற்றம்பலக்கோவைச் செய்யுள் அறியத்தக்கது.

(49) " இம்மை மாறி மறுமை யாயினும்
நீயா கியரெங் கணவனை
யானா கியர்நின் னெஞ்சுநேர் பவளே "

எனப் பரத்தையிற்பிரிந்து மீண்டு வந்த தலைமகனிடத்து ஆற்றாமை நீங்கித் தலைவி கூறுதல் அன்னாள் தலைவன் மாட்டுக் கொண்டிருந்த அன்பை வெளிப்படுத்துகின்றது. 'யானாகியர் நின் நெஞ்சு நேர்பவளே' என்னும் அடியால் பரத்தையைக் குறித்து நீங்கியதற்குப் புலந்தமையையும் தலைவனைக் கவர்ந்துகொண்ட பரத்தையிடத் தமைந்த நலன்கள் தன்மாட்டு அமைய அவன் மனத்திற் குகந்தவளாய்ப் பொருந்தியவளாகி அடுத்த பிறவியிலேனும் தலைவன் பரத்தையிற் பிரியாவாறு ஒழுகுதலைத் தலைவி விரும்பியதையும் குறித்து நிற்பது எத்துணைச் சிறப்புடையதாகின்றது.'

முள்ளிச் செடி முள்ளுடையதாயினும் நறும் பூந்தாதினையுடைய மலர்களை யுடைமைபோலத் தலைவன் புறத்தொழுக்க முடையவனாயினும் தலைவி, தன் மாட்டு அன்புடையன் என்னும் கருத்து வெளிப்பட நிற்பதும் இன்பம் பயப்பதொன்றாம்.

(51.) முள்ளிச் செடியின் மலர் காற்றிற் பரத்தற்கு நூலற்று உதிர்ந்த முத்துக்களை உவமை கூறியுள்ளார் குன்றியனார் என்னும் புலவர். களவொழுக்கம் வெளிப்பட்டு ஊரார் அலர் தூற்ற, அஃது ஊரெங்கும் பரவலாயிற்று எனும் குறிப்புப் பொருளும் தந்தது.

(57) தலைவி காப்பு மிகுதியாலும், தன் ஆற்றாமையைத் தாங்க முடியாமையாலும் தோழியை நோக்கித் "தோழியே, 'செய்யத் தகுவனவற்றையும் முறைமையையும் அறிந்து செய்து பிறவிதோறும் தலைவனும் தலைவியுமாகிய இருவராகப் பயின்று வந்த யாம் ஒருவராகித் துன்பத்தினின்றும் நீங்குவதற்குப் பூவானது இடைப்பட்டாலும் பல யாண்டுகள் கழிந்தாற் போன்ற துன்பத்தை உண்டாக்கும். நீரில் வசிக்கும் மகன்றிற் பறவைகளின் புணர்ச்சியைப்போல் பிரித்தற்கு அரியதாகிய குறைவுறாத காமத்தோடு எம்முயிர் போவனவாக,' என்று கூறுவது எவ்வளவு உள்ள நெகிழ்ச்சியை அளிக்கின்றது! உயிரும் நெஞ்சும் ஒன்றுபட்டனவேனும் கடமையறிந்து ஒழுகுவதற்காக இரண்டு மெய் உடையராயினார் என்று கூறுவது உணரத்தக்கது. காப்பு மிகுதிக்கண் தலைவனைப் பிரிந்திருக்கும் தலைவி தனித்து வருந்துதலினும் அவனோடு கூடியுள்ள காலத்திலேயே அவனுயிரும் தன்னுயிரும் ஒருங்கே நீங்கின் பண்டும் பல பிறவிகளில் தலைவனும் தலைவியுமாய்த் தோன்றியவாப் போல் மீண்டும் நட்புடையவராகப் பிறக்கலாம் என்று தோழிக்குக் கூறுதலால் நினைப்பே பிறப்பு என்பது புலனாகின்றது. இங்குத் திருக்குறளுக்குப்(குறள் 361ல்) பரிமேலழகர் எழுதிய உரைநயம் கவனிக்கத் தக்கதாம்.

'பூவிடைப் படினும் யாண்டு கழிந்தன' என்பது, தலைவன் தலைவிக்கிடையே பூவிடையில் பட்டாலும் அக்காலம் பல யாண்டுகள் கழிந்தாற்போல்வதாம் துன்பத்தைப் பயக்கும் என்றதும் உணரத்தக்கது. இதற்கு நீரில் இணை பிரியாது வாழ்வதும், பிரிந்தால் உயிர் துறப்

பதுமான அன்றிற் பறவையை உவமை கூறுதலும் அறியத்தக்கது.

இச் செய்யுளைத் தலைவன் கூற்றுக்கும் நச்சினார்க்கினியர் உள்ளக் கிடக்கைக்கு ஏற்பக் கூறும்பொழுது, "தலைவன் பிரிவன் போலும் என்று கருதிய தலைவி கடுந்துனிகொண்டு பிரியின் இறந்துபடுவேன் எனக் கூறி மாழ்கினள். தலைவன் காதலியை நோக்கி, "நீ பூப் பெய்திய மூன்று நாட் பிரிந்துறைவது ஓர் யாண்டளவு பிரிந்தாற்போலாகின்ற எனக்குப் பிரிவு என்பது எப்படி நேரும்? இது காரணமாக நீ இறப்பின் என் உயிரும் உடன் போவதாக. பின்னும் நாமிருவரும் சேர்ந்து வாழாது பிரிந்து ஒருவராக வாழ்வதினும் இறப்பதே நலம்." இவ்வாறு தலைவன் வற்புறுத்திக் கூறினான் என்று கொள்ளுக.

(81) நிலவும் இருளும்போல அலை கடலும் சோலையும் தோன்றும் எனல் அழகுடையதன்றோ! அலைப் பிறழ்ச்சி கடலை வெண்மை யாக்குதல் நிலவு போன்றதென்றும், அடர்த்தியால் இருண்டு தோன்றும் சோலை இருள் போன்றதென்றும் அறிக. கடலும் மணலுமாகவும் கொள்ளலாம்.

(92) தலைவி காம மிக்க கழி படர் கிளவியாகப் பொழுது கண்டு சொல்லுமிடத்துச் சூரியன் மறையுங் காலத்து வளைந்த சிறகுகளையுடைய பறவைகள் மராமரத்திலுள்ள கூட்டிலிருக்கும் குஞ்சுகளுக்கு வாயில் செருகும் பொருட்டு இறையைத் தம் அலகில் எடுத்துக் கொண்டு விரைந்து செல்லும் என்று இயற்கைக் காட்சி எவ்வளவு அழகுபடக் கூறப்பட்டுள்ளது.

(97) 'என் நலனே ஆனா நோயொடு கானலஃதே' என்றது என் பெண்மை நலம், என்னில் நீங்கி யமையாத வருத்தத்தோடு கடற்கரைச் சோலையினிடத்தது என்று கூறுதல், பண்டு பெண்மை நலங் கனிந்து சோலையிடத்து ஆயத்தோடு விளையாடியதைக் குறித்துநின்றது.

(102) தலைவனைப் பிரிந்த தலைவி தோழிக்கு, "தலைவனை நினைத்தால் என் உள்ளம் வேகும்; நினையாமல் இருப்பின் அத்துயர் என்னால் தாங்கும் அளவை யுடையதன்று. காம நோயோ வானத்தைத் தோய்வது போன்ற பெருக்கத்தை யுடையது. தம் சொற்படி தலைவர்

வாராமையால் சான்றோர் அல்லர்' என்று புலந்து கூறுகின்றாள்.

தலைவர் தன்னிடத்திலுள்ள துன்பத்தை யறியாமை யால் அன்பிலர் என்றும், ஊரார் அலர் தூற்றவும் தலைவர் தனித்துறைதலின் நாணற்றவர் என்றும், உலகியலை மறந்தமையின் ஒப்புரவின்மையையும், மெல்லியளாகிய தன் துன்பத்தை நீக்க வாராமையின் கண்ணோட்டமற்றவர் என்றும், தாம் குறித்த காலத்தில் வாராமையால் வாய்மையற்றவர் என்றும் அதனால் தலைவர் சான்றோர் அல்லர் என்றும் தலைவி கூறியது,

> 'அன்புநா ணொப்புரவு கண்ணோட்டம் வாய்மையொ
> டைந்துசால் பூன்றிய தூண்'

என்னும் குறளை ஞாபகப்படுத்துகின்றது.

(103) நடுங்குதற்குக் காரணமாகிய துன்பத்தைத் தரும் சேற்றினிடத்து மீனுகிய உணவைத் தேர்கின்ற, முள்ளு முருங்கை மலரின் இதழைப் போன்ற மெல்லிய இறகையும் செவ்விய அலகையுமுடைய நாரை எனக் கூறியது வியக்கத்தக்கது.

தன்னிடத் துற்றாரை ஆழ்த்திவிடும் இயல்புடைய தாகிய சேற்றை 'நடுங்கு அளுர் அள்ளர்" என்று கூறியது மிகச் சிறப்பாக அமைந்ததாம்.

(109) இருல் மீனைப்பற்றிக் கூறுகையில் அஃது அலைகளால் கரையில் கொணர்ந்து சேர்க்கப்படுவது என்றும், வளைந்த கால்களையும் முதுகையும் உடைய தென்றும் கூறுகிறார்.

தலைவி, தலைவன் சிறைப்புறமாக விருக்கும்பொழுது தோழியை நோக்கி, 'என் நுதல் தலைவன் அளவளாவிய காலத்தும் இப்பொழுதும் ஒரு தன்மையதே. களவுக் காலத்தில் இடையீடு உள்ளமையால் என் நுதல் பசலை யுற்றுப் பொலி விழந்தது. அலர் எழுந்த காலத்திலும் அவர் வரைந்துகொள்ள வாராமையால் பசலையுற்றுப் பொலி வழிந்தது. ஆதலால், இடையீடு இல்லாதிருத் தற்கு வரைவுவேண்டும்' என்று கூறுகின்றாள்.

(114) தோழி தலைவியைக் குறியிடத்து நிறுத்தி வந்து தலைவனைக் கண்டு அதனைக் குறிப்பாகக் கூறு கிறாள். தோழி, "தலைவ, நெய்தல் நிலத்திலே என்

பாவை(போன்ற தலைவி)யை வளர்த்துவிட்டு உன்னிடம் வந்துள்ளேன். ஆரல் மீனை அருந்திய வயிற்றினையுடைய தாகிய நாரை என் மகளாகிய அப் பாவையின் நெற்றியை மிதிக்கும். அவளைப் போம்படி நீயே ஏவுக'' என்று கூறுதல் நயம் வாய்ந்தது.

உணவுண்ட நாரையாதலின் கனமுள்ள தாகுமாதலால் தலைவி வருந்துவள் என்ற குறிப்பும் அறிதற்பாலதே.

(117) தலைவன் சிறைப்புறத்திலிருக்கின்றான். தோழி இதனை அறிந்தாள். தலைவிக்குச் சொல்லுகின்றாள். அதனைத் தலைவனும் கேட்கின்றான்.

தோழி, தலைவியை நோக்கி, "விற்பவர் தரும் கைவளைகளுள் சிறியனவும் உண்டு. தலைவர் வாராதமையினும் அமைக' என்றாள். இதனால் உடல் மெலிதலும் கை வளைகள் தாமே கழலுதலும் குறிப்பிடப்பட்டதன்றோ! கொக்கின் தோற்றம் மாரிக் காலத்து ஆம்பல் மலர் போன்றது; அதன் பார்வையைக் கண்டு அஞ்சிய நண்டு தாழைவேரின்கண் உள்ள வளைக்குட் செல்லும். அவ்வாறு செல்லும்பொழுது அஃது இடையரால் பிணிக்கப்பட்ட கயிற்றை அறுத்துச் செல்லும் எருத்தினை ஒக்கும்" என்று புலவர் கூறுதல் எவ்வளவு அழகுடையது!

கொக்கின் பார்வைக்கு அஞ்சிய நண்டு வளைக்குள் தங்குதல் போல, ஊரார் அலர் மொழிக்கு அஞ்சித் தலைவன் தலைவியை மணந்து இல்லறம் நடத்துவான் என்ற குறிப்பும் பெற வைத்தது இன்பமூட்டுவதன்றோ?

(118) தலைவி, மாலைக்காலம் வந்ததும் தலைவன் வாராமையால் வருந்தித் தோழியை நோக்கி, "பறவைகளும் விலங்குகளும் தனிமையோடு தங்குமாறு 'நள்' என்னும் ஓசை எழ, அன்பில்லாத மாலைப்பொழுது வந்தது. பலரும் புகுதற்குரிய வாயிலை அடைக்க எண்ணி வினவுகின்றவர் 'வருவீர் உள்ளீரோ' என்று கூறவும் தலைவர் வாரார் ஆயினர்", என்று வருந்திக் கூறுகிறாள்.

இராக் காலத்தில் கதவடைக்குங்கால் போற்றத் தக்கார் எவரேனும் உள்ளாராயின் அவரைக் கூவியுள்ளழைத்துக் கொண்டே கதவடைத்தல் வழக்கம்

என்பது புலனாகின்றது. இதனால் விருந்தினர்ப் பேணும் முறையும் அறியலாம்.

(122) கொக்கு பசிய கால்களையுடையது என்பதும், அதன் பின்புறம் குண்டு நீர் ஆம்பல் குவிந்தாற்போ லிருக்கும் என்பதும் உணரத்தக்கது.

(123) திமில் என்பது மீன் படகுகள். மீன் பிடித்தலை மீன்வேட்டை என்பது வழக்கு. கடற்கரை மணல் நிலவு குவித்தாற் போன்றது. புன்னை நிழல் இருள் திணிந்தாற் போன்றது. புன்னையின் கிளைகள் கருநிறமுடையன.

(125) நாரை சிறை வலியிழந்து, அலைவந்து தோயுமாறு வளைந்த கிளைகளையுடைய மரம் கரையி லிருப்ப, அதனில், அலைதானே கொணர்ந்து தரும் மீனைப் பெற்றாலன்றி வேறு இரையின்றி இருப்பதுபோல், என் பழைய நலனை இழந்து தலைவன் தானே உளமிரங்கிச் செய்யும் தண்ணளியை எதிர்நோக்கி நிற்பள் தலைவி. திரை மீன் கொணரா தொழியுமாயின் நாரை உணவின்றி இறக்குமாறு போலத் தலைவன் தண்ணளி செய்யானாயின் உய்வழியின்றித் தலைவி யிறப்பாள் என்று கூறுதல் அழகமைந்ததாம்.

(163) "கடலே, நான் என் தலைவன் பிரிவால் அரற்றுகின்றேன். 'நள்' என்னும் கங்குலில் நீ ஏன் அரற்றுகின்றனை? நீ யாரால் துயருற்றனை?" என்று தலைவி தன் இரக்க மிகுதி தோன்றக் கூறுவது உள்ளத்தை நையச் செய்கின்றது. வெள்ளை - வெள்ளாடு என்பது அறிக.

(166) தலைவிக்கு இனிய சுற்றத்தார்கள் சூழவிருப்பினும் தலைவனின்மையால் ஊர் புலம்பாயிற்று என்பதும், மீனைப் பெயர்த்தாலும் நாரை அம்மீனுள்ள இடத்தே சென்று அதனை ஆர்தல்போலத் தாயர் முதலியோரால் தலைவி இற்செறிக்கப்பட்டாலும் தலைவியிருக்குமிடத்துத் தலைவன் போந்து இன்பமுறல் வேண்டும் என்பதும் அறியத் தக்கன.

(172) துன்பத்தைத் தரும் மாலைக்காலத்தில் வாவல் (வௌவால்) பழுமரம் படரும்.

தா.- வலிமை; நொ - மென்மை என உபயோகித்திருத்தல் அறிக.

" ஏழூர்ப் பொதுவினைக் கோரூர் யாத்த
உலைவாங்கு மிதிதோல் போல "

என்பதோடு,

' எழுகளிறு மிதித்த ஒரு பழம் போல'—(குறுந். 24) என்பதை ஒப்புநோக்குக. 'ஒன்றுக்கு ஏழுகூறுதல் மரபு'

(175) பல இடங்களிலும் பறந்து செல்லும் வண்டுகள் பருவத்தேனை உரிய காலத்திலே உண்ணவந் தடையும். அதுவே போல் தலைவன் பலவகை முயற்சிகளின் பொருட்டு என்னைப் பிரிந்து செல்வான் எனினும், உரிய காலத்திலே வந்து அளவளாவுவானென்னும் எண்ணம் தலைவிக்கு உண்டு. ஆதலின், இரங்கேன் என்றாள் எனப் பிறர் கூறுவது கூறுக. அவர்கள் கூறும் அம்பல் என்ன துன்பம் செய்யும்?

தோழி :—உன் ஆற்றாமை ஊரவர்க்குப் புலனாக அம்பல் கூறுகின்றனர். ஆதலின் நீ ஆற்றுக.

தலைவி :—தலைவனுக்காக நான் இரங்கவில்லையெனினும் என்னையும் அறியாது என்மாட்டு வேறுபாடுகள் உண்டாகின்றன. அவை கண்டு பிறர் கூறுவன கூறுக. அவற்றால் என் காமம் வலியுறுமேயன்றி ஏதமுறாது. பின் ஏன் வருந்துகின்றேன் எனில், பிறர் எந்நிலை குறித்துக் கூறுதலைக் கூறுக; அதுபற்றியும் வருந்திலேன்; பழிமொழியைக் கூறக் காரணம் என்ன? அதனால் வருந்துகிறேன்.

நாடக அமைதிபெற்ற இம்முறையை அறிதலும் வேண்டும்.

(177) "தோழி, கடல் ஒலியும் அவிந்தது; கானல் மயங்கிற்று; கழி பொலிவிழந்தது; அன்றிலும் நரலும்; ஆதலின், காலம் கருதித் தலைவர் வருவர்கொல்!" எனத் தலைவி கூறுவது நெஞ்சத்தைக் கரைக்கின்றது.

(184) தாம் கண்டறிந்ததொன்றை மறைத்துப் பொய்க்கரி கூறும் இயல்பு அறிவானமைந்த சான்றோர்க்கு இல்லை எனும் கருத்து,

" அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க் கில்லை "

என்னும் அடியிற் கூறப்பட்டுள்ளது.

'தன்னெஞ் சறிவது பொய்யற்க பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்'

என்னும் குறள் இங்கு அறியத்தக்கது.

'மயில்கண் ணன்ன மாண்முடிப் பாவை
நுண்வலை பரதவர் மடமகள்
கண்வலைப் படூஉங் கான லானே'

என்னும் அடியில் நுண்வலைப் பரதவர் மகளின் கண்வலையில் நெஞ்சம்பட்ட கானலான் என்ற அழகு நோக்கத் தக்கது.

195 'சுடர் சினம் தணிந்து குன்றஞ் சேர
படர் சுமந் தெழுதரு பையுண் மாலை.'

'மாலை படர் சுமந் தெழுந்தது' என்றது இலக்கணை. இஃது ஆங்கிலத்தில் Transfered epithet.

'என்னைப் பாவைபோல் கண்டார் தலைவர். வேறுபாடுடைய என்னை இப்பொழுது அவர் கண்டிலர்; கண்டால் வருந்துவர். அவர் யாண்டையரோ' எனத் தலைவி இரங்கிக் கூறுதல் அறியத்தக்கது.

(205) மழை பெய்தால் அன்னம் வானில் உயரப் பறக்கும். இருபுறமுமுள்ள சக்கரங்கள் அலைநீர்த் துவலையால் நனைய வெண்டேர் விரைந்து செல்லுதல் இரு சிறகுகளும் மழைத்துளியால் நனைய, அன்னம் பறந்து போதலைப் போன்றது எனக் கூறப்பட்டிருத்தல் அழகுடையதாகும்.

(226) "தலைவனோடு நான் அளவளாவியபின் நான் என் நலனை இழந்தேன். தலைவனது பிரிவினால் என் மேனி நலமழிந்தது. தலைவன் என் வனப்பிற்கு மயங்கிய படியை அவன் எனது நலன் பாராட்டியவழிக் கூறக் கேட்டறிந்தவளன்றோ நான்?" எனல் மிகவும் கனிவு செய்கின்றது.

இரவு முழுவதும் அலைகளால் மோதப்பட்ட தாழையினது வெள்ளிய பூ நாரையைப்போல் மலரும் என்கிறார்.

"நெய்தற் குருகுதன் பிள்ளையென் றெண்ணி
நெருங்கிச் சென்று, கைதை மடற்புல்கு
தென்கழிப் பாலை யி னுறைவாய்" (தேவாரம்)

" அருகு கைதை மலரக் கெண்டை, குருகு என்
றஞ்சுங் கூடலூரே" —(திவ்வியப்பிரபந்தம்)

என்பனவும் இங்கு அறியத்தக்கன.

(236) தலைவன் தோழியை நோக்கி, "யான் பிரிய வேண்டியதாயுள்ளது. நீ இவளை வருந்தாது தேற்றிப் பாதுகாப்பாயாக' என்றான். அதற்குத் தோழி, 'நீ இவளைக் கைவிட்டாய் என விடுக்குங் காலம் வருவதாக. புதிய நாரை மீன் உணவு கொள்ளும் இடமறியாது மணற்குன்றிலுள்ள புன்னைமரக் கிளையில் தங்கி யிருக்கும். அதுபோல் நீ இவளை அறியாய்; பிரிய எண்ணினாய். பிரிந்தால் உயிர் வாழாளே இவள்! ஆதலின், நீ இவளை விட்டுப் பிரிவதாயின் நீ உண்ட நலத்தினைத் தந்து செல்வாயாக," என்றாள்.

(243) அடும்பு நெய்தல் நிலத்து ஒரு கொடி. மானின் குளம்பைப் போன்ற பிளவுபட்ட இலைகளையுடையது. குதிரையின் கழித்து விடும் மாலையின்கண் உள்ள மணியைப் போன்ற ஒள்ளிய பூவை யுடையது எனல் அறிவின் நுட்பத்தைப் புலப்படுத்துகின்றது.

'கான லடும்பின் கவட்டிலைகள் — மானின்
குளம்பேய்க்கும் நன்னாடன்' என்பது நளவெண்பா.

(245) வாளரம் போன்ற விளிம்பையுடைய கொழுவிய மடலையுடைய தாழையானது வரிசையாகவுள்ள வேல்களை நாட்டிய் வேலியைப் போலப் பயன் தரும்.

இயல்பாக அமைந்த தாழை செயற்கையா லமைந்த வேலிபோல் தோன்றிய தெனலால் தோழி கூறுமலே தலைவி இயல்பாகவே தலைவன் கொடுமையை மறைத்து ஆற்றுவள் என்பது பெற நின்றது. என்னெனின், புலம்பன் கொடுமை வெளிப்படின் நலம் இழந்ததினும் இன்னாது அன்றோ!

(246) 'நெய்தலின் இலை களிற்றின் செவியைப் போன்ற பசிய இலை' என்கிறார். 'கடற் காகம் கழியிலுள்ள இலை நீக்கித் துழாவி மீன் தேரும்' என்கிறார்.

(269) உப்புப் பயிர் செய்யும் பாத்திகளை 'உப்பு விளை கழனி' (உப்பளம்) என்கிறார்.

'தந்தை சுறாமீன் வீசியதனால் உண்டான புண் ஆறி மீண்டும் மீன் வேட்டைக்கு நீலநிறத்தையுடைய பெரிய

கடலினிடத்தே புகுந்தான்; தாயோ உப்பை விற்று வெண்ணெல்லைக் கொணர்தற்கு உப்பு விளையும் அளத்திற்குச் சென்றுள்' எனப் பரதவர் தொழில் கூறப்பட்டுள்ளது.

(290) காமத்தைத் தாங்கி ஆற்றல் வேண்டும் என்பார் அதன் தன்மை யறியாதாரோ அல்லது அது தாங்கும் வன்மையுடையாரோ? யாவர்?

'நுரை, கல்லில் மோதுந்தோறும் சிறிது சிறிதாகக் கரைதல் போலத் தலைவர் பிரிவை எண்ணுந்தோறும் உயிர் தேய்ந்தழியும்' என்கிறார்.

'கல்பொரு சிறுநுரை போல' என்ற உவமையால் ஆசிரியருக்கு, 'மீனெறி தூண்டிலார்' 'அணிலாடு முன்றிலார்' என்பபோல் பெயருண்டாயிற்று.

(296) தலைவன் சிறைப்புறமாக வுள்ளான். தலைவி தோழியை நோக்கித் தலைவனைக் காணும்பொழுதினும் காணாப்பொழுது பெரிதாகலால் வருந்தி, "தோழி, புன்னையின் அசைந்த கிளையினிடத்திலிருந்த அழகிய நாரை, மிக்க கழியிடத்துள்ள சிறுமீன் உணவை வெறுத்ததாலை வயலிலுள்ள கள் மணக்கின்ற நெய்தற் பூவை நெற் கதிரொடு விரும்பும் அத்தகைய தண்ணிய அழகிய துறையை யுடையவன் தலைவன். அத்தகையோனைக் கண்டால் அவன் முன்னே நின்று, வளையை அணிந்த தலைவி இத்தன்மைய ளாகும்படி பிரிந்து செல்லுதல் உமக்குத் தகுமோ? என்று துணிந்து கடுமையான சொற்களைக் கூறி இடித்துரைத்தலை மொழியாது பாது காப்பாயாக," என்றாள்.

(299) நீரின் பின் நிலம் தோன்றிற்று என்றல்.

நிலத்தில் பழமையானது புணரி என்பதனை 'முதுநீர்ப் புணரி' என்பதால் உணரவைத்தார்.

(303) 'கழியினிடத்தில் மீனைத் தேர்ந்துண்டு கரையினிடத்துள்ள தாழையினடியில், கடலலைகள் இரைப்ப, நாரை துஞ்சும்' என்கிறார்.

(304) பரதவர் மீன்களின்மேல் எறிய உபயோகிக்கும் ஆயுதம் எறியுளி என்பது.

'எறியுளி கொண்டு சுறாமீனின்மீ தெறியக் கரையிலுள்ள குறுகிய கால்களையுடைய அன்னங்களின் வெள்ளிய தொகுதி இரியும்' என்கிறார்.

'பகை தரு நட்பு' என்பது ஓர் அரிய தொடர். தலைவனிடத்துத் தலைவி கொண்ட நட்பு அவன் பிரிதலால் மேனியழகு கெடுதல், தோள் நெகிழ்தல், புலம்பு வந்தலைத்தல் முதலாயின தருதலின் 'பகைதரு நட்பு' என்றார்.

(306) தலைவி காப்பு மிகுதியால் வருந்துகிறாள். அந்நிலையில் வரையாது வந்து ஒழுகும் தலைவனிடம் சிறிது வேறுபாடுடையளாகின்றாள் தலைவி; ஆனால் அந்த வேறுபாடு அத்தலைவனைக் கண்டால் மறைகின்றது. அதனால் அவள் நெஞ்சை நோக்கிக் கூறுகின்றாள் :—

"மனமே, ஓசையால் மென்மையானவும் பொருளால் இனியனவும், விரும்பத்தக்கனவுமான மொழிகளைத் தலைவனிடத்து மொழியேல் என்று நான் உனக்குச் சொன்னாலும், அழகிய மாமரத்தினது தாதுகள் பொருந்திய மலரினிடத்து வண்டுகள் பல ஒருங்கே வீழ்கின்ற குளிர்ந்த கடற்கரைத் தலைவனைக் கண்டால் மறந்துவிடுகின்றாயோ?"

(313) சிறு வெண் காக்கை வெள்ளமிக்க கழியினிடத்து மீனாகிய உணவைத் தேடியுண்டு மலர்மணம் வீசும் சோலையினிடத்துத் தங்கும் என்பது, களவு ஒழுக்கத்தில் ஒழுகுந் தலைவன் வரைந்துகொண்டு தன் மனையிலிருந்து இல்லறம் நடத்துவான் என்பதைக் குறித்து நிற்பது அறிதற்பாலது. ஏனெனில், நட்பு நன்றாகப் பொருந்தியது; பிரித்தற் கரியது; என்னையோ எனின் பால்வயப்பட்டு நின்ற நட்பாதலின் என்க.

(316) கெடாத வலிமையையுடைய கடலால் அலைக்கப்பட்ட மணல் விரிவிய கடற்கரையிலே விளையாட்டையுடைய பெண்கள் ஒரு தன்மையாக அலைக்க, பொருந்திய நண்டினது வருத்தம் மிக்க செலவை, உயர்ந்து வருதலையுடைய விரிந்த அலை அந்நண்டைக் கொண்டுசெல்லுதலால் நீக்கும்.

மகளிரால் அலைக்கப்படும் நண்டை அலை கொண்டு செல்லும்; அதனால் அந்நண்டின் துன்பமும் விரைந்த நடையும் ஒழியும்.

தலைவி தாய்க்குப் பயந்து வருந்துகின்ற மிக்க வருத்தத்தை வரைந்து கொள்ளுதலால் நீக்குதற்குரியன்

தலைவன். அதனால் அலர் நீங்கும் என்பது கொள்ளக் கிடந்தமை அறிதற்பாலது.

(318) 'எறிகின்ற சுறுமீன்கள் மிக்கு விளங்கும் கடற்பரப்பினிடத்து வாசனை மிக்க ஞாழற் பூவோடு புன்னை மலரும் விரவி வெறியாடு களம்போலத் தோன்றும்' என்கிறார் புலவர்.

தலைவன் கள்வனும், கடவனும், புணைவனு மாவன் என்றது, பிழையாத சூளைச் செய்த வஞ்ச நெஞ்சன் என்பதனாலும், வஞ்சினத்தை நிறைவேற்றும் கடப்பாடுடையவனாதலாலும், தலைவிக்குப் புணைபோன்றவனாதலாலும் என்க.

(320) பரதவர்கொண்ட மீன்வற்றலும், இறால் மீனின் வாடிய வற்றலும் கலந்து நிலாப்போன்ற வெள்ளிய மணலெல்லாம் நாறும்படி பரக்கும்.

(324) தோழி :—தலைவ, தலைவி இற்செறிக்கப்பட்டாள். ஆதலின் நீ அவளைப் பகலில் காணல் இயலாது. ஆகவின் நீ எப்பொழுது வரைந்துகொள்வை?

தலைவன் :— இரவுக் குறியில் வந்து தலைவியோடு அளவளாவிப் பின் வரைந்துகொள்வேன்.

தோழி :—அந்தோ ! அறியாய் போலும்! வழியின் ஏதம் அறியாது வருகின்றாய் எனத் தலைவி அஞ்சுவள் ; வரைந்துகொள்க. நீ அன்பால் வருதலின் அதனைத் தடுத்தலும் தக்கதன்று; உனக்கு ஏதம் வருமோ எனத் தலைவி வருந்துதலினால் இரவுக்குறி நேர்தலும் தக்கதன்று. இரட்டைப் பிள்ளைகள் நஞ்சுண்டால் இருவர் திறத்தும் ஒரு தாய் வருந்துவதுபோல யான் இருவர் திறத்தும் இரக்க முடையேன். இரு குழந்தைகளின் நஞ்சையும் நீக்கும் மருந்து தருதலேபோல் இருவர்க்கும் நன்மை பயக்கும் வரைவினைப் புரிந்தருள்.

இக்கவி பாடிய ஆசிரியர் 'கவை மகன் நஞ்சுண்டாங்கு' என்னும் உவமையால் பெயர் பெற்றார்.

(325) "'சேறும்' 'சேறும்' என்று அவன் சொன்னதை முன்பு அவன் கூறிய பொய்ச் செலவேபோல எண்ணி என் பக்கனின்றும் நிலைபெற்று நீங்குக என்று கூறினேன். அவன் யாண்டுளனோ? நகில்களினிடையேயுள்ள இடம் அன்னான் பிரிவால், அழுத என் கண்ணீ

ரால் நிறைந்தது; பெருங் குளமாயிற்று; கரிய காலை யுடைய வெள்ளிய நாரை உணவைத் தேடி யுண்ணும் பெரிய குளம்போ லாயிற்று," என்று வருந்திக் கூறல் நோக்கத்தக்கது.

(328) சிறிய மலரையுடைய ஞாழல் மரத்தின் துவரின்கண் அமைக்கப்பட்ட வளையினிடத்திலுள்ள நண்டினது சிறிய வீடுகள் அழியும்படி அலைகள், குறுந் தடியா லடித்த முரசத்தைப்போல, வீசி முழங்கும்.

தலைவன் தண்ணளி செய்த நாட்கள் சிலவே; அலரோ, விற்படையைக் கொண்ட படைகளையுடைய விச்சியர்களுக்குத் தலைவன் அரசர்களோடு போர்செய்த காலத்தில் பாணர்களது புலியின் பார்வையை ஒத்த நிலையினாற் காணப்பட்ட ஆரவாரம் மிகுந்த குறும்பூரினிடத்துள்ளார் செய்த முழக்கத்தினும் பெரிய முழக்கத்தை யுடையதாயிற்று. தலைவன் தண்ணளியையே தலைவி பற்றுக்கோடாகக் கொண்டிருக்க அது கெடும்படி ஊரார் அலர் தூற்றுகின்றனரே என இரங்குகின்றதை விளக்குவது.

ஞெண்டு, ஞண்டு, நண்டு என்பது அறிக.

(334) 'தலைவன் பிரிவானாயின் நாம் இழக்கும் பொருள் உயிரே; மற்றில்லை' எனத் தலைவி கூறல் அவளது உறுதியைச் சுட்டுகின்றது.

(340) 'அவர் இருந்த என் நெஞ்சு' எனத் தலைவி கூறிக்கொள்ளும் தொடர் தலைவியின் உள்ளப் பண்பை இனிது விளக்குகின்றது.

கடற்கரைப் பரப்பிலே நின்ற மலரோடுகூடிய தாழை கழி பெயருகின்ற இடத்தில் தளர்ந்து பெயரும் பொழுது தானும் பெயர்ந்து போதல்போல என் நெஞ்சம் வருந்துகின்றது.

என் நெஞ்சம் காதலர்ப் படர்தலும், என்னோடு டாதலும், வரைவில் விழைதலும், வரும் வழியின் ஏதம் கருதி வருந்துதலு முடையது.

இவ்வாறு வரும் தலைவி கூற்று உள்ளத்தைக் கனிவிக்கின்றது.

(341) பெரியோர் தம் நெஞ்சத்திலே நினைத்த மேற் கோளினை நிறைவேற்றுவர் என்பதை,

"தலைவி, முதலில் அன்புடைய தலைவர் தாம் மேற்கொண்ட வினையை முற்றச் செய்யாவிடினும் வருவர் என்று எண்ணினுள். பின், 'வினை முடித்தே வருவர் ஆதலின் ஆற்றியிருத்தல் வேண்டுமெனத் துணிந்தாள். பின் தன் நறுகண்மையால் வாழ்வேன் என்றுள். இவ்வாறு பல கூறி இரங்கினுள் என்பதால் உணரலாம்.

(349) தலைமகன் பரத்தையிடமிருந்து வந்தால், "நம் நலம் தா' எனக் கேட்போம் எனத் தோழி கூறினள். அது கேட்ட தலைவி, தாம் உற்ற வறுமைத் துன்பத்திற்கு அஞ்சி விரும்பி இரந்தவற்றைக் கொடுத்துப் பிறகு அங்ஙனம் கொடுத்தவற்றைத் தருக என்று சொல்லுதலைக் காட்டிலும் நமது இனிய உயிரை இழத்தல் இன்னுதோ?" என்று தலைவி மறுமொழி தந்தனள்.

(351) விரை தலையுடைய வளைந்த கால்கள் வாய்ந்த வளையின்கண் வாழும் நண்டு தன் கூரிய நகத்தினுல் கீறிய ஈரங்கொண்ட மணலோடு கூடிய நீருள்ள வழிச் சிதையவும் இமுமென்னும் ஓசையுண்டாகவும் இடிமுழக்கத்தையுடைய அலைகளை உடைய துறை.

புன்னை மலரின் மணமும் புலாலின் நாற்றமும் ஒருங்கு வீசும் சேரி என்றுர்.

தலைவன் வரைவுக்கு உடன்படும் தமரும் வறிதே அலர் தூற்றும் ஆயமும் எனக் குறித்தலையும் அறிக.

(376) வேனில் காலம் :—நிலைபெற்ற உயிர்த்தொகுதியினரால் முற்ற அறியப்படாத அணுகுதற்கரிய பொதியமலையின்கண் தெய்வங்களையுடைய பக்கத்தில் வளர்ந்த சந்தனத்தைப்போலத் , தலைவி குளிர்ச்சியுடையவள்.

பனிக்காலம் :—சூரியனுடைய கதிர்கள் மறையக் குவிந்து அழகிதாக அசைகின்ற வெயிலை உட்பொதிந்த தாமரை மலரின் உள்ளிடத்தைப்போலத் தலைவி சிறிது வெம்மையை யுடையள்.

எனவே, எக்காலத்தும் தலைவி அணைதற்கினியள் என்று தலைவன் கூறல் அறியத்தக்கது.

(397) அரும்புகள் முதிர்ந்த ஞாழலின் முட்டையைப் போன்ற திரண்ட மலர்களை, நெய்தலது கரிய மலரிலே பெய்வதைப்போலக் குளிர்காற்றுத் தூவும்.

கொண்டு புளிக் குழம்பு சமைத்துத் தன் கணவற்கு இடு கின்றாள்; அவன் அதனை "வாளேரமுதம் புரையுமால் எமக்கு" என உண்கின்றான். கணவன் இனிதென்று உண்பதால், அவள் உள்ளத்தே மகிழ்ச்சி தோன்றுகிறது. நாணத்தால் அதனை மறைக்கினும் மகிழ்ச்சி முகத்தே நுண்ணிதாய்ப் புலப்படுகின்றது. இதனை இனிது கண்டு பெரிது மகிழ்ந்தாளாதலின், செவிலி நற்றாய்க் குரைத் தாள். அது கேட்டவழி, நற்றாய்க்கும் சூழ இருந்தார்க் கும் தலைமகள் புளிக்குழம்பு அட்டவகையை அறிதற்கு அவா உண்டாகின்றது. அதனால், அதனை அட்டவகை யைக் கூறலுற்ற செவிலி, "முறுகக் காய்ந்த தயிரைத் தன் காந்தள் போலும் விரலால் பிசைந்தனள்; அது போது மேலாடை சிறிது நெகிழ்ந்தது; பெருநாணினளா தலால் அதனை உடனே எடுத்து அணிந்தாள். தயிர் பிசைந்த கையைக் கழுவுதற்குக் காலமில்லை" என்கின் றாள். இது கேட்டு அனைவரும் மகிழ்ச்சியால் நகைக் கின்றனர். செவிலி, மேலும் சொல்லத் தொடங்கி, "தான் பிசைந்து அமைத்த புளிக்குழம்பிற்கு நறுமணம் கமழும் தாளிதம் செய்யலானாள்" என்பாள், "குவளை யுண்கண் குய்ப்புகை கமழ" என்கின்றாள். எனவே, தலைவி குனிந்தவண்ணமே தாளிதம் செய்தாள் என்பதும், அதன் புகை அவளது ஒளி முகத்தில் தோய்ந்து, மையுண்ட கண் ணிற் படிந்தது என்பதும், அதனால் கண்கள் நீர் படிந்து நீரால் நனைந்த குவளை மலரை யொத்தன வென்பதும் பிற வும் பெறப்படும்.

இச்செவிலியே, பிறிதொருநாள் தலைமகளது கடி மனைக்குச் சென்று வருகின்றாள். முன்பு சென்று வந்த போது, தலைமகளது அடிசிற் றொழில் வன்மையை வியந்து கூறினாளன்றோ? இதுபோது, தலைமகனது அயரா அன்பினை வியந்து பேசுகின்றாள்.

"கானங் கோழிக் கவர்குரற் சேவல்
ஒண்பொறி எருத்தின் தண்சிதர் உறைப்பப்
புதல்நீர் வாரும் பூநாறு புறவில்
சீறூ ரோளே மடந்தை; வேறூர்
வேந்துவிடு தொழிலொடு செலினும்
சேந்துவரல் அறியாது செம்மல் தேரே"

எனவரும். இஃது, அவள் நற்றாயிடம் சொல்லியதாகும். " தலைவன் தலைவியைப் பிரியாது உறைகின்றான் ; எச் செயல் குறித்தும் பிரிந்து செல்வதில்லை ; அரசனது ஏவல் கடத்தற் கரிதாகலின், அதன்பொருட்டு மாத்திரம் அரிதிற் சிலகால் வேற்றூர் போவான் ; போயினும் உடனே மீள்வான் " என்பது இதன் கருத்து.

தலைமகள் முல்லை நிலத்துச் சீறூரில் உள்ளாள் ; முல்லைப் புறவில் புதல்கள் பல இருக்கின்றன ; அவற்றில் மழைத் துளி நிறைந்து சொட்டுகிறது ; அப்புதலின்கண் வாழும் கானங் கோழியின் கழுத்திடத்தே அங்கே சொட்டும் நீர்த் துளிகள் துளிக்கின்றன என்று செவிலி கூறுவது, தலைவியது திருமனையின் செல்வச் சிறப்பையும், தலைவன் அருள் நிரம்பிய அறச் செயல் புரிவதையும் குறிக்கின்றது.

தலைமக்கள் களவொழுக்கம் பூண்டு ஒழுகும் காலத்தும் தலைமகன் பொருள் குறித்துப் பிரிவ துண்டென மேலே கூறினோமன்றோ ? அப் பிரிவை ஆற்றி யிருத்தலும் தலைமக்கட்குக் கடனாகும் ; முல்லைத் திணைக்கு உரியது மாகும். அந் நிலையில் இவர்கள் நிகழ்த்தும் கூற்றுக்கள் பலவும் ஈண்டு விரிக்கலுறின் பெருகும்.

இனி, இம் முல்லை யொழுக்கத்தின்கண் நிகழும் கூற்று வகைகளுள் பலவகைக் கருப் பொருள்கள் காணப் படுகின்றன. இவ் வொழுக்கம் முல்லை நிலத்தேயன்றி, சிறுபான்மை, பிற நிலங்களிலும் நிகழும். அக்காலத்தே, ஆங்குத்தோன்றும் கருப் பொருள்களே அவர் கூற்றுக் களிற் காணப்படும். ஆயினும், முல்லைத் திணைக்கென்றே வரையறுத் தோதும் கருப்பொருள்கள் சிலவற்றை ஈண்டுக் கூறுகின்றோம்.

முல்லைத் திணைக்குக் கார்ப்பருவமும் மாலைப் பொழுதும் முதற் பொருளாக வருமாதலின், மழையும் கானமும் முதற்கண் தோன்றுவனவாகும். இம்மழை குன்றிடையும், கானத்தும் மின்னியிடித்துப் பெயல் மிகுவது பாட்டுத்தோறும் பெரும்பாலும் வருகிறது. இடி முழக்கம் நன்கு இசைக்கப் பெறுகிறது. இடி முழக்கம் கேட்டுப் பாம்பினம் அஞ்சிப் பனிக்கும் என்பது," பொறி வரி வெஞ்சின அரவின் பைந்தலை துமிய உரவுரும்

உரறும்" (குறுந். 190) என வருவது முதலிய பல பாட்டுக்களில் பாடப்பெறுகின்றது. இடி முழக்கம் சில போழ்துகளில் முரசு முழக்கத்தைக் காட்டி இசை கொள்ளும்; இது, "மாமழை இன்னிசை உருமினம் முரலும்" (200) எனவும், "ஊழின் கடிப்பிகு முரசின் முழங்கி இடித் திடித்துப் பெய்தினி வாழியோ பெரு வான்" (குறுந். 270) எனவும் கூறப்படுகிறது. நீர் நிரம்பிய முகில், குன்றங்களில் மெல்லச் சென்று படிந்து பெருமழை பெய்வதைக் கண்ட தோழி, அதனைச் சூல் நிரம்பிய மகளிர் செலவுக்கு ஒப்புக் கூறித் தலைமகளைத் தேற்றுகின்ருள். அது, "நிறைபொறுத் தசைஇ, ஒதுங்கல் செல்லாப் பசுப்புளி வேட்கை, கடுஞ்சூல் மகளிர் போல நீர் கொண்டு, விசும்பு இவர்கலாது தாங்குபு புணரிச், செழும்பல் குன்றம் நோக்கிப், பெருங்கலி வானம் ஏர்தரும்" (287) என வருகின்றது.

இவ்வாறு மழை பெய்யுமிடத்து, உண்டாகும் மின்னல் இரவுக் காலத்துப் படரும் காரிருளைக் கெடுக்கும் என்பது அனைவரும் அறிந்த செய்தி. "தாழிருள் துமிய மின்னி" (270) என்று இக் குறுந் தொகை குறிக்கின்றது. மழை தவழும் குன்றம் "மழை விளையாடும் குன்று" (108) எனப்படுகின்றது. மழை நீரால் கானம் வளமுற்றுத் தழைப்பதாதலால், அது, "கார்புறந் தந்த நீருடை வியன்புலம்," (162) என்று சிறப்பிக்கப் பெறுகிறது. கார் காலத்து மழை பெரும் பாலும் மாலையில் வருவது; அதுபோது, கார் மழை விசும்பை மூடிக்கொள்வதால் இருள் மிகுகிறதன்றே? அதனை,

"சேயுயர் விசும்பின் நீருறு கமஞ்சூல்
தண்குரல் எழிலி ஒண்சுடர் இமைப்பப்
பெயல்தாழ் பிருளிய புலம்புகொள் மாலை"

(314) என்று இக் குறுந்தொகை கூறுகின்றது,

மழை பெய்யுங்கால் உழவர் இனிது உழுதல் முடியாது; ஆகவே உழவு மாடுகள் ஓய்ந்திருக்கும் என்பது உலகறிந்தது. இது, "உவரி ஒருத்தல் உழாது மடிய...... இடியொடு மயங்கி இனிது வீழ்ந்தன்று" மழை என இயம்பப்பெறுகிறது. மழையில்லாமையால் 'புழுதி

படிந்து தோன்றும் துறுகற்கள் மாசு படிந்த யானை போலத் தோன்றுமென்பது, "மழை கழூஉ மறந்த மாயிருந் துறுகல், துகள்சூழ் யானையின் பொலியத் தோன்றும்" (279) என்ற அடிகளால் காட்டப் பெறுகின்றது.

மழைபெய்த கானத்தில் மானினம் துணையொடு கூடி, பள்ளங்களில் நிற்கும் நீர் பருகி இனிது திரிகின்றன. இச்செய்தி "வன்பரல் தெள்ளறல் பருகிய இரலைதன், இன்புறு துணையொடு மறுவந்து உகள" (65) என வருகிறது. களிறுகள் பிடிபுணர்ந்து மலையகத்தே ஒடுங்கிக் கிடக்கின்றன. மாலைப்போதில், ஆனினம் தாம் மேய்ந்திருந்த கானத்தின் நீங்கி மனையகம் நோக்கி வருகின்றன. வருபவை மனையகத்தேயுள்ள கன்றுகளை யுள்ளிக் கனைத்துக்கொண்டு வரும்; கன்றுகளும் அவற்றின் வரவு நோக்கித் தலை நிமிர்த்திப் பார்த்துக் கதறும்; தொழுவத்திடத்தே ஏறுகள் தம் கழுத்தில் யாத்த மணியொலிக்க இயங்கும். இவை, "புலம்பயிர் அருந்த அண்ணல் ஏற்றொடு நிலந்தூங்கு அணல வீங்கு முலைச் செருத்தல், பால்வார் குழவி யுள்ளி நிரை யிறந்து, ஊர்வயிற் பெயரும்" (344) என வருவது போல்வனவற்றால் இனிது விளங்குகின்றன.

முல்லை நிலத்தவர், காடு கெடுத்துப் பண்டையாக்கிய கொல்லையை நன்கு உழுது வரகு முதலியவற்றை விதைப்பர். வித்தற்கு விதைகொண்டு செல்லுமவர், திரும்புகாலையில், விதை கொண்டுபோன வட்டி நிறைய முல்லைப் போதுகளையும் பிற மலர்களையும் நிரம்பக் கொண்டு வருவர். அவர் தலையிலும் முல்லையால் தொடுக்கப்பெற்ற கண்ணிகள் இருந்து நறுமணம் கமழும். ஆனினத்தை மேய்க்கும் இடையர், அவற்றை ஓரிடத்தே இருத்தி, அவ்வானினம் கறந்த பாலைக் கொண்டுவந்து தந்து, அது நிறையக் கூழ் கொண்டு செல்வர். இவை, "முதைப்புனம் கொன்ற ஆர்கலி யுழவர் விதைக்குறு வட்டிபோதொடு பொதுளப், பொழுதோ தான்வந் தன்றே" (155) எனவும், "மறியினத் தொழியப், பாலொடு வந்து கூழொடு பெயரும் ஆடுடை இடைமகன் சென்னிச், சூடிய வெல்லாம் சிறு பசு

முகையே" (221) எனவும் வருவன முதலாயவற்றால் அறியப்படுகின்றன.

இந்நிலத்தே, பலவகைப் பூவினம் காணப்படு மெனினும், இக்குறுந்தொகை சிலவற்றை எடுத்துச் சிறப்பிக்கின்றது. அவற்றுள், முல்லை, கொன்றை, பித்திகம், பீர்க்கு, கருவிளை, ஈங்கை, குருந்து, காயா, பிடவம், அவரை என்பன சிறந்தோதப் பெறுகின்றன. முல்லை கற்புடை மகளிர்க்குச் சிறப்பாக உரியது; இதன் முகை மகளிர் பற்கு உவமையாகக் கூறப்படுவதாதலால், முல்லை யரும்பியவழி அதனை நகைப்பதாகச் சான்றோர் புலனெறி வழக்கம் செய்துள்ளனர். "முல்லை மென் கொடி எயிறென முகைக்கும்" (186), "பூங்கொடி முல்லைத் தொகுமுகை இலங்கெயிறாக நகுமே, தோழி, நறுந்தண் காரே" (126) "முல்லை! நீ நின் சிறு வெண் முகையின் முறுவல் கொண்டனை தகுமோ" (162) என வருதல் காண்க. பூத்தமுல்லை, பூனை சிரிப்பது போன்று உளது என்பர்; "வெருக்குப் பல்லுருவின் முல்லை" (240) என்றும், "பூத்த முல்லை வெருகு சிரித்தன்ன பசுவீ" (210) என்றும் சான்றோர் உரைத்தலால் அறியலாம். முல்லையரும்பு சிவந்திருக்கும் என்பர். தலைமகன் மேனியும், தலைமகள் நுதலும் முல்லையின் நறு மணம் கமழும் என்று சான்றோர் கூறுகின்றனர். இக் கருத்து, "மணந்தனன் மன்நெடுந்தோளே, இன்று முல்லை முகைநாறும்மே" (193) எனவும், "முல்லைப் பசுமுகைத் தாது நாறும் நறுநுதல்" (323) எனவும் வரு வனவற்றால் அறியப்படுகிறது. இம்முல்லை மாலைப் போதில் மலருவது; "பாசிலை முல்லை யாசில் வான்பூச், செவ்வான் செவ்வி கொண்டன்று" (108) என வருவது காண்க. தளவம் என்பது முல்லையினத்துள் ஒன்று. இதுவும் கார்ப்பருவத்தே மலர்வது (382).

கொன்றை ஒருவகை மரம். இதன் பூ பொன்னிறம் கொண்டு வட்டமாய் இருப்பது. இது கார் காலத்தே மலர் வது. பூத்த கொன்றைமரம், பொன்னிழை புனைந்த மகளிர் கூந்தல் போல்வது என்றும், இதன் இதழ், சிறுவர் அடியிற் புனையும் தவளைவாய்க் கிண்கிணிக் காசுபோல இருக்கும் என்றும், மகளிரது பசலையின் நிறம் இதுபோல இருக்கும் என்றும், கொன்றைப்பூ வுதிர்ந்து கிடக்கும்

அகல்வாய்ச் சிறுகுழிகள் செல்வர் பொன் பெய்த பேழை போன்று தோன்றும் என்றும் இக் குறுந்தொகை அழகுறக் கூறுகின்றது; "வண்டுபடத் ததைந்த கொடி யிணர் இடையிடுபு, பொன்செய் புனையிழை கட்டிய மகளிர், கதுப்பின் தோன்றும் புதுப்பூங் கொன்றை" (21) எனவும், "செல்வச் சிறாஅர் சீறடிப் பொலிந்த தவளைவாய பொலன்செய் கிண்கிணிக், காசின் அன்ன போதுஈன் கொன்றை" (148) எனவும், "கொன்றையம் பசுவீ நம் (தலைமகன்) போல் பசக்கும்" (183) எனவும், "கவலை கெண்டிய அகல்வாய்ச் சிறுகுழி, கொன்றை ஒள்வீ தாஅய்ச் செல்வர், பொன்பெய் பேழை மூய்திறந் தன்ன காரெதிர் புறவு" (233) எனவும் சான்றோர் கூறுப. இவ்வண்ணமே, பீர்க்கம்பூ மகளிர் மேனி வேறு பாட்டிற்கும், பிறபூக்கள் பிறவற்றிற்கும் எடுத்துக் காட்டப் பெறுகின்றன. இங்கே விரிக்கிற் பெருகும்; கருவிளைப்பூ மயிற்பீலி யொப்பதும், காயாம்பூ மயிலின் கழுத்துப் போல்வதும், தேரைகள் பறைபோல் ஒலிப்பதும் பிறவும் நேரில்கண்டு இன்புறத் தகுவன வாகும்.

பறவைகளுள் மயிலும் காக்கையும் கோழிச் சேவலும் இங்கே சிறப்பிக்கப் பெறுகின்றன. மழை கண்டு மயி லாலும்; "கான மஞ்ஞை கடிய ஏங்கும்" (194) என்பது போல்வன பல உண்டு. பிரிந்து வந்த தலைமகன் தோழியைக் கண்டு, "இவளை நன்கு ஆற்று வித்தாய்" என்று பாராட்டினன்; அது கேட்ட தோழி, "இவள் ஆற்றியது என் செயலால் அன்று; இவள் அடைந்த பிரிவுத் துயர்க்குச் செய்வகை யறியாது, நின் வரவறிய வேண்டிப் புள் நிமித்தம் பார்க்கலுற்றேம். அதுபோது காக்கை விருந்துவரக் கரைந்தது; அவ் வண்ணமே நுமது வரவு எய்தப் பெற்றேம். அக்காக்கைக்கு வெண்ணெல் வெண்சோறு ஏழு கலத்தில் ஏந்தித் தரினும், அப் பலி சிறிதாகும்; அதன் உதவி பெரிது" என்ற கருத்துப்பட,

"திண்டேர் நள்ளி கானத் தண்டர்
பல்லா பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு,
எழுகலத் தேந்தினும் சிறி(து) என் தோழி

**பெருந்தோள் நெகிழ்த்த செல்லற்கு**
**விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே "**

(குறுந். 210)

என்று பாடுகின்ருள். இப்பாட்டால் இதனைப் பாடிய சான்ரோர்க்குக் காக்கை பாடினியார் நச்செள்ளையார் என்ற சிறப்புப் பெயர் வழங்குகிறது என்பர். அவரது இயற் பெயர் நச்செள்ளையார் என்பது.

இக்குறுந்தொகைக்கண் முல்லைப் பாட்டுக்களைப் பாடிய சான்ரோர் மாத்திரம் சுமார் அறுபத்தைவரின் மேல் உள்ளனர். இவருள் பெண்பாற் புலவர் பதின்மராவர். அவர்கள், ஒக்கூர் மாசாத்தியார், ஔவையார், கழார்க் கீரனெயிற்றியார், காக்கைபாடினியார் நச்செள்ளையார், கச்சிப்பேட்டு நன்னுகையார், அள்ளூர்நன்முல்லையார், நன்னுகையார், நெடும்பல்லியத்தை, பொன்மணியார், வெள்ளிவீதியார் என்போராவர். இவருள் முதற்கண் ஓதிய ஒக்கூர் மாசாத்தியாரும், ஔவையாரும் முல்லையொழுக்கம் பொருளாக நான்கு பாட்டுக்கள் தனித்தனியே பாடியிருக்கின்றனர். இவருள் ஒக்கூர் மாசாத்தியார், ஆடவன் ஒருவன் தான் செய்தற்கு மேற்கொண்ட வினையைச் சீர்பெறச் செய்தாணுயின், அவன் உள்ளம் "செம்மல் உள்ளமாம்" (குறுந். 275) என யாப்புறுக்கின்ருர். முருகனது சேவடி படர்ந்த உள்ளத்தைச் "செம்மல் உள்ளம்" என ஆசிரியர் நக்கீரனுர் கூறுவர்; பாண்டியன் பன்னுடு தந்த பெருவழுதியென்பானும் செய்வினை முடித்த உள்ளத்தையே "செம்மல் உள்ளம்" (குறுந். 270) என்கின்ருன். எனவே, இவர்கள் கூற்ருல், செயற்குரியவினை, செயற்கரியவினை என்ற இருவகை வினையும் செய்வோர்க்கே உள்ளம், "செம்மல் உள்ள" மாகும் என்பது தெளியப்படுகிறது. தலைமகன் சேணிடைப் பிரிந்தவழி, அவனுற் பிரிவுற்று மனையகத்திருப்பார்மேல் அவனுக்கு வேட்கை மிக்கெழும் என்றும், அஃது அவன் மீண்டேகுங்கால் சிறிது சிறிதாகச் சிறுகி, அவன் மனை யடைந்தவழி முடிவடைந்துவிடும் என்றும் உள்ள ஓர் அரிய கருத்து ஔவையார் பாட்டொன்றில் (99) காணப்பெறுகிறது.

**"நீடிய மரத்துக் கோடுதோய் மலிர்நிறை**
**இறைத்துணச் சென்(று) அற்ருஅங்கு**
**அனைப்பெருங் காமம் ஈண்டுகடைக்கொளலே "** (99)

என்றும், இஃது உலகத்துப் பண்பு என்றும் ஔவையார் வற்புறுத்துகின்றார். இன்னோரன்ன கருத்துக்கள் பல இவர்கள் பாடலுட் பொதிந்துகிடக்கின்றன.

அக்கருத்துக்களுட் சிலவும் வழக்காறுகளுட் சிலவும் ஈண்டுத் தருகின்றோம். மகளிர் கொடிப்பூங் கொத்துக்களைத் தழை விரவத் தொடுத்துத் பொன்னிழையோடு கூந்தலிற் கட்டி அணிசெய்து கொள்வர் (குறுந். 21). இடையர் கன்றுகளை மனையகத்தே நிறுத்திக்கொண்டு, கறவைகளைக் கொல்லைகளுக்கு ஓட்டிச் சென்று மேய்த்துவிட்டு மாலையில் கொணர்வர் (64). இளஞ்சிறார்க்குக் காலில் தவளைவாய்க் கிண்கிணி (சதங்கை) யணிவர் (148). கொல்லைக்கு விதை கொண்டு போகும் கானவர், வட்டி நிறைய மலர் கொண்டு வருவர் (155); இக்காலத்தே, இது "விதைக்கூடை வெறிது வரலாகாது" என்ற கருத்துட் கொண்டு வழங்குகிறது. மாடுகட்குக் கழுத்தில் மணிகட்டி விடுவது வழக்கம். கணவன் பிரிந்த வழி, மகளிர் தம்மை ஒப்பனை செய்துகொள்வது கிடையாது. புறத்துப் போய் மீண்ட தலைவனைத் தலைமகள் "எம்மைத் தீண்டாதே" என்பதும் உண்டு (191). காக்கைக்குச் சோறு போட்டு, அதன் கரைதலால் விருந்து வரும் என மகளிர் நினைந்தொழுகுவர் (210). இடையரும் பிறரும் பனையோலைத் தடுக்கும் குடையும், உட்கார்தற்கும் மழைதடுத்தற்கும் பயன் கொண்டனர் (221). உயர்ந்தோர்க்கு விருந்தயருமிடத்து, நல்ல வெண்ணல் வெண்சோறும், தூய நெய்யும் "வெப்பத் தண்ணீரும்" தந்து ஊட்டுவர் (233, 273); (கோழி விடியலிற் கூவுவதால் பொழுதுபுலர்கின்றது 234). சூல்கொண்ட மகளிர் புளித்தின்னும் வேட்கையுடையா ராவர் (281).

தலைமக்கள் பிரிந்திருக்குமிடத்து நிகழும் கூற்றுக்கள் பலவற்றுள்ளும் இளிவரலைச் சார்ந்த பெருமிதமே மெய்ப்பட்டுத் தோன்றற்பாலதாம்; ஆயினும், தலைமகன் பிரிந்தவழித் தலைவி நிகழ்த்தும் கூற்றுக்களுள் தலைமகன் குறித்த பருவம் கண்டு ஆற்றாது தலைமகள் வருந்திக்கூறுவன பெரும்பாலும் இழிப்புச் சுவையவாகவே இருக்கின்றன; சில அவலக் குறிப்பும் உணர்த்துகின்றன. தலைமகன் நிகழ்த்தும் கூற்றுக்களுட் பல இளி

வரலைக் காட்டுகின்றன. தோழி கூற்றுக்களுள், தலைமகளை ஆற்றுமாறு வற்புறுத்துவன யாவும் வியப்புச் சுவையுடையவாய், சிலவற்றுள் பெருமிதமும் தோன்ற நிற்கின்றன. பிரிந்தோன் மீண்டுவந்து கூடியவழி தலைமக்களிடை நிகழும் கூற்றுக்கள் யாவும் உவகைச் சுவையவாய் இருப்பது நன்கு புலனாகிறது. செவிலி கூற்றுக்கள் உவகையும் வியப்பும் உறுவிக்கின்றன.

மேலும், நகைச்சுவை பயப்ப உரையாடும்திறம் தோழிபால் நன்கு அமைந்திருக்கிறது. அச் சுவை தோன்றப் பேசுவோர், தாம் நகைச்சுவை தோன்றக் கூறுவதைத் தாம் அறியாமல் வழங்குவதே சிறப்பு என்பர். தலைவன் குறித்த பருவம் வருகிறது; மழையும் மிகுதியாகப் பெய்கிறது; தலைமகள் அதனைக் கார்வரவு என்று கொண்டு கண்கலுழுகின்றாள். அவளைத் தோழி "கார்ப்பருவம் அன்று" எனக்கூறி ஆற்றுவிக்க முயல்கின்றாள். மேகங்கள் ஆண்டுதோறும் பெய்ய வேண்டிய நீரை ஒரே வழியாய் முகந்துகொண்டு, சிறிது சிறிதாகப் பெய்வது போலவும், அடுத்த ஆண்டுக் கார்கால வரவிற்குச் சிறிது முன்னர்ப், பெய்யாது எஞ்சியிருந்த நீரைப் பெய்துவிட்டுப் புதுநீர் முகந்து வருவது போலவும் படைத்துக்கொண்டு, "தோழி, இதுபோது பெய்யும் மழை பழைய மழைநீர்; இது புது நீரைக் கொள்வதற்காகச் சொரிகின்றது! இது காரன்று" (251) என்கின்றாள். இதன்பால் பிறக்கும் நகைச் சுவை புறத்தே சிறிதும் தோன்றாத வண்ணம் கூறும் நயம், மிக்க இன்பம் தருகின்றது. ஆங்கில நூற்புலவரும்* இவ்வாறு எழுப்பும் நகைச்சுவையே மிக்க இன்பம் தருவது என்பர். இந்நிலையில், தோழியின் நாநலமும், சிவ்ட் (Swift) என்னும் புலவரது நாநலமும் ஒப்பச் சிறந்திருக்கிறது. இதனை விரிக்கிற் பெருகும்.

இன்னோரன்ன இலக்கிய நலங்களும், தமிழர் மனப்பண்புணர்த்தும் மாண்புகளும், ஒழுகலாறு காட்டும் ஒட்பங்களும், இயற்கையோடு இயைந்து நடவும் வாழ்க்கை மேம்பாடுகளும், இயற்கைப் பொருளின் உண்மைத் தோற்றங்களும் உள்ளவாறு காண்டற்குப்

---

* **Lord Macaulay's Essay on Addison's wit and humour**

பெரும் பொருள் நிலையமாய் நிற்பவை இத் தொகைநூற் பாட்டுக்கள் என்பது இதுகாறும் ஆராய்ந்து கூறிய வாற்றால் இனிது விளங்கும். இப்பாட்டுக்கள் வழங்கும் சில சொல்வழக்குகள் இன்றும் உண்மையாகவே உள்ளன. "கல்லுயரேறிக் கண்டனம் வருகம் சென்மோ" (குறுந். 275) என்பதிலுள்ள கல்லுயரேறல் என்பது, சென்ற சனிக்கிழமை (7-9-40) மாலை †செங்கைமா கணவாயின் தென்மலைச் சரிவில் உள்ள ஆலப்புத்தூர் என்னும் சிறூர்க்கு யானும் என் தோழர்களும் சென்றிருந்த போது, யாங்கள் இப்போதும் வழக்கில் இருப்பது கண்டோம். இவ்வாறு என்றும் நின்று நிலவும் பொருளும் வழக்காறும் பொருந்தவுடைய இச் சங்க இலக்கியங்கள் ஆயுந்தொறும் ஆயுந்தொறும் அயரா இன்ப வூற்றாக விளங்குவன வென்பதன்றி வேறில்லை. இன்ன சிறப்பால் ஏற்றமிகும் இந்நூல், ஆய்வார் அறிவுக்கு என்றும் இன்பம் சுரந்து நிலவுமாக.

"சொல்லென்னும் பூம்போது தோற்றிப் பொருளென்னும்
நல்லிருந் தீந்தாது நாறுதலால்—மல்லிகையின்
வண்டார் கமழ்தாம மன்றே மலையாத
தண்டாரான் கூடல் தமிழ்."

---

† செங்கைமா என்பது வடார்க்காட்டுச் சில்லாவில் இப் பெயரிய தொரு தாலுகாவின் தலைநகருக்குப் பெயர். கொங்குநாடு செல்லுவோர் இதன் வழியே சவ்வாதுவரைத் தொடரைக் கடந்து செல்வர்.

# ௫. பாலை

[வித்துவான் ம. இராசமாணிக்கம் பிள்ளை]

பண்டைத் தமிழ்மக்கள் தாம் வாழ்ந்துவந்த நிலத்தை நான்கு பகுதிகளாகப் பிரித்து வழங்கினர். அவை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பனவாம். முல்லையாவது காடும் காட்டைச் சார்ந்த இடமுமாம். குறிஞ்சியாவது மலையும் மலையைச் சார்ந்த இடமுமாம். மருதமாவது வயலும் வயலைச் சார்ந்த இடமுமாம். நெய்தலாவது கடலும் கடலைச் சார்ந்த இடமுமாம். இது போன்றே தமிழ்மக்கள் ஒழுக்கங்களையும் ஏழு பகுதியாகப் பிரித்து வழங்கினர். அவை கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை என்பனவாம். உரையாசிரியர்கள் யாவரும் கைக்கிளை, பெருந்திணை, பாலை என்பன நான்கு நிலத்துள்ளும் விரவி வருதலால் அவற்றிற்கு நிலங்கூறப்படாது; ஏனைய நான்கிற்குமே நிலங் கூறப்படும் என்று கூறுவர். கைக்கிளை, பெருந்திணை ஒத்தகாம மன்மையால் அவற்றிற்கு நிலங் கூறப்படவில்லை யாயினும் பாலைக்கு நிலங் கூறப்படவேண்டியது இன்றியமையாத தொன்றும். இப் பாலை யொழுக்கத்திற்கு நிலங் கூறப்படவில்லை என்பதற்கு உரையாசிரியர்கள் பலரும் பல காரணங்கள் கூறிப் பலநாட்களாகப் போரிட்டு வந்தனர். அகப் பொருள் நூலாசிரியர் முதலியோர் அதற்கெனத் தனி நிலம் வகுத்து நிலம் ஐந்தென்றே கூறினர். ஆகவே, பாலையொழுக்கத்திற்கு நிலங் கூறப்படாமை புலவர்கள் உள்ளத்தில் பன்னாள் இடம்பெற்றிருந்தது. இதற்குக் காரணம் நிலமும் ஒழுக்கமும் ஒன்றற்கொன்று தொடர் புடைத்தாய் ஒன்றை ஒன்று நோக்கியே பிரிக்கப்பட்டன வென்று அவர்கள் கருதியதேயாம். நச்சினார்க்கினியர் பாலை ஒருபாற்படாது நால்வகை நிலத்திற்கும் உரிய தாய்ப் புலனெறி வழக்கம் செய்துவருதல்பற்றி நிலம் அதற்குக் கூறப்படவில்லை யென்பர்.

நாம், முதலில் ஒழுக்கம் கருதி நிலம் பிரிக்கப் பட்டதா? நிலம் கருதி ஒழுக்கம் பிரிக்கப்பட்டதா? என்பதனை ஆராய்வோம்.

(1) ஒழுக்கங் கருதி நிலம் பிரிக்கப்பட்டது என்று கொள்வோமாயின் நிலமும் ஏழாகப் பிரிக்கப்பட்டிருத்தல் வேண்டும். கைக்கிளை பெருந்திணை ஒழியினும் ஏனைய ஐந்தொழுக்கத்திற்காவது ஐந்து நிலங் கூறப்பட வேண்டும். அங்ஙனமின்றி "முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்த"லென நான்கே கூறப்படுகின்றன.

(2) இருத்தல், புணர்தல், ஊடுதல், இரங்கல் என்பனவற்றை முறையே முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்பனவற்றிற்கு உரிப்பொருள்களாகக் கூறுவர் உரையாசிரியரும் பிறரும். புணர்தல் ஒன்று தான் குறிஞ்சியுள்ளும், இருத்தல் ஒன்றுதான் முல்லையுள்ளும், ஊடல் ஒன்றுதான் மருதத்துள்ளும் இரங்கல் ஒன்றுதான் நெய்தலுள்ளும் நிகழ்கின்றனவென்று கூறுதற்கில்லை. எல்லாவொழுக்கங்களும் எல்லாத்திணையுள்ளும் நிகழ்ந்தே வருகின்றன, அங்ஙனம் நிகழ்ந்து வருதலே இயற்கையாம். குறிஞ்சி நிலத்திற்குக் கூறப்பட்ட புணர்தல் ஒழுக்கம் அந்நிலத்துள் பெரும்பான்மையாகவும் நிகழ்கின்றது என்று கொள்வதற்கில்லை. நச்சினார்க்கினியர் "ஒருசாரார்மாட்டு உலகியலால் நிகழும் ஒழுக்கினைப் பொதுவாக்கி இடமும் காலமும் நியமித்து" என்று கூறுவதே அவ்வொழுக்கம் அந்நிலத்துள் பெரும்பான்மையாகவும் நிகழ்வதில்லை என்பதற்குப் போதிய சான்றாக நிற்கின்றது. ஆகவே, பெரும்பான்மையாக நிகழ்தல்பற்றி இருத்தல் முதலிய ஒழுக்கங்கள் முல்லை முதலிய நிலங்களுக்கு ஓதப்பட்டன என்று கொள்வதற்கும் இல்லை.

(3) பாலைத்திணை, பிரிவுகளுள் பரத்தையிற் பிரிவு ஒழியத் தூது, ஓதல், பொருள் என்றிவைபோன்றன யாவும் தன்னிடத்தே நிகழ்வதற்கு இடனாக இருக்கின்றது. பிரிவு ஒழுக்கம் அனைத்தையுமே தன்னிடத்தே கொண்டு நிற்கின்றது என்று கூறலாம். ஆகவே, கூறப்பட்ட ஒழுக்கத்தைப் பெரும்பான்மையாகக் கொண்டு நிற்கும் பாலைக்கும் நிலங் கூறப்படவேண்டும். அங்ஙனம் கூறப்படவில்லை.

(4) குறிஞ்சி முதலிய திணைகள் ஏனைய உரிப்பொருள்கள் நிகழ்வதற்கு இடனாயிருக்கின்றன.

இதற்குத் "திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே" என்ற சூத்திரத்தில் நச்சினார்க்கினியர் காட்டும் எடுத்துக் காட்டுக்களே போதிய சான்றாக நிற்பன. பாலைத்திணை தன்னொழுக்கம் தன்னிடத்தில் நிரம்பப்பெற்றதா யிருக்கின்றது. வேறு ஒழுக்கங்களும் இந்நிலத்தின்கண் விரவி வருதல் இல்லை. இதற்கு நிலங் கூறவேண்டியது இன்றியமையாத தொன்றன்றோ? பாலை நிலத்தின்கண் ஏனைய ஒழுக்கங்கள் விரவி வந்ததாகப் புலனெறி வழக்கமும் இன்மை அறியத்தக்கது.

(5) நச்சினார்க்கினியர் "பாலை ஒருபாற் படாது வருதலின்" நிலங் கூறப்படவில்லை என்பர். அதனை ஆராய்வோம். நிலங்களுக்கு உரித்தாகக் கூறப்பட்ட ஒழுக்கங்கள் அந்நிலத்தில் ஒரு சாரார் மாட்டே உலகியலில் நிகழ்கின்றன என்பதும் அவர் கருத்தேயாம். குறிஞ்சித் திணையைக் காண்போம். அவர் கூற்றுப்படி குறிஞ்சி நிலத்தில் ஒரு சாரார் மாட்டுப் புணர்தல் ஒழுக்கம் நிகழ்கின்றது. ஏனையோரிடத்தில் ஏனைய ஒழுக்கங்கள் நிகழ்கின்றன. ஏனைய ஒழுக்கங்களும் தமக்குரியவாக வோதப்பட்ட நிலங்களுள் நில்லாது குறிஞ்சிநிலத்தில் விரவி வருகின்றன. இங்ஙனம் ஒவ்வொரு நிலங்களையும் ஆராய்வோமாயின் ஏனைய ஒழுக்கங்களும் விரவி நிகழ்கின்றன வென்று அறியப்படும். ஆகவே, ஏனைய ஒழுக்கங்களுக்கும் ஒருபாற்படும் தன்மை இலதாயிற்று என்பது அறியப்படும். இந்நான் கொழுக்கங்களும் ஒருபாற்படாது தம்முள் விரவிப் புலனெறி வழக்கின்கண்ணும் வருகின்றன. "திணைமயக் குறுதலும் கடிநிலை யிலவே" என்ற சூத்திரத்திற் கூறப்படும் எடுத்துக் காட்டுச் செய்யுட்களே இதற்குப் போதிய சான்றுவன. ஆகவே, ஒருபாற்படாது வரும் தன்மை ஏனைய நான் கொழுக்கத்திற்கும் உண்மை இதனால் அறியப்படும். ஆகவே, கூறப்பட்ட ஒழுக்கத்தைத் தன்னிடத்தே நிரம்பப் பெற்றிடாதனவும் ஏனைய ஒழுக்கங்கள் விரவுவதற்கு இடமாவனவும் ஆகிய குறிஞ்சி முதலிய நிலங்கள் ஒழுக்கம் நோக்கி வகுக்கப்பட்டன என்று கூறுதல் விந்தையினும் விந்தையே. ஆகவே, ஒழுக்கம் கருதி நிலம் பிரிக்கப்பட்டதாக அறிவதற்கில்லை.

இனி நிலங் கருதித்தான் ஒழுக்கம் பிரிக்கப்

பட்டதோ? என்பதை ஆராய்தலும் இன்றியமையாத தொன்றும். அதனையும் ஆராய்வோம்.

(1) " கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப "

என ஏழு வகை ஒழுக்கங்கள் கூறப்படுகின்றன. ஒழுக்கங்கள் நான்கே என்று கூறப்படாதது அறியத்தக்கது. இங்ஙனம் கூறப்படாததும் ஒழுக்கம் நோக்கி நிலம் பகுக்கப் பட்டது என்பதனைத் தடைசெய்வ தொன்றும்.

(2) அகத்திணைக்குப் புறம்பாவன கூறுங்கால் இந் நான்கிற்குமே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை முதலாயின புறமாயினவென்று கூறுதல் வேண்டும். அகத்திணை யேழற்குமே புறத்திணை ஏழும் கூறப்படுகின்றன. ஆதலால் மூன்றினையும் இந்நான்கினுள் அடக்கிக் கூறினர் என்றும் கொள்வதற்கில்லை.

ஆகவே, ஒழுக்கங் கருதியும் நிலம் பகுக்கப்படவில்லை. நிலங் கருதியும் ஒழுக்கம் பகுக்கப்படவில்லை என்பதறியப்பட்டது.

நிலத்திணை மலையைச் சார்ந்த வளமுள்ள பகுதியாகவும், காட்டைச் சார்ந்த வளமுள்ள பகுதியாகவும், வயலைச் சார்ந்த வளமுள்ள பகுதியாகவும், கடலைச் சார்ந்த வளமுள்ள பகுதியாகவும் பிரித்தலே முறை. இங்ஙனந்தான் பிரிக்கப்பட்டது. வளமில்லாப் பாலையையும் ஒரு பகுதியாகப் பிரித்தல் நாட்டிற்குக் குறைவைத் தருவதொன்றும். இது கருதியே அது பிரிக்கப்படவில்லை. ஆக வளமுள்ளதாகப் பகுக்கப்படவேண்டும் என்ற கருத்து நோக்கியே நிலம் பகுக்கப்பட்டது.

உலகில் நிகழும் வழக்கங்களை ஒருவாற்றான் வரையறுத்து ஏழென்று கூறுதலே முறையன்றி நிலம் நோக்கிக் கூறுதல் முறையன்று. அங்ஙனம் கூறின் ஒழுக்கத்தினை ஆராய்ந்து உணர்த்தியதாகாது. ஒவ்வோர் ஒழுக்கமும் ஒவ்வொரு நிலத்திலேதான் நிகழும் என்று கொள்வது பொருந்தாததொன்று. அங்ஙனம் வரையறுத்தலும் இயற்கைக்குப் பொருத்தமுடையதன்று. ஊழ்வகையால் முன்னம் ஒருவரை ஒருவர் அறியாராய் எதிர்ப்பட்டுக் கூடுவார்க்கு இடம் வரையறுத்துரைத்தல் பொருத்தமுடைத்தாமோ?

"நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே"

என ஆசிரியர் நிலத்திற்கு உரிப்பொருள் வகுத்துக் கூறுதல் நாடக வழக்கேயாம்.

உரிப்பொருள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு நிலத்திற்கே உரியதாக நினைத்து அதற்கேற்ப உரைகொண்டு இறுதியில் விழிப்பர் நச்சினார்க்கினியர் முதலியோர். அவற்றுள் ஒன்று காண்போம். அகத்திணை யேழற்கும் வெட்சி முதலாயின புறமாயதற்குக் காரணம் கூறும் நச்சர், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவற்றிற்கும் அவற்றின் புறத்திணைக்கும் முதல், கரு, உரி என்ற மூன்றனது ஒப்புமை காட்டிப் புறமாயிற்றென்றார். ஏனைய கைக்கிளை, பெருந்திணை, பாலை என்ற மூன்றற்கும் அவற்றின் புறத்திணைகட்கும் இயைபு கூறுங்கால் உரிப்பொருள் ஒன்றுகொண்டே கூறிச் சென்றார். அகத்திணை, புறத்திணை என்ற ஏழனுள் முதல் நான்கும் முதல், கரு, உரி ஒப்புமையுடைமையாற் புறமாயின; ஏனைய உரிப்பொருள் ஒப்புமையாலேயே புறமாயின என்பது ஆசிரியர் கருத்தாக இருக்க முடியாது. உரிப்பொருள் ஒன்றே கொண்டு கூறுதல் மட்டும் அவர் கருத்தாயிருக்க வேண்டும். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பனவற்றைக் கண்டவுடன் நிலத்தின் நினைவு வந்ததாலேயே இங்ஙனம் இவர் இடர்ப்பட நேர்ந்தது. ஆகவே, பாலைக்கு நிலங் கூறவேண்டியதும் இல்லை. ஏனையவற்றிற்கும் நிலங் கூறப்படவு மில்லை.

பாலையாவது காதலாற் கலந்த இருவரது பிரிவு ஒழுக்கம். இவ் வொழுக்கம் ஏனைய ஒழுக்கங்களைவிடச் சிறந்த தென்று கூறுதல் மிகைபடக் கூறியதாகாது. காமஞ் சிறத்தற்கு இவ்வொழுக்கமே இன்றியமையாத தொன்றாய் வேண்டப்படுவது. "ஊடுதல் காமத்திற் கின்பம்" என்பது வள்ளுவர் வாக்கு. ஊடல், துனி முதலியன நிகழவேண்டுமேல் அவற்றிற்குப் பிரிவு இன்றியமையாது வேண்டப்படுவது. காமஞ் சிறத்தற்கு ஊடல் முதலாயின இன்றியமையாது வேண்டப்படுவன. ஆகவே, பிரி வில்லையெனில் காமம் சிறப்புறு தென்பதாம்.

முல்லையாவது ஆற்றியிருத்தல். தலைவன் பிரிந்ததிலிருந்து அவன் வருமளவும் தலைவி ஆற்றியிருப்பாள். இங்ஙனம் இவள் ஆற்றியிருத்தற்குக் காரணம் அவனது பிரிவேயாம். ஆகவே, முல்லை பாலையொழுக்கத்தின் அடியாகத்தான் பிறக்கின்றது. மருதமாவது ஊடல். தலைவன் பரத்தையிற் பிரிந்து விடியற்காலையில் வந்தானாகத் தலைவி அவனோடு ஊடி நிற்பாள். இங்ஙனம் இவள் ஊடி நிற்றற்குக் காரணம் அவனது பிரிவேயாகும். ஆகவே, மருதமும் பாலையடியாகத்தான் பிறக்கின்றது. நெய்தலாவது இரங்கல். தலைவன் பொருள் தேடும் பொருட்டுச் சேறலின் அவட்கு இரக்கம் தோன்றுகின்றது. அவளது இரக்கம் பிரிவுபற்றியே நிகழ்கின்றது. ஆகவே, நெய்தலும் பாலையடியாகத்தான் பிறக்கின்றது. குறிஞ்சியாவது கூடுதல். முற்பிறப்பில்,

> " இம்மை மாறி மறுமை யாயினும்
> நீயா கியர்எங் கணவனை
> யானா கியர்நின் நெஞ்சுநேர் பவளே "

என்று கூறிப் பெரும் பிரிவாற் பிரிந்தவர், ஊழ் கூட்டுவிக்க மறுமையிற் கூடுவர். இங்ஙனம் இவர்கள் கூடுதற்குக் காரணம் அவர்கள் பெரும் பிரிவேயாம். ஆகவே, குறிஞ்சியும் பாலையடியாகத்தான் பிறக்கின்றது. இங்ஙனம் தொடர்ந்த பிறப்புக்களுள் தலைவனுந் தலைவியுமாக இருந்துவருதலே சிறப்பு. தமிழ் நூல்களுள் கூறப்படுவன யாவும் இது போன்றனவேயாம். தொடர்ந்த பிறவிகளுள் தலைவனுந் தலைவியுமாக இருந்தவர்கள், தம்முட் கொண்ட அன்பினாலும், இல்லறம் முதலிய நல்லறம் நடத்தி வந்த சிறப்பாலும், அவர்கள் விரும்பிய விருப்பத்தாலும் மீண்டும் தலைவனுந் தலைவியுமாகவே பிறப்பார்கள். இதனைத்தான் ஊழ்கூட்டுவிக்கக் கூடினார் என்பர். ஆகவே பாலை ஒழுக்கம் இல்லையென்றால் ஏனைய ஒழுக்கங்களும் இல்லையென்றே கூறலாம்.

ஆகவே, பாலை ஒழுக்கம் ஏனைய ஒழுக்கங்களை இயக்கும் ஆற்றலுடையதாய், ஏனைய ஒழுக்கங்கள் தன்னிடத்து விரவப்பெறாது தூய்தாய், ஒழுக்கங்களுள் நடுவுவைத்து எண்ணத்தக்க தலை மணியாய் விளங்குகின்றது.

இதனது சிறப்பினை அறிந்தே ஆசிரியர் தொல்காப்பியரும்,

“ நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே ”

என்றதில் நடுவணது எனக் குறியிட்டார். பாலை ஒழுக்கம் நால்வகை ஒழுக்கங்களுள்ளும் நடுவு வைத்து எண்ணத்தகும் சிறப்பினை உடையது என்பதே அவர் கருத்து. இங்ஙனங் கூறுது ஆசிரியர்க்கு மாறுபட்டுக் காரணங் கூறுவார் பலர்.

அவர் கூறுமாறு :—(1) நச்சினார்க்கினியர் பாலைக்கு நடுவணது என்னும் பெயர் ஏற்பட்டமைக்குக் கூறுவன, “ புணர்தல், இருத்தல், ஊடல், இரங்கல் என்பனவற்றிற்கு இடையிடையே பிரிவு நிகழ்தலானும், நால்வகை உலகத்திற்கிடையே

“ முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்து
நல்லியல் பிழந்து நடுங்குதுய ருறுத்துப்
பாலை யென்பதோர் படிவங் கொள்ளும் ”

என முதற்பொருள்பற்றிப் பாலை நிகழ்தலானும், நடுவணதாகிய நண்பகற்காலம் தனக்குக் காலமாக லானும், புணர்தற்கும் இருத்தற்குமிடையே பிரிவு வைத்தாலானும், உலகியற் பொருளாகிய அறம் பொருள் இன்பங்களுள் நடுவணதாகிய பொருட்குத் தான் காரணமாகலானும் நடுவணது எனக் குணங் காரணமாயிற் ” றென்பனவாம்.

இதற்குச் சிவஞான முனிவர் கூறும் மறுப்பு வருமாறு :— “ இனி நால்வகை உரிப் பொருள்களினும் இடையிடையே பிரிவு நிகழ்தலின் நடுவுநிலைத் திணை யென்றாரெனின், புணர்ச்சியும் அவ்வாறு இடையிட்டு நிகழ்தல்பற்றிக் குறிஞ்சியும் நடுவுநிலைத்திணையெனல் வேண்டுமாகலானும், நடுவணதாகிய நண்பகற்காலம் தனக்குக் காலமாதல்பற்றி அங்ஙனங் கூறினாரெனின், நடுவணதாகிய இடையாமம் தனக்குக் காலமாதல்பற்றிக் குறிஞ்சியும் அவ்வாறு கூறப்படுமாகலானும், உலகியற் பொருளாகிய அறம், பொருள், இன்பங்களுள் நடுவணதாகிய பொருட்குத் தான் காரணமாதல்பற்றி

அங்ஙனங் கூறிஞரெனின், பரத்தையிற் பிரிவு, ஓதற் பிரிவு போல்வன ஏனையவற்றிற்குக் காரணமாகலின் பொருள் மாத்திரைக்கே காரணம் என்பது படாமை யானும், அங்ஙனம் உரைப்பன வெல்லாம் போலியென் றொழிக" என்பதாம்.

(2) அவர் கூறுங் காரணம் வருமாறு :—

"நடுவண் ஐந்திணை நடுவண தொழியப்
படுதிரை வையம் பாத்திய பண்பே"

என நிலம் பகுத்தோதுங்கால் நடுவணது எனக் குறியிட்டாராகலின், அங்ஙனம் பகுக்கப்படும் நிலங்களு மாகாது அவற்றின் வேறுமாகாது தனக்குரிய நிலம் நடுநிகர்த்தாய் நிற்றல் பற்றி நடுவுநிலைத் திணை யெனக் குறியிட்டாளுதலே ஆசிரியர் கருத்தென்க என்பதாம்.

ஆசிரியர் உலகியலில் நிகழ்ந்த ஒழுக்கத்திணை ஏழெனவரையறுத் துணர்த்திஞர் முதற் சூத்திரத்தில். அடுத்த சூத்திரத்தில் நாடக வழக்காக நிலங் கூறுகின்ருர். முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்ற ஐந்தொழுக்கங்களைக் கூறுவார் "நடுவண் ஐந்திணை" யென்ருர். "படுதிரை வையம் பாத்திய பண்பே" என்றதனுற்ருன் நிலஞ் சுட்டப்படுகின்றது. "அவற் றுள்" என்றும் "நடுவண் ஐந்திணை" யென்றும் "நடுவணது" என்றும் கூறுவன யாவும் ஒழுக்கத்தைக் குறித்தவையேயாம். நிலங்குறித்துக் கூறப்படவில்லை. ஒழுக்கங்களுள் சிறப்புடைமை நோக்கியே பாலை 'நடுவணது' எனப்பட்டது. சூத்திரத்தின் போக்கே இதனை வலியுறுத்தி நிற்றல், அறியத்தக்கது. "அவற்றுள்" என எழுதிணையையும் அகப்படுத்திஞர். அவற்றுள்ளும் சிறப்புடைமை நோக்கி "நடுவண் ஐந்திணை" என்ருர். அவற்றுள்ளுஞ் சிறப்புடைமை நோக்கியே "நடுவணது" எனக் கூறிஞர். ஆசிரியர் கருத்து இதுவே யென்பது அறியத்தக்கது. ஆகவே, பாலை யொழுக்கமே தலைசிறந்த தென்பது அறியப் பட்டது.

இனி இத்தகைய பாலை யொழுக்கத்தைக் குறித்துக் குறுந்தொகையுள் வருஞ் செய்யுட்களைப் பகுத்து நோக்குவோம்.

## கூடுதல்

பண்டைத் தமிழ் நூல்களுட் கூறப்படும் புணர்தல் ஒழுக்கம் யாவும் ஊழாற் கூடியதாகவே கூறப்படு கின்றன. ஊழாற் கூடுதல் எத்தகைமையது என்பது முன்னர் உரைக்கப்பட்டது.

ஒருதலைவன் தலைமகளை உடன்கொண்டு பாலை நிலத்தின் வழியே செல்கின்றான். செல்கின்ற அவர்களை நன்றாக அறிந்த அயல் வீட்டார் எதிர்ப்படுகின்றனர். செல்கின்ற அவர்கள் மிக்க அன்புடையவர்களாகச் செல்லுதலைக் கண்டனர். கண்டவுடன் அவர்கள் சிறுவயதிற் செய்த செய்கை நினைவுக்கு வருகின்றது. கூறுகின்றார்கள் :—

இவர்கள் இருவரும் தமது சிறுவயதில் விளையாடிக் கொண்டிருக்கும்பொழுது விளையாட்டுக் காரணமாகத் தம்முட் சினங்கொண்டு ஒருவர் ஒருவருடைய மயிரைப் பற்றி இழுத்துச் சிறு போர் விளைத்தனர். இதனைக் கண்ட செவிலித் தாயர் வந்து விலக்கவும் விலங்கா ராய்ப் போர் நிகழ்த்தினர். இங்ஙனம் மாறுபாடுற்ற இவர்களை மாறுபாடில்லாத தலைவனும் தலைவியுமாக இணைத்த ஊழின் வலிமைதான் என்னே என்று வியக்கின்றனர். அஃது,

> " இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள் இவன்
> புன்றலை யோரி வாங்குநள் பரியவும்
> காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிராது
> ஏதில் சிறுசெரு வுறுப மன்னோ
> நல்லைமன் றம்ம பாலே "

என்பதாம்.

## மகளிர் ஒழுக்கம்

(1) தமிழ் மகளிர் அனைவரும் திருமணம் நடக்கும் வரை சிலம்பு அணிந்திருப்பார்கள். திருமணம் நடந்த பின்னர் அணிவதில்லை. இது பண்டைக் காலத்திய தமிழ் மகளிர் ஒழுக்கங்களுள் ஒன்று. திருமணம் நடப்பதாக உறுதி செய்யப்பட்டவுடன் சிலநாட்களுக்கு முன்னரே தாய் வீட்டில் "சிலம்பு கழி நோன்பு" என்று ஒரு விழாக் கொண்டாடப்படும். தமிழ்மகளிர், அன்றே

சிலம்பினை நீக்குவர். மணமான பின்னர் மேற்கொள்வா ரல்லர். பெண்கள் திருமணம் பெற்றவர்களா? பெருத வர்களா? என்றறிவதற்கு இது காரணமாய் இருந்தது. தலைவனுந் தலைவியும் உடன்போகின்றனர். வழிப் போக்கர்கள் அவர்களைக் காண்கின்றனர். தலைவி காலிற் சிலம்பு இருந்தமையறிந்து மணம் ஆகவில்லை யென் றறிகின்றார்கள். அஃது,

"வில்லோன் காலன கழலே தொடியோள்
மெல்லடி மேலவுஞ் சிலம்பே"

என்பதாம்.

(2) தலைமகன் தன்னைவிட்டுப் பிரிந்தானாக அவனது சிறப்பியல்பை நினைந்து ஆற்றியிருத்தல் மகளிர் இயல்பு. அங்ஙனம் ஆற்றியிருத்தல் இனிய கூறி ஆற்றியிருத்தல், இன்னாகூறி ஆற்றியிருத்த லென இரண்டு வகையாம். தலைவன் சென்ற காட்டில் ஆண்யானை தனது பெண் யானையின் பசியை நீக்கும்பொருட்டு, யாமரத்தினது பட்டையை உரித்துக்கொடுத்து நீருண்ணச் செய்யும். தலைவர் இதனைக் காண்பர். ஆதலால் விரைந்து வருவர் என்று கூறி ஆற்றியிருத்தல் இனிய கூறி ஆற்றியிருத் தலாம்.

தலைவன் செல்லுகின்ற காடு நீரின்றி வற்றிய உழிஞையது நெற்றுக்கள் ஒலிக்குந் தன்மையை உடையது ஆதலால் அவரும் நம் மாட்டு ஈரமின்றிப் பிரிந்தார் என்று கூறி ஆற்றியிருத்தல் இன்னா கூறி ஆற்றியிருத்தலாம்.

(3) மாலைக் காலத்தில் மகளிர், தம்மைச் சீர் செய்து கொண்டு விளக்கங்களை வீடுகள்தோறும் ஏற்றிவைப்பர். பிரிந்த தலைவன் வருவானென்று அவனை எதிர் நோக்கிய வண்ணமாய் விளக்கினருகே நின்றுகொண் டிருப்பார் கள். இது பண்டைத் தமிழ்மகளிர் கொண்டிருந்த ஒழுக் கங்களுள் சிறந்தது என்று கூறலாம். அஃது

"..........கனங்குழை மகளிர்
கைபுனை யாக நெய்பெய்து மாட்டிய
சுடர்துயர் எடுப்பும் புன்கண் மாலை"

என்பதாம்.

(4) மகளிர் கணவன்மார் தம்மைவிட்டுப் பிரிதற்கு வருந்துவராயினும் அறத்தின்பொருட்டுப் பிரிவாரே யானுல் வருந்துதல் இலர். ஒரு வேளை நம்மீது பூண்ட அன்பினுல் தலைவன்மார் தாம் மேற்கொண்ட காரியத்தை இடையிலே நிறுத்திவிட்டு வந்துவிடுவார்களோ வென வருந்துதலுஞ் செய்வர். எனவே, அறம்புரிதற்கண் தனது இன்பத்தையும் மறந்து மிக்க ஆவலுடையராய் விளங்கினர் என்பது அறியப்படும். ஒரு தலைவன் இல்லறத்தினைச் சிறப்பாக நடத்தும்பொருட்டுப் பொருள் தேடச் சென்ருன். சென்ற தலைவனைத் தலைவி நினைந்தாள். தன்மீது அவன் பூண்ட அன்பு முன்தோன்றிற்று. தோன்றவே, தன்மீதுள்ள அன்பினுல் பொருள்தேடாது திரும்பி வந்துவிடுவானே வென்று வருந்துகின்ருள். இதனை யறிந்த தோழி தலைவர் சென்ற காட்டில் ஆண் யானை தனது கடமையை உணர்ந்து யாமரத்தினது பட்டையைத் தனது சுற்றத்திற்குக் கொடுத்து அவற்றின் பசியை நீக்குகின்றது. இதனைத் தலைவர் காண்பாராதலால் தமது கடமையை உணர்ந்து விருந்தோம்பல் முதலிய இல்லறவொழுக்கங்களை நிகழ்த்தும்பொருட்டுப் பொருளினைத் தேடியே வருவர். ஆதலால் வருந்தாதொழிக வென்று தேற்றுகின்ருள்.

அது "பொரியரை முழுமுதல் உருவக் குத்தி
மறங்கெழு தடக்கைபின் வாங்கி உயங்குநடைச்
சிறுகட் பெருநிரை யுறுபசி தீர்க்கும்
தடமருப் பியானை கண்டனர் தோழி"

என்பதாம்.

## ஆடவர் ஒழுக்கம்

(1) ஆடவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தொழிலை மேற்கொண்டிருந்தனர். சோம்ப லுடையராய்த் தேம்பித் திரிந்தாரிலர். அப்படி இருந்தார் என்றறிதற்குரிய சான்றுகளும் காணப்படா. இல்லறம் நிகழ்த்துவதில் அவர்கட்கு இருந்த பேரூக்கம் சொல்லியடங்காது. அது காரணமாக அவர்கள் நிலத்தினும் கலத்திஞுஞ் சென்று பொருளைத் தேடிவந்தனர். அவர்கள் தொழிலை உயிராக மதித்துவந்தனர். தொழிலில்லாதவர்களை இறந்தவர்களாகவே கருதி வந்தனர் தமிழ் மக்கள்.

"வினையே ஆடவர்க் குயிரே"

என்பது, பண்டைத் தமிழ் ஆடவர்கள் கொண்டிருந்த உள்ளத்தின் நிலையை தெள்ளிதின் புலப்படுத்துதல் அறியத்தக்கது.

(2) இங்ஙனம் முயற்சியுடையராய் வாழ்ந்த தமிழ் மக்கள் தம் முன்னோர் தேடிவைத்த பொருளைப் பொருளாக மதிப்பதிலர். அஃதுடையானைச் செல்வமுடையானென்று நினைத்தலு மிலர். தாம் தேடிய பொருளைக் கொண்டே இல்லறம் நிகழ்த்துதல் வேண்டும் என்ற கொள்கை உடையவரா யிருந்தனர். அங்ஙனம் நடத்துதலே சிறப்பெனக் கருதினர். இது கருதியே வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவர். தான் தேடிய பொருள் இல்லாமையை இரத்தலினும் இழிவாகக் கருதினர். அஃது

"உள்ளது சிதைப்போர் உளரெனப் படார்
இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு"

என்பதாம்.

(3) இதுவன்றித் தாம் தேடிய பொருள்களைப் பெற்றவர்களே ஈதலான் வரும் இன்பத்தையும் பிற இன்பத்தையும் அடைதற் குரியவர்கள் என்று நினைத்தனர் ஆடவர். முன்னோர் தேடிவைத்த பொருள்மட்டுமுடையார் இன்பங்களை அடைதற்குரிய தகுதி யில்லாதவர்களே யாவார்கள் என்பதும் அவர்கள் கருத்தாம். பண்டைத் தமிழ் நூல்களுள் ஏனைய பிரிவுகளைவிடப் பொருள்வயிற் பிரிதலே மிகுதியாகக் கூறப்படுகின்றது. இஃதொன்றே பண்டைத் தமிழ் மக்கள் பொருள் கடைக்கூட்டுவதிற் கொண்டுள்ள ஆவலைத் தெரிவிப்பதற்குப் போதிய சான்றும்.

"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க் கில்லெனச்
செய்வினை கைம்மிக வெண்ணுதி"

என்று ஒரு தலைவன் பொருளில்லையேல் இழப்பன இவை யென்று கூறினான்.

(4) பொருள் கடைக்கூட்டுவதில் இத்தகைய பேரூக்கமுடைய ஆடவர்கள் கொடையினும் இத்தகையராகவே காணப்படுகின்றனர். இரப்போர்க்குக்

கொடுக்க முடியாத நாட்களும், கொடுப்போர்க்கு இரப்போர் அகப்படாத நாட்களும் துன்பத்தைத் தரும் நாட்களாகவே தமிழ் மக்கள் கருதினர். பால்வகையால் ஒரு தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டுக் கூடினர். அப்பொழுது தலைவன் செய்யும் தண்ணளியால் பிரிவானோவெனத் தலைவி கருதினாள். அதனை யுணர்ந்த தலைமகன் அவளை நோக்கிக் கூறுகின்றான் :— 'நின்னை ஒரு ஞான்றும் பிரியேன்; பிரியினும்-தங்கியிரேன்; அங்ஙனம் தங்குவேனேயானால், கொடுப்போர்க்கு இரப்போர் அகப்படாது துன்புறுகின்ற துன்பத்தை யான் செல்லும் இடத்தில் அடையக் கடவேனாகுக. ஆகவே, அவன் கொடுக்க முடியாமையை எத்துணைத் துன்பந் தருவதாக நினைக்கின்றான் என்பதனை நினைக்குந்தோறும் பண்டைத் தமிழர்களது கொடைத்திறன் முன்னே தோன்றுகின்றது. அஃது

"மெல்லியல் அரிவை நின்னலம் புலம்ப
நின் துறந் தமைகுவ னாயின்என் துறந்து
இரவலர் வாரா வைகல்
பலவா குகயான் செலவுறு தகவே"

என்பதாம்.

(5) பொருள் கடைக்கூட்டுவதிலும், கொடையிலும் மிகச் சிறந்தவர்களாகத் தமிழர்கள் இருந்தார்கள். ஆனால் பண்டைத் தமிழ் நூல்களுள் சில விடங்களில் தலைமகள் நலங் கருதித் தலைமகன் செலவழுங்கியதாகக் காணப்படுகின்றது. இங்ஙனம் தலைவன் கூறுதல் தலைவியை ஆற்றுவித்தற் பொருட்டேயாம். தலைவன், பிரிதலில் தனக்கு விருப்பம் இல்லாததுபோலவும் பிரிய நேரிட்டதற்கு வருந்துவான் போலவும் கூறுதல் தலைவியை ஆற்றுவித்தற்கேயாம். ஆகவே, பொருள் தேடச் செல்லுதலை ஒழியான் என்பதாம்.

## அறிவர் ஒழுக்கம்

இவர் முக்காலத்தையும் அறியும் அறிவும் ஆற்றலும் உடையவர். இவர் எக்காலத்தும் கற்பு முதலிய நல்லவற்றைக் கற்பித்தலும் தீயவற்றைக் கடிதலுமாகிய செயலுடையார். தலைவன் தலைவியுமாகிய இருவரும் இவரது

ஏவலைச் செய்து நிற்பர். அவர்களை இடித்துரைத்து நல் வழியில் நிறுத்துதல் இவர் இயல்பு. இவர் கூற்றை யாவரும் கேட்டு அதன்படி ஒழுகுவர். இவரைப்பற்றிக் கூறப்படுவது :— 'அறிவர்கள் ஒரே வீட்டிலேயே பிச்சை வாங்கி நிறைய உண்பார்கள் ; வாடைக் காலத்தில் வெந் நீரைக் கலன்களில் வைத்துக்கொண்டு உண்பார்கள்' என்பதாம். ஆகவே, இவர் முற்றத் துறந்த முனிவர் என்று கொள்வதற்கில்லை. புறப்பொருள் வெண்பாமாலை நூலாசிரியர் இவரை முற்றத் துறந்த முனிவராகவே கூறுகின்றார். அஃது

"ஆசில் தெருவில் நாயில் வியன்கடைச்
செந்நெல் அமலை வெண்மை வெள்ளிழுது
ஓரில் பிச்சை ஆர மாந்தி
அற்சிர வெய்ய வெப்பத் தண்ணீர்
சேமச் செப்பிற் பெறீஇயரோ நீயே"

என்பதாம். ஒரு வீட்டிலேயே அவர்க்கு வேண்டிய உணவினைக் கொடுத்தார்கள் என்று வேளாளர் தெருவினைக் குறிக்கின்றார்.

## கோசர்

இவர்கள் மோகூர்ப் பழையன்றன் அறங்கூறவையில் இருந்தவர்கள். நாலூர்க் கோசர் என்று இவர்கள் சிறப்பிக்கப் படுதலால் இவர்கள் நான்கு பிரிவினர்களென்பதறியப்படும். இவர்கள் ஆலமரத்தின் அடியில் இருந்து அறவுரை கூறுதல் வழக்கம். இதனால் பண்டைக் காலத்தில் ஆலமரமே விரிந்த நிழலைத் தருதலான் ஏற்ற இடமாக வழங்கப்பட்டு வந்தது என்பது அறியத்தக்கது. இதன் கீழேயே பண்டைக் காலத்தில் அவைகூடுதல் வழக்கம். கோசர்கள் கூறுஞ் சொற்கள் தவறாது பயன் தருதலுடையன என்று போற்றப்பட்டன. அஃது

"தொன்மூ தாலத்துப் பொதியில் தோன்றிய
நாலூர்க் கோசர் நன்மொழி போல
வாயா கின்றே தோழி"

என்பதாம்.

## அறம்

பாலை வனங்களிலே செல்வோர் தண்ணீர் பெறாது துன்புறுவர் என்பது கருதி அதனை நீக்கும்பொருட்டுப் பாலை நிலங்களில் நெல்லி மரங்களை வைத்து வளர்த்தனர் தமிழர். வழிசெல்வோர், இவற்றின் கனியை உண்டு நீர் விடாயை மாற்றிக்கொள்வர். இங்ஙனம் வளர்க்கப்பட்ட நெல்லி,

"அறந்தலைப் பட்ட நெல்லி யங்கனி"

என்று கூறப்படுகின்றது.

## நிமித்தம்

பண்டைக் காலத்தில் தமிழ் மக்கள் பல்லியையே யன்றி ஓந்தியையும் நிமித்தம் பார்த்தற் குரியதாகக் கொண்டார்கள். அஃது

"வேதினம் வெரிநின் ஓதிமுது போத்து
ஆறுசெல் மாக்கள் புட்கொளப் பொருந்தும்
சுரனே சென்றனர் காதலர்"

என்பதாம்.

இவைபோன்ற பண்டைய வழக்க ஒழுக்கங்களையும் பிறவற்றையும் இந்நூல் சுருங்கிய முறையில் விரித்துக் கூறுகின்றது. இதனாற்றான் உரையாசிரியர் பலரும் இதனையே பெரும்பான்மையும் உதாரணமாகக் காட்டுகின்றனர். இதனது அடிச் சுருக்கமும் பொருட் பெருக்கமுங் கண்டே இதனை "நல்ல குறுந்தொகை" என்று புலவர் பாராட்டுவாராயினர்.

# ௪. மருதம்

[பண்டிதர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்]

அன்பார்ந்த பெரியோர்களே,

நந் தமிழ்த் தாயின் அணியாக விளங்குந் தொகை நூல்களுள் ஒன்றுயதும், "நல்ல குறுந்தொகை" யென்று பாராட்டப்பெறுவது மாகிய குறுந்தொகையில் மருதத் திணையைப் பற்றிக் கூறத் தொடங்குகின்றேன்.

மருதம் என்பது, மருதமரம் அந்நிலத்திற் சிறந் திருத்தல்பற்றி வந்த பெய ரென்பாரும், அதனை மறுத்து ஊடியுங் கூடியும் போக நுகர்த்தல்பற்றி வந்த பெய ரென்பாரும் என இருதிறத்தா ராசிரியர். இனி, மருதம் என்பதற்கு வயல் என்ற பொருள் பிங்கலத்திற் காணப் படுதலின், அது பற்றி வந்த பெயரெனக் கூறின் அஃதும் ஆராய்தற் குரியதேயாம். வயல்பற்றி வந்த பெய ரெனின், முதற்பொருள் பற்றி வந்த பெயரெனவும், மருதமர முடைமை பற்றி வந்த பெயரெனிற், கருப் பொருள்பற்றி வந்த பெயரெனவும், ஊடியும் கூடியும் போக நுகர்தல்பற்றி வந்த பெயரெனின், உரிப் பொருள் பற்றி வந்த பெயரெனவுங் கொள்ளத் தகும்.

வயலும் வயல் சார்ந்த இடமும் மருத நிலம் எனப் படும். இந்நிலத்திற்குப் பெரும்பொழுது ஆறும் உரியன. விடியல் என்னுஞ் சிறுபொழுது ஒன்றே உரியது என்பா ரும், வைகறை விடியல் என்னுஞ் சிறுபொழுது இரண்டும் உரியன என்பாரும் என இருதிறத்தா ராசிரியர். இந் நிலத்திற்கு தெய்வம் இந்திரனுவான். இதனை, "ஊடலுங் கூடலுமாகிய காமச் சிறப்பு நிகழ்தற்கு மருத நிலத் திற்குத் தெய்வமாக 'ஆடலும் பாடலும் ஊடலும்உணர் தலும்' உள்ளிட்ட இன்ப விளையாட்டு இனிது நுகரும் இமையோர்க்கும் இன்குர லெழிலிக்கும் இறைவனுகிய இந்திரனை ஆண்டையோர் விழவு செய்து அழைத்தலின் அவன் வெளிப்படு மென்றுர்" (தொல். பொரு. சூ. 5 நச்) என்பதனுல் நன்கறியலாம். இந் நிலமக்கள் உழவராவர். பிற கருப் பொருள்களைக் களவியலுரை, தொல்காப்பிய

உரை, அகப்பொருள் விளக்கம் முதலியவற்றிற் காணலாம். இந்நிலத்து உரிப்பொருள், ஊடலும் ஊடல்நிமித்தமு மாம். "பரத்தை வாயி லுல்வர்க்கு முரித்தே, நிலத்திரி பின்றஃ தென்மனார் புலவர்" (தொல். பொரு. சூ. 224 நச்.) என்னுஞ் சூத்திரவுரையும் "மருதஞ் சான்ற மருதம்" என்ற சிறுபாணாற்றுப் படை யடிக்கு (186) எழுதப்பட்ட 'ஊடியுங் கூடியும் போகநுகருந் தன்மையமைந்த மருத நிலம்' என்னும் உரையும் ஈண்டு நோக்கற்பாலன.

ஊடல் என்பது, தலைவனுந் தலைவியும், வரைவு நிகழ்ந்த பின்றை இல்லற நடாத்தும் கற்புக் காலத்தே, தலைவன் பரத்தையிற் பிரிதல் காரணமாகவும், தலைவன் பால் நிகழாதவற்றை நிகழ்ந்ததாகக் கற்பித்துக் கூறுதல் காரணமாகவும் தலைவிக்கு நிகழும் சிறுகலா மாகும். இவ் வூடலைத் தலைவன், பாணன் முதலிய வாயில்களானுந், தன் கூற்றானுந் தீர்த்துத் தலைவியைக் கூடுவான். அவ் வமயம் உண்டாகும் இன்பம் மிகச் சிறந்ததாகும். இதனை "ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னுங், கூடலிற் காணப்படும்" (குறள். 1327.) என்னுந் தலைவன் கூற்றா லறியலாம். இங்ஙனம் இன்பஞ் சிறத்தல்பற்றி, இவ் வூடலை, ஊடல் நீங்கக் கூடிய தலைவனுந் தலைவியும் மீண்டும் விரும்புவர். இதனைத் "தலைவி இன்னும் ஊடுவாளாக, யான் அவள் பால் ஊட னீங்க வேண்டுவேனாக; இதற்கேற்ப இராக் காலும் நீட்டிப்பதாக." (ஊடுகமன்னோ வொளியிழை யாமிரப்ப, நீடுக மன்னோஇரா. 1329) என்று தலைவன் கூறுவதாகவும், "ஊடல் போல இன்பந் தருவதொருதேவ ருலக முண்டோ" ("புலத்தலிற் புத்தேனா டுண்டோ" 1323) என்று தலைவி ஊடலைப் பாராட்டிக் கூறுவதாகவும் வரும் திருக்குறட் பகுதிகளா லுணரலாம். இவ் வூடல் காமத்திற் கின்றியமையாத தொன்றென்பதும், இஃதின் றேற் காமஞ் சிறவாதென்பதும் "உப்பமைந்தற்றாற் புலவி" (குறள், 1302) "ஊடி யுயங்காக்கா லப்பின் றுங் காமம்" (நாலடி. 391) என்னும் ஆன்றோர் வாக்குக்களான் நன்கு புலனாம். குறுந்தொகையில் வரும் "புலவியஃ தெவனோ வன்பிலங் கடையே" (93) என்பதனாலும் அன்புள்ளவழிப் புலத்தல் பயன்படு

மென்பது பெறப்படுதல் காண்க. இஃ திங்ஙனஞ் சிறத்தல்பற்றியே,

"போக்கெல்லாம் பாலை புணர்த னறுங்குறிஞ்சி
ஆக்கஞ்சே ரூட லணிமருதம்—நோக்குங்கால்
இல்லிருத்தன் முல்லை இரங்க னறுநெய்தல்
சொல்விரிந்த நூலின் றுறை"

என்னும் பாடலுள் "ஆக்கஞ்சே ரூடல்" என்று பாராட்டப் பட்டது.

இனிப், பல்லாற்றான் வேண்டித் தெளிவித்தவழியும் தலைவியின் ஊடல் நீங்காவிடினும், களவின்கண் அல்லகுறிப் பட்டவழியும் தலைவனும் ஊடுத லுண்டு.

இதனை, T. 1770

"உணர்ப்புவரை யிறப்பினுஞ் செயற்குறி பிழைப்பினும்
புலத்தலு மூடலுங் கிழவோற் குரிய" (சூ. 156)

என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தா னறிக. எனவே, ஊடல் பெரும்பான்மை கற்பிற்குஞ் சிறுபான்மை களவிற்கும் உரித்தென்பது தெளிவாம்.

இத்தகைய மருதத்தைப் பற்றிய பாடல்கள் குறுந்தொகையில் நாற்பதுக் குட்பட்டவையே காணப்படுகின்றன. இவற்றைப் பாடிய புலவரும் இருபத்தைவருக் குட்பட்டவரே யாவர். இவர்களுட் பெண்பாற்புலவர், ஔவையாரும், அள்ளூர் நன்முல்லையாரும், ஒக்கூர் மாசாத்தியாரும் என மூவர் ஆவர். இவருள் ஔவையார் புறத்திற் பாடுத லன்றி, அகத்தைப் பற்றிய இந்நூற் கண்ணும் அன்பு கெழுமிய அஞ்சின் கொடையையும், வீரத்தையும் மறந்தாரில்லை. மருதம் பாடிய புலவர்களுள் ஒருவர், கழியிலுள்ள நெய்தற்பூ, வெள்ளம் கழிக்கு வருங்கால் மூழ்குந் தோற்றம், குளத்தின்கண் மூழ்கும் மகளிர் கண் போன்றுளது என்று கூறினமையால் கயமனார் எனவும், (9) மற்றொருவர், பரத்தையுந் தலைவனுங் கூடியதற்கு வில்லைப்பற்றிய விரல்களை உவமித்தமையால் வில்லக விரலினார் எனவும், (370) வேறொருவர், கள்ளுண்ணும் விருப்பமைந்த சிலருடைய செலவைக் கள்ளிற்கேளி ராத்திரை என்றமையாற்

கள்ளிலாத்திரையனார் (293) எனவும் சிறப்புப் பெயர் பெற்றனர் எனக் கருதப்படுகின்றனர்.

குறுந்தொகையிற் காணப்படும் மருதநிலம், கமழ்பூ மென்சினைக்காஞ்சி, செவ்விமருது, தேமா, நாறு வெண்பூக் கரும்பு, வரிப்புற விளைகனிப் பிரம்பு, தாமரை, ஆம்பல், நெல், பொய்கை, யாறு, வயல், கெண்டை, அயிரை, கணைக்கோட்டுவாளை, நீர்நாய், குருவி, குருகு, மனைக் கோழி, வெருகு முதலியவற்றாற் கவினுற்று விளங்குகின்றது.

"காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி" (45)
"கொண்டனை சென்மோ மகிழ்நநின் சூளே" (238)
"பழன வாளை கதூஉ மூரன்" (8)

முதலிய பகுதிகள் மருதத்திற்குச் சிறுபொழுது காலையென்பதற்கும், மருதநிலத் தலைவனுக்கு மகிழ்நன், ஊரன் என்னும் பெயர்களுண்மைக்குஞ் சான்றாகின்றன.

மருதத்திலுள்ள மகளிர் இயல்புகளாக, ஆம்பலின் முழுப்பூவைக் கூந்தலிற் சூடுதல், மனைப்படப்பையிலுள்ள மரத்தில் முல்லைக்கொடியைப் படரச் செய்து போற்றி அதன் நறுமலர்களைத் தங் கூந்தலிற் புனைதல், தோளிற் கரும்பெழுதுதல், பாசவலிடித்த உலக்கையை நெற்கதிர் பொற்புறுங் கழனி வரம்பிற் படுக்கவைத்து வண்டலயர்தல் முதலியனவும், அஃறிணைப் பொருள்களின் இயல்புகளாகப், பிரம்புக் கனியைக் குளத்திலுள்ள கெண்டைமீன் கவ்வுதல், கெண்டைமீனைக் குருகு உண்ணுதல், வாளைமீன் தேமாங் கனியைக் கவ்வுதல், வாளைமீனை நீர்நாய் உண்ணுதல், குருவிச் சேவல் தன் பெடை பொறையுயிர்க்கும் இடமமைத்தற் பொருட்டுக் கரும்பின் பூவைக் கோதியெடுத்தல், குருகின் வாயினின்றுந் தப்பிய கெண்டை. அயலிலுள்ள வெண்டாமரை முகையை அக் குருகெனக் கருதி அஞ்சுதல், மனையி லுறைகின்ற கோழிப்பெடை மாலையில் வெருகினத்தைக் கண்டு அஞ்சித் தன் பிள்ளைகளை யழைத்தல் முதலியனவுங் கூறப்பட்டுள்ளன.

பொறையன், எவ்வி, அஞ்சி, பாரி, சேந்தன் தந்தை அழிசி, அருமன் என்னுந் தலைவர் பெயர்களும், மேலைக் கடற்கரைத் தொண்டி, ஆர்க்காடு, குன்றூர் என்னும்

ஊர்ப் பெயர்களும், இவ்வூர்கள் முறையே பொறையன், அழிசி, வேளிர் என்னுந் தலைவர்கட்குரியன வென்பதும் புலனாகின்றன. இவற்றுள் தொண்டியும், ஆர்க்காடும் மகளிர் நலத்திற்கு உவமையாகக் கூறப்படுகின்றன.*

இனி, மருதத்திணையில் வரும் தலைவி கூற்று தோழி கூற்று, பரத்தை கூற்று, தலைவன் கூற்றுக்களையும், பழமொழிகளையும், உவமைகளையும் நோக்குவாம். கூற்றுக்களின் வாயிலாகப், புலவர் பெருமக்கள் காட்டிய, மக்களின் பல்வகை மனநிலை புலனாம். குறுந்தொகைச் செய்யுட்களைத் தம் உரைக்கண் மேற்கோள் காட்டிய உரையாசிரியர்கள், பலவாறு துறை கூறினும், யான் குறுந்தொகையிற் காணப்படுவனவற்றைப் பின்பற்றியே ஈண்டுக் கூறப்புகுகின்றேன்.

## தலைவி கூற்று

இது, தலைவன், தன் கூற்றாகவும், பாணன் தோழி முதலியோர் வாயிலாகவும் தலைவியை ஊடல் தீர வேண்டுங்கால் தலைவி, அவன் அன்பின்மை கூறி மறுப்பதாகவும், குற்றத்தை மறந்து அறங்கருதி உடன்படுவதாகவும் பாடப்படும். தலைவி, தன்னெஞ்சையும், தோழியையும், தலைவனையும் முன்னிலையாக்கிக் கூறுவாள்.

பரத்தையிற் பிரிந்த தலைவன் தலைவிபாற் புக்குத் தன் கூட்டத்திற்கு அவள் உடன்பாட்டை வேண்டினான்; அப்பொழுது தலைவி, அவன்பாற் செல்லுந் தன்னெஞ்சை நோக்கி, 'நீ இப்பொழுது அவன்பா லிரங்கி உடன்பட்டால் அவன் பின்னும் பரத்தைமையுடையனாவானாதலால் துயிலுநாள் சிலவாய்ப் பெருந்துயருழப்பாய்' என்று கூறி மறுத்தாள். (91)

தலைவனுக்கு வாயிலாகப் புக்க தோழியிடந் தலைவி, 'பரத்தை தலைவனைத் தேடிவந்து அழைத்துச் சென்று, விடுவாள்; யான் அளியேன்' என்று கூறி மறுத்தாள். (293)

---

* ஆதியருமன் மூதூர் (293) என்ச் சிறப்பிக்கப்பட்டிருக்கும் ஊர், சிறுகுடி என்பது, "மூதி லருமன் பேரிசைச் சிறுகுடி" (367) என்னும் நற்றிணைப் பகுதியாற் புலனாம்.

தலைவனுக்கு வாயிலாக வந்த தோழியை நோக்கித் தலைவி, தான் அவனுக்கு உரியளானமையின் அவனை ஏற்றுக்கோடல் அறமாம் என்னுங் குறிப்பு த்தோன்றத், 'தலைவனைத் தெளிந்து மணந்த காலம் ஒருநாளே; அது பலநாள் நலம் வெளவும் நோயாகின்றது' என்றாள். ஈண்டுத் தலைவன் "அருவி யன்ன பருவுறை சிதறி, யாறு நிறை பகரும் நாடன்" என்று சிறப்பிக்கப்பட்டுள்ளான். இதன்கண் 'யாறு அருவிபோன்ற பெருந் துளிகளைச் சிதறிப் புறத்தேயுள்ள பொருள்களுக்குப் பயன் பட்டாற் போலத் தலைவன் புறத்தேயுள்ள பரத்தையர்க்குப் பயன்படுவோன்' என்னுங் குறிப்புத் தோன்றுகின்றது. (271)

தலைவன் பரத்தைமாட்டுப் பிரிந்தவழி ஆற்றாளாகிய தலைமகள், அவன் வரக்கண்டு ஆற்றாமை, நீங்கிப் பள்ளியிடத்தே அவனை நோக்கி, 'இம்மை மாறி மறுமையாயினும் என் கணவன் நீயே யாகுக; யானே நின் நெஞ்சுகலந் தொழுகுபவள் ஆகுக' என்று கூறினாள். ஈண்டு மனைவி துணைவி முதலிய சொற்களாற் கூறாது 'நெஞ்சு நேர்பவள்' எனக் கூறியது நயமுடைத்து. (49)

தலைவன் வரவு நீட்டிப்பத் தோழி, தலைவன் நம்பால் அன்பிலன் எனப் பழித்தாள்; அப்பொழுது தலைவன் வந்தனன்; அவன் வரவை யுணர்ந்த தலைவி, "நாடன், இனியனாகலி னினத்தி னியன்ற, இன்னாமையினு மினிதோ, இனிதெனப் படூஉம் புத்தே ளுடே" என்றாள். தலைவன் பரத்தையிற் பிரிந்தானாயினும் நம் மாட்டு இனிமையை உடையனாதலின், உறவுடையாரால் செய்யப்படும் இன்னாமையைக் காட்டிலும் இனியதென்று சிறப்பிக்கப்படும் தேவருலகம் இனிமையையுடையதோ என்பதாம். தலைவன் செய்த இன்னாமை, இன்பம் மிகுதற்குக் காரணமாதலின், எஞ்ஞான்றும் ஒரு படித்தாய இன்பமுடைய புத்தே ளுட்டினுஞ் சிறந்ததாகக் கூறினாள். (288)

## தோழி கூற்று

இது, தலைவன் மாட்டும், வாயிலாக வந்த பாணன் முதலியோரிடத்தும் உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் நிகழும்.

தலைவனால் வாயிலாக விடுக்கப்பட்ட பாணன், தலைவன் மிக்க அன்புடையன் என்று பாராட்டியபொழுது தோழி, "யாரினு மினியன் பேரன் பினனே.........யாணரூரன் பாணன் வாயே" என்று கூறி மறுத்தாள். இதனால் பாணன் சொல்லளவிற் றலைவன் அன்பினனேயன்றி, உண்மையில் அன்பின னல்லன் என்பதும், முன்னிற்கும் பாணனைப் படர்க்கையான்போலக் கூறினமையால் அவள் சின மிகுதியும் புலனாம். இக்காலத்துஞ் சொல்லிய வண்ணஞ் செய்யாது சொல்லளவில் ஒழிபவனை 'வாயாற் செய்பவன்' என்று கூறுதலை நாம் காணலாம். (85)

தலைவன் தலைவியின் ஊடல் தீர்த்து உதவி புரிய வேண்டுமென்று தோழியை வேண்டினான்; அப்பொழுது அவள், 'முன்னர் என் தோழி கைக்கு மியல்புடைய வேப்பங்காய் தரினும் வெல்லக் கட்டி யெனக் கொண்டீர்; இப்பொழுது பாரி வள்ளலின் பறம்புமலைச் சுனையிலுள்ள, தைத்திங்களில் மிகக் குளிர்ந்து தெளிந்த இன்னீரைத் தரினும் சுடுவதாய் உவர்ப்புச் சுவையைத் தருமென்று வெறுத்தீர்; நுமது அன்பு அத்தன்மையது.' என முன் அன்புண்மையும், இப்பொழுது அன்பின்மையுங் காட்டி மறுக்குந் திறன் நம்மை இன்புறுத்துவதாகும். (196) இங்கே "வேம்பின் பைங்கா யென்றோழி தரினே தேம்பூங் கட்டி யென்றனிர்" என்றது,

"ஏனது சுவைப்பினு நீகை தொட்டது
வானோ ரமிழ்தம் புரையுமா லெமக்கென
அடிசிலும் பூவுந் தொடுதற் கண்ணும்",

—(சூ. 146)

என்னுந் தொல்காப்பியச் சூத்திரப் பகுதிக்கு மேற்கோளாதல் காண்க.

தலைவன் தோழிவாயிலாகத் தலைவியின் ஊடல் தீர்க்கக் கருதி, 'அவளிடம் நான் பரத்தைமை யுடையே னல்லேன்' என்று சூளுற, அதனை மறுக்குந் தோழி, 'உன் சூளி னியல்பை நன்கறிவேம்; எம்பாற் சூளுற வேண்டா, நீ நுகர்ந்த எம் நலத்தைத் தந்து நின் சூளை நீயே கொண்டு செல்க' என்றாள். (238) 'பரத்தையிற் பிரிந்த தலைவன் வந்தபோழ்து, நம் நலந்தா வெனக் கேட்போம்'

எனத் தோழி தலைவியிடம் கூற, அதனைத் தலைவி மறுத்துக், கொடுத்ததைத் தாவென மீட்டுங் கேட்டலைக் காட்டிலும் இறத்தல் நன்று, என்று கூறுவதாகவும் ஒரு செய்யுள் காணப்படுகிறது. (349) இங்ஙனமே உண்ட நலத்தைத் தா வெனத் தலைவனைக் கேட்பதாகப் பல பாடல்கள் சங்க நூல்களிற் காணப்படுகின்றன.

தலைவன் சூளுற, இவ்வாறே பரத்தையர்மாட்டுஞ் சூளுற்றிருப்பான் எனக் கருதிய தோழி, அவனை நோக்கி, 'நீ இவ்வாறே பரத்தையரிடமுஞ் சூளுற்று அவர் நலம் நுகர்ந்து சூள் பிழைத்து, இங்கு வந்துஞ் சூளுறுகின்றாய்; இச் சூளும் அவர்பால் நிகழ்த்தியது போன்ற பொய்ச் சூளே யாகு மாதலால் ஏற்கத் தகுவதன்று' என நகையாடிக் கூறிய பாடல் சுவை தருகின்றது. (384)

"வாரலெஞ் சேரி தாரனின் றூரே, அலராகின்றால்" (258) எனக் கூறித் தோழி மறுத்தலும் உண்டு.

தலைவி கற்புக் கடம் பூண்டா ளாதலாலும், உயர் குடிப் பிறந்தா ளாதலாலும் தலைவன் கொடுமையை மறைத்து அவனை ஏற்றுக்கோடலும் உண்டு. அதனை யறிந்த தோழி, "யாயா கியளே......தண்ணந் துறைவன் கொடுமை, நம்முனணிக் கரப்பா டும்மே" (9) எனவும், "காஞ்சி யூரன் கொடுமை கரந்தன ளாகலி: னணிய வருமே" (10) எனவும், "தெறுவ தம்மவித் திணைப்பிறத் தல்லே" (45) எனவும் தலைவன் கொடுமையும், தலைவியின் துன்பமும் பெருந்தன்மையும் புலப்படக் கூறும் அழகு நோக்கத்தக்கது.

## பரத்தை கூற்று

பரத்தையர், தலைவிக்கு ஊட லுண்டாதற்கு நிமித்த மாவ ராதலால் அவர் கூற்று மருதத் திணையாகக் கொள்ளப்படும். பரத்தை கூற்று, தலைவியேனும் மற்றொரு பரத்தையேனும் தன்னை இகழ்ந்து கூறியதாகக் கேள்வியுற்ற போழ்து நிகழ்கின்றது. பரத்தையிற் பிரிவு ஒப்புயர்வற்ற குண நலங்களாற் சிறந்த தலைவன் பெருமைக்கு இழுக்காகவே தோன்றுகிறது; இதனைத், தலைவியின் ஒழுக்கந் தவறாத கற்புத்திறனைப் புலப் படுத்தல் கருதியும், அவள் ஊடற்குக் காரணமாய்

இன்ப மிருத்தல் கருதியும் நாடக வழக்குப் பற்றிப் புலவர்கள் கட்டிய வழக்கென்னலாம். தலைவனுக்கு இழுக்கைத் தருதல் கருதியே அகப்பொருணூ லுரையாசிரியர்கள் இதனை யமைத்தற்குப் பலவாறு காரணங் கூறுவாராயினர்.

தலைவி தன்னை இகழ்ந்து கூறியதாகக் கேட்ட ஒரு காதற் பரத்தை, தலைவிக்குப் பாங்காயினோர் கேட்பத் 'தலைவி செருக்குற்று என்னை இகழ்ந்ததற்குக் காரணம் தலைவன் அவள் வயப்பட்டமையே' யென்கின்றாள். (8) அங்ஙனம் கூறியதாகக் கேட்ட மற்றொரு பரத்தை, 'நானுந் தலைவனும் புதுப்புன லாடப் புகுகின்றேம்; அவள் வல்லளாயின் தலைவனை என்னிடமிருந்து மீட்டுக் கொள்வாளாக' என்கின்றாள். (80)

'என் கணவனை வலிதின் நயப்பித்துக்கொண்டு புறம் போகாவாறு செய்தாள்' என்று தலைவி பழி கூறியதாக அறிந்த காதற்பரத்தை, தலைவிக்குப் பாங்காயினோர் கேட்பத், தன் தோழியை நோக்கி, 'அவன் என்பால் வலிய வந்தானே யன்றி யான் நயப்பிக்க வந்தானல்லன்; அவ்வாறு யான் செய்திருப்பிற் கடல் என்னை வருத்துவதாக' என்கின்றாள். இப் பாடலிற் "கணைக்கோட்டு வாளைக் கமஞ்சூன் மடநாகு, துணர்த்தேக் கொக்கின் தீம்பழங் கதூஉம்" செய்தி கூறப்பட்டுள்ளது; இதனால் வாளைமீன் தானிருந்த விடத்திலிருந்தே முயற்சியின்றித் தேமாங் கனியைப் பெற்றதுபோல யான் முயலாமலே தலைவனைப் பெற்றேன் என்னுங்குறிப்புப் புலனாகின்றது. (164) மற்றொரு பரத்தை தலைவிக்குப் பாங்காயினோர் கேட்பத், 'தலைவன் ஈண்டு எம்மொடு கூடாது வாளா விருப்பின் இரண்டுடலை யுடையேமாயும், கூடின் ஒருடலை யுடையேமாயும் உள்ளேம்; ஆதலின், அவன் கருத்திற் கேற்ப வொழுகுதலன்றி யாம் வலிந்து அவனைக் கொண்டிலம்' என்று கூறினள். இங்கே "பொய்கை யாம்ப லணிநிறக் கொழுமுகை, வண்டுவாய் திறக்குஞ்" செய்தி கூறப்பட்டுள்ளது; இதனால் ஆம்பல் முகை வண்டு திறக்குங்கால் மலர்ந்து அதற்குத் தேனளித்து மகிழ்விப்பதுபோலத் தலைவன் கூடுங்காற் கூடி அவனுக்கு இன்பளிப்பேம்' என்பது புலனாகின்றது. (370)

மற்றொரு பரத்தை தன்னைப் புறங்கூறினாள் எனக் கேட்ட இற்பரத்தை, அப் பரத்தைக்குப் பாங்காயினார் கேட்ப, 'மகளிர் துணங்கைக் கூத்தும், மள்ளர் சேரிப் போரும் நிகழும் விழாக் காலமும் வந்தது; வீரர் தம் அன்புடை மகளிரொடு ஒன்றுபட்டு விளையாடும் அக் காலத்தில் தலைவன்என்பால் அன்புடையனாதலை யாவரும் தெளிவாக அறிவர்' எனத், தான் வலிந்து அவனைப் பற்றுமையைப் புலப்படுத்தினாள். (364)

## தலைவன் கூற்று

இஃது, உணர்ப்புவயின் வாரா ஊடற் கண்ணும், அல்ல குறிப்பட்டு மீளும்போதும் நிகழும்.

தலைவன் தெளியச் செய்யவுந் தெளியாத ஊடல், உணர்ப்புவயின் வாரா ஊடல் என்பப்படும்.

இரவிலே தலைவனுந் தலைவியுங் கூடுதற்கு ஓரிடந் தலைவியானுதல், தோழியானுதல் குறிக்கப்படும்; அவ் விடத்திற்குத் தலைவன் வந்து ஆண்டுள்ள பறவைகளை யெழுப்புதல் முதலிய குறிகளால் தன் வரவை அறி விப்பான்; அதனை அறிந்த தோழி தலைவியை யழைத்து வந்து ஆண்டு நிறுத்துவள்; இவ்வாறு இரவுக் குறி நிகழுங்கால் ஒருநாள் தலைவன் வருதற்கு முன்னரே பிற காரணங்களாற் பறவை யெழுதல் முதலியன நிகழ்ந்தன; அவற்றைத் தலைவன் செய்தனவாகக் கருதித் தோழியுந் தலைவியுங் குறியிடத்துப் போந்து தலைவனைக் காணமல் மீண்டனர்; பின்னர்த் தலைவன் வந்து அக் குறிகளை நிகழ்த்த முன்னர்ப் பிழைத்தமையால் அவர்கள் வாரா தொழிந்தனர்; தலைவனும் வருந்தி மீண்டனன். அப் பொழுது தலைவன் தன்னெஞ்சை நோக்கிக் கூறுங் கூற்றே அல்லகுறிப்பட்டு மீளும்போது கூறுங் கூற்று எனப்படும். இவற்றிற் குதாரணமாகப் பரணர், கபிலர் பாடல்கள் காணப்படுகின்றன.

தலைவன் தன்பால் தவறின்மை கூறித் தெளி விக்கவும் தலைவி ஊடல் நீங்காளாகத், தன்னெஞ்சை நோக்கித், 'தலைவி நமக்கு அயலாள்போலக் காணப்படு கின்றாள்; ஆதலால், நீ இனி எவ்வி யென்னும் வள்ளலை யிழந்த யாழ்ப்பாணர் தலை பொற்பூ வின்றிப் பொலிவழிந்

திருத்தல் போலப் பொலிவழிந்து வருந்துக' என்று கூறுகின்றான். (19)

" குணகடற் றிரையது பறைதபு நாரை
திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை
யயிரை யாரிரைக் கணவந் தாங்குச்
சேய ளரியோட் படர்தி
நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே " (128)

என்னும் பாடல், தலைவன் தன் உள்ளத்தை நோக்கி, உணர்ப்புவயின் வாரா ஊடற்கட் கூறியதாகவும், அல்ல குறிப்பட்டு மீளும்போது கூறியதாகவுந் துறை வகுத்தாராற் கொள்ளப்பெற்றுளது.

உணர்ப்புவயின் வாரா ஊடற்கட் கூறியதாகக் கொள்ளுங்கால், 'கிழக்குக் கடற்கண் ணுள்ளதாகிய முதுமையாற் சிறை யிழந்த நாரை, சேரனது மேற்குத் திசையி லமைந்த தொண்டிப் பட்டினத்தின்கடற்றுறையி லுள்ள அயிரை மீனாகிய பெறுதற்கரிய உணவை முன்னுண்ட பழக்கத்தாற் பெறுதற்குத் தலையை மேலே தூக்கினாலும், அயிரை சேய்மைக்க ணிருத்தலாலும், தான் பறந்து சென்று பெறுதற்குக் கருவியான சிறையை யிழந்தமையாலும் அது பெறுதற் கரிதாயவாறு போல, நீ தலைவியை முன் னுகர்ந்த பழக்கத்தாற் பெறவிரும்பினும், அவள் நெஞ்சாற் சேயளா யிருத்தலாலும், ஊடல் தீர்க்கும் வலி உனக்கு இன்மையாலும் பெறற்கரியளாவாள்' என்பதாம். அயிரை செய்மைக்க ணிருத்தல் போலத் தலைவி நெஞ்சாற் சேயளாயினள் எனவும், நாரை பறந்து சென்று பெறுதற்கேற்ற சிறையிழந்தது போல, உள்ளம் ஊடல் தீர்க்கும் வலி யிழந்த தெனவுங் கொள்க.

அல்லகுறிப்பட்டு மீளுந் தலைவன் கூற்றாகக் கொள்ளுங்கால், 'நாரை சேய்மைக்கணுள்ள பெறுதற் கரிய அயிரையைப் பெறத் தலையெடுத்தாற் போல, நீ, சேயளாய்ப் பெறுதற்கரியளான தலைவியைப் பெற நினைத்தாய்' எனக் கொள்ளவேண்டும். ஈண்டுச் சேய்மை-இடத்தாற் சேய்மை. அருமை-காவலுண்மையாற் பெறுதற் கருமை. இரவுக்குறி இல்வரையிகவாதே நிகழுமாயினும், தன்னு ளுடைதல் இயலாமையால் தலை

வனுக்குத் தலைவி யிருக்குமிடம் சேய்மையது போலத் தோன்றுதலாற் சேயள் என்றான். நாரை பறந்துசென்றடைதற்குக் கருவியான சிறையை யிழந்தது போலத், தலைவன் இருண் மிகுதியாலும் முன் சென்ற பழக்கமின்மையாலும் தலைவியிருக்கும் இடத்திற்குச் செல்லும் வலியில னாயினான் என்க. அயிரை தெய்வத்தாற் காக்கப் படுதலாற் பெறுதற் கரிதாயவாறு போலத், தலைவி, செவிலி முதலியோராற் காக்கப்படுதலாற் பெறுதற் கரிய ளாயினாள் என்க. 'திண்டேர்ப் பொறையன் றொண்டி முன்றுறை யயிரை' என்றதனால், தலைவியுடைய தந்தையின் உயர்வும் புலனாம்.

தொல்காப்பியத்து "உணர்ப்பு வரை யிறப்பினும்" (156) என்னுஞ் சூத்திர வுரையில், ஆசிரியர் நச்சினார்க்கினியர், அல்லகுறிப்பட்ட தலைவன் ஊடற்கு மேற்கோளாக இப்பாடலைக் காட்டி "நாரை தெய்வங் காக்கும் அயிரை இரையை வேட்டாற் போல் நமக்கு அரியவாயினாளை நீ வேட்டா யென்பதனாற் குறிபிழைத்துழி ஊடினமை கூறிற்று" என எழுதி யிருத்தலாலும், இறையனாரகப்பொரு ளுரையாசிரியரும், அகப்பொருள்விளக்க முடையாரும் இப் பாடலையே இத்துறைக்கு மேற்கோளாகக் காட்டியிருத்தலாலும் அம் மூவருக்கும் இப்பாடல் அல்லகுறிப்பட்டு மீளுந் தலைவன் கூற்றென்பதே கருத்தாதல் புலனாம். அவர்கள் இப் பாடலிற் சேயள் என்பதற்கு நெஞ்சாற் சேயள் என்னும் பொருள், இடத்தாற் சேயள் என்பது போல எளிதிற் போதராமையும் பிற இயைபுகளும் நோக்கி அவ்வாறு கொண்டனர் போலும். அவர்களுள் நச்சினார்க்கினியரும், அகப்பொருள் விளக்க முடையாரும் உணர்ப்புவயின் வாரா ஊடற்கு மேற்கோளாக "எவ்வி யிழந்த" என்னும் பாடலைக் காட்டியிருத்தலுங் காண்க.

இனி இங்ஙனமே அகநானூற்றில் நக்கீரராற் பாடப்பட்டதாக வுள்ள "நின்வாய் செத்து" (126) என்னும் பாடலும் இவ் விரு துறைக்கும் ஏற்றதா யுள்ளது. அப் பாடலில் "திதியனொடு பொருத வன்னி போல, விளிகுவை......... மின்னேர் மருங்குற் குறுமகள், பின்னிலை விடாஅ மடங்கெழு நெஞ்சே" என்னு மடிகள் உணர்ப்பு வயின் வாரா ஊடற்கண் தலைவன் தன்னெஞ்சை நோக்கி,

அவள் ஊடல் தீராளாகவும் நீ அவள் பின்னிற்றலை விடு கின்றாயில்லை என்று கூறியதாகக் கோடற்கும், அல்ல குறிப்பட்டு மீளும்போது தன்னெஞ்சை நோக்கி, அவள் வெறுத்துக் குறிக்கண் வாரா தொழியவும் நீ அவளை நினைத்துப் பின்னிற்றலை விடுகின்றாயில்லை என்று கூறியதாகக் கோடற்கும் ஏற்றதாதலறிக. இப்பாடல் இவ் விரு துறைக்கே யன்றித் தோழியைப் பின்னின்ற தலைமகன் தன்னெஞ்சிற்குச் சொல்லியதாகக் கோடற்கும் ஏற்றதெனக் கூறப்பட்டுள்ளது.

## பழமொழிகள்

பழமொழிகள் எனப்படுவன, தொன்றுதொட்டுப் பரவை வழக்கினுள் வழங்கப்பெற்று வரும் மூதுரைகளே யாம். இவை நன்னெறி காட்டும் பொருட்செறி வுடையன. இவற்றுள் நானூறு பழமொழிகளை யமைத்துப் பாடப்பட்ட நூலே பதினெண் கீழ்க் கணக்குள் ஒன்றாய பழமொழியாம். இவை ஆங்கிலத் திலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இவற்றுள் சில இந்நூற்கண் அமைந்திருக்கு மாற்றைக் காண்பாம்.

தலைவன் தலைவியிடத்துப் பாணனைத் தூதாக விட்டுத் தான் பின்னிற்றலைக் கண்ட தோழி, தலைவனை நோக்கி,

> " குருகுகொளக் குளித்த கெண்டை யயல
> துருகெழு தாமரை வான்முகை வெரூஉங்
> கழனியம் படப்பைக் காஞ்சி யூர
> ஒருநின் பாணன் பொய்ய னாக
> உள்ள பாண ரெல்லாங்
> கள்வர் போல்வர்நீ யகன்றிசி னோர்க்கே " (127)

என நகைச்சுவை தோன்றக் கூறுகின்றாள். இதன்கண், முன் தலைவனால் விடுக்கப்பட்ட பாணனொருவன் பொய் கூறினான் என்பதும், அதனால் இப்பொழுது முன் னிற்கும், தலைவனுடைய பாணனும் பொய்யன்போலக் காணப்படுகிறான் என்பதும் புலனாம். இக்கருத்துக் கேற்பக், குருகாற் கௌவப்பட்டுத் தப்பி நீருட் குளித்த கெண்டை, தனக்கு அயலிலுள்ள வெண்டாமரை

மூகையை, அந்நாரை என்று கருதி அஞ்சும் வயலூரன் எனத் தலைவன் சிறப்பிக்கப்பட்டிருத்தலுங் காண்க. ஒரு பாணன் பொய்யனானமையால் பொய்ய னல்லாத பாணனும் பொய்யனாகக் காணப்பட்டது போல, நாரை தீய தானமையால், தீயதல்லாத (நாரைபோற் றோற்ற முடைய) வெண்டாமரை மூகையும் தீயதாய் வெருவற்குக் காரணமாயிற்று என்பதாம். இங்கு "அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்" என்ற பழமொழி நினைக்கத் தக்கதாம். ஈண்டுப் பாணனைப் பொய்ய னெனத் தோழி கூறியதாகப் பாடிய ஓரம்போகியார் ஐங்குறு நூற்றில் தாம் பாடிய "அஞ்சிலோதி" (49) என்னும் பாடலில் தலைவி கூற்றாக "யாண ரூரநின் பாண் மகன், யார்நலஞ் சிதையப் பொய்க்குமோ வினியே" என நகைச்சுவை படக் கூறியிருத்தலும் அறிக.

பரத்தைபாற் சென்று வந்த தலைவன் தோழியை வாயில் வேண்ட, அவள் அவனை நோக்கி, 'நீ பரத்தைய ரொடு கூடி நீர்விழா ஆடியதற் கேற்ற அடையாளங்க ளொடு வருகின்றாய். இவ்வூரார், 'ஒரு பசுவால் வரும் ஊதியத்தைப் பெற்று உயிர்வாழும் சீரில்லாத இவன் வாழ்க்கை இவ்விளவழகி வந்ததனால் இப்பொழுது விழாவை யுடையதாயிற்று' என்று கூறுவர்; இங்ஙனம் நினக்கு மகிழ்வும் பெருமையும் அளித்த தலைவியைப் புறக்கணித்தாய்' என்று கூறி மறுத்தாள். (295) இங்கே "ஏர்பிடித்தவன் என்ன செய்வான் பானைபிடித்தவள் பாக்கியம்" என்னும் பழமொழியும் இதனை நினைத்துப் பிற்காலப்புலவர் ஒருவர் பாடிய "பானைபிடித்த முகூர்த்தத்தினால் வந்த பாக்கியமே" என்ற அடியும் நினைவிற்கு வருகின்றன. இங்கு "ஓரான் வல்சிச்சீரில் வாழ்க்கை" என்ற கருத்து,

"சிறப்புஞ் சீரு மின்றிச் சீறூர்
நல்கூர் பெண்டின் புல்வேய் குரம்பை
ஓரா யாத்த ஒருதூண் முன்றில்
ஏதில் வறுமனை" (369)

என அகநானூற்றிலும் வருதல் காண்க. தலைவி வந்த பின்பே தலைவனுக்குச் செல்வம் உண்டாயிற் றென்பதை

"விழவு முதலாட்டி" (10) என்று தலைவியை ஓரம்போகியார் கூறுதலாலும் அறிக.

வாயில் வேண்டிய தலைவனுக்குத் தோழி மறுத்ததாக வரும் மற்றொரு பாடலில், 'நீர் நீடாடிற் கண்ணுஞ் சிவக்கும்; தேனும் பன்முறை யுண்டார் வாயிற் புளிக்கும்; அவைபோல, நெடுங்காலம் பழகினமையால், முன் உனக்கு இனிய எம்பால் இப்பொழுது வெறுப்புளதாமாயின் எம்மை எம் தந்தை இல்லத்துக்கு அழைத்துச் சென்று விடுவாயாக' என்கின்றாள். (354) இவ்வாறு சொல்லாமல், தந்தை யில்லத்துக்குத் தாமே சென்று விடுதலை இன்றுங் காணலாம். ஈண்டுப் "பழகப் பழகப் பாலும் புளிக்கும்", "அளவுக்கு மிஞ்சினல் அமிர்தமும் நஞ்சாம்" என்னும் பழமொழிகள் நினைவுகூரத்தக்கன.

## உவமைகள்

உவமை கூறுவார்க்கு இன்றியமையாததாகிய உற்று நோக்கும் பெற்றியிற் றலைசிறந்த புலவர்பெருமக்கள் சில அடிகளாலாகிய செய்யுட்களையுடைய இந்நூற் கண்ணுஞ் சிறந்த பல உவமைகள் கூறியுள்ளனர். அவற்றுட் சிலவற்றைக் கூறுகின்றேன்.

தலைவன், தலைவி விரும்பியவாறு ஒழுகினுன் என்றுரைக்குங் காதற் பரத்தை, தலைவனுக்கு ஆடிப் பாவையை உவமித்தாள்; கண்ணாடியிற் றோன்றும் உருவம், முன்னின்றார் தம் கை கால்களைத் தூக்கினால் தானுந் தூக்குவது போலத், தலைவன் தலைவிக்கு அடங்கி அவள் மனம்போ லொழுகினுன் என்பதாம். (8)

தலைவியின் மெலிவுக்குத் தோழி, நல்ல மூட்டுவாயை யுடைய செப்பில் அடைத்துவைப்பத் தனித்த பூவை உவமை கூறினள். (9)

பரத்தையிற் பிரிந்த தலைவனுக்குத் தூதாக வந்த பாணர் முதலியோரை நோக்கித் தோழி மறுத்துக் கூறுவதாக வரும்

**" தச்சன் செய்த சிறுமா வையம்**
**ஊர்ந்தின் புறாஅ ராயினுங் கையின்**
**ஈர்த்தின் புறூஉ மிளையோர் போல**

**உற்றின் புறேள மாயினு நற்றேர்ப்**
**பொய்கை யூரன் கேண்மை**
**செய்தின் புற்றனெஞ் செறிந்தன வளையே "** (61)

என்னுஞ் செய்யுளிற் காணப்படும் உவமையின் நயமும் நுண்மையும் உற்றுணர்ந்து மகிழத்தக்கன. சிறுவர், பெரியர் ஊருந் தேரை ஊர்ந்து இன்புறுவிடினும் சிறு தேரை ஈர்த்துத் தாமும் அப் பெருந் தேரூர்வார் அடையும் மகிழ்வை அடைவதுபோல, யாம் தலைவனைக் கூடிப் பரத்தையர் பெறும் மெய்யுறு புணர்ச்சியைப் பெற்று இன்புறே மாயினும், அவன் நட்பைப் பெருக்குதலால் அப் பரத்தையர் பெற்ற இன்பத்தையே பெற்றேம்; அதனுல் எம் வளைகள் கழன்றில என்பதாம். சிறுவர் பெருந்தேரை நினைத்து மகிழ்வதுபோல, யாம் தலைவனை நினைத்து மகிழ்கின்றேம்; நினைவளவில் மகிழ்ச்சியல்லது எமக்குக், கூடுதலாலாலுண்டாம் மகிழ்ச்சியை அவன் தந்திலன் என்பதைப் புலப்படுத்தி உடன்பாடின்மையைத் தெரிவித்தாள்.

தலைவி வல்லளாயின் யான் கைக்கொண்ட தலைவன் மார்பை என்னிடமிருந்து மீட்டுக்கொள்வாளாக என்று கூறும் பரத்தை, அதற் குவமையாக எழினி தன் நிரையைக், கைக்கொண்ட பகைவரிடமிருந்து மீட்டுக் காத்தலைக் கூறினுள். (80)

தலைவன் தலைநா ளன்ன அன்பினன் என்று கூறி வந்த தூதை ஏற்றுக்கொள்ளுந் தலைவி, அதனைத் தோழியிடம் புலப்படுத்துங்கால், "நெய்பெய் தீயின் எதிர்கொண்டு" என்றுள். நெய்பெய்யப்பட்ட தீயைப்போல விரைந்தெழுந்து அத் தூதை ஏற்றுக்கொள்வோம் என்பதாம். (106)

பரத்தைபாற் சென்று, வாயில் வேண்டி வந்த தலைவற்கு, நீ இங்கு வந்தாற் பரத்தையர் பழி கூறுவர்; ஆதலின் வாரற்க என மறுக்குந் தோழி, தலைவனைத் தலைவி கவர்ந்து தன்பால் இருத்திக்கொள்வாளோ என்னும் அச்சத்தாற் பரத்தையர் பழி கூறுவர் என்பதற்கு உவமையாக, மனையி லுறையும் கோழிப் பேடை வெருகினந் தன் பிள்ளையைக் கவருமோவென அஞ்சி அழைத்ததைக் கூறினுள். (139)

தலைவன் தன்பாற் பரத்தைமை இன்மை கூறித் தெளிவிக்கவுந் தெளியாது வேறுபட்ட தலைவி கூற்றாக வரும்

"சுரஞ்செல் யானைக் கல்லுறு கோட்டிற்
றெற்றென விறீஇயரோ வைய மற்றியாம்
நும்மொடு நக்க வால்வெள் ளெயிறே
பாணர், பசுமீன் சொரிந்த மண்டை போல
எமக்கும் பெரும்புல வாகி
நும்மும் பெறேஎ மிறீஇயரெம் முயிரே" (169)

என்னும் பாடலில், தலைவனை நோக்கி நும்மொடு நகைத்த எயிறுகள் விரைவில் முறிக என்றுரைக்குந் தலைவி அதற்குவமையாக, யானையின், மலையைக் குத்திய கொம்பு முறிதலையும், தன் இன்னுயிர் தனக்கு இன்பந் தாராமையால் அவ்வுயிரிடத்துத் தனக்கு வெறுப் புண்டாவதற்கு உவமையாகப், பாணருடைய பசுமீன் சொரிந்த மண்டை (பாத்திரம்) புலால்நாற்ற முடைமையால் அம் மண்டையிடத்து அப் பாணர்க்கே வெறுப் புண்டாதலையுங் கூறுதல் கண்டுணர்க. இப்பாடல் தலைவியின் கடுஞ்சினத்தைக் காட்டுகின்றது.

வாயிலாகப் புக்க தோழிக்குத் தலைவி "நெருஞ்சிக் கட்கின் புதுமலர் முட்பயந் தாஅங்கு, இனிய செய்தநங் காதலர், இன்னா செய்த லோமென் னெஞ்சே" (202) என்கின்றாள்; இதன்கண், தலைவன் முன் இனியனா யிருந்து இப்பொழுது இன்னாதவனாக இருக்கின்றான் என்பதைப் புலப்படுத்த, நெருஞ்சி மலர் கட்கினிதா யிருந்து பின் ஊற்றிற்கு இன்னாத முள்ளைத் தருதலை உவமை கூறியிருத்தல் கண்டு இன்புறத் தக்கது.

தலைவனுக்குத் தூதாகப் புக்க தோழி, தலைவியிடம் 'நீ முன் தலைவன்பாற் பேரன்புடையையா யிருந்தாய்; அதற்கு மாறாக இப்பொழுது புலத்தல் தகாது; இனியும் அவ்வாறே யன்புடையையா யொழுகல் வேண்டும்' என்றாள். அதற்குத் தலைவி, 'முற்காலத்து (களவுக்காலத்து) வேற்றிடத்திலிருந்துவரவேண்டியவரா யிருந்தாராதலின் அப்பிரிவு புலக்கத் தக்கதன்று; இப்பொழுது (கற்புக் காலத்து) வேற்றுநாட்டினரு மல்லர்; வேற்று ஊரினரு மல்லர்; அண்மையிலே ஓரில்லத்திருக்கு மியல்புடையார்;

என்னை நீங்கிப் பரத்தைமை உடையராயிருக்கின்றனர்; ஆதலால் இப்பொழுது அவருக்காகப் பரியேன்' என்கின்றாள். ஈண்டுத் தலைவன் தன்னை ஓரீஇ யொழுகுதற்கு உவமையாகக் "கடவு ணண்ணிய பாலோரை" (203)க் கூறுகின்றாள். முனிவரை அணுகினார் தம் தூய்தன்மை காரணமாக அஞ்சி விலகி யொழுகுதல்போலத், தலைவன் என்னை விலகி யொழுகுகிறான் என்பதாம். இவ்வுவமையால் தலைவனது பரத்தைமையாகிய தூய்தன்மையும் தலைவியின் தூய்மையுங் குறிப்பாற் புலனாகின்றன. இனிக் "கடவுணண்ணிய பாலோர் போல, ஓரீஇ யொழுகு மென்னை" என்பதற்கு முனிவரை அணுகினார் அவர்களுடைய நன்மொழியாற் பற்றற்றவராய் மகளிரை அணுகாது விலகுதல் போல என்னை விலகி ஒழுகுகின்றான் எனப் பொருள் கூறினும் பொருத்தமுடையதே. இது தலைவன் பரத்தைமை யுடையனாதலை நினைந்து நகையாடியதாம். ஈண்டு ஐங்குறுநூற்றில் வரும் (19) "ஊரன் ஆகலிற் கலங்கி, மாரி மலரிற் கண்பனி யுகுமே" என்னும் பகுதியும் இப் பாடற்றலைப்பில் "எதிர்பாடின்றி ஒரூர்க்கண்ணே உறைகையினாலே ஆற்றேனாகின்றேன்" என எழுதப் பட்டிருத்தலும் நினைக்கத் தக்கன.

தலைவனுக்கு வாயிலாகப் புக்க தோழிபால் தலைவி, தலைவர் இங்கு வரினும் 'என்னோடு அளவளாவாமற் செல்வர்; அவருக்கு என்பால் அன்பிலதாயிற்று' என்று கூறுகின்றாள்; அப்பொழுது, தலைவன், தன்னைக் கண்டும் அயலாள் போல வெறுத்து ஒதுக்குதற்கு உவமையாக, ஏதிலாளர் சுடலையையும், அவன் வெறுத்தொதுக்குதலால் தன் காமம் அழிதலின் விரைவிற்கு உவமையாக, வில்லுமிழ் கணையின் விரைவையுங் கூறுகின்றாள். (231)

தலைவனுக்குத் தோழி வாயில் நேருங்கால் அவனை நோக்கி 'நீ எமக்கு இன்னாதன பல செய்யினும் யாம் நின்னையின்றி யமையும் வன்மையில்லேம்' என்றுரைக்கின்றாள்; அதற்கு உவமையாக, உழவர் நெற்பயிருக்குக் களையாயிருந்த நெய்தலைப் பறித்து வாடுமாறு வரம்பிற் போகட்டாலும், அந்நெய்தல் வேற்றிடஞ் செல்லாது மீண்டும் அச்செறுவிலே பூத்தலைக் கூறியிருத்தல் உற்று நோக்கத் தக்கது. (309)

காஞ்சிப்பூங் கொத்துக்குப் பயற்றுக் கொத்து உவமை. (10)

முள்ளிச் செடியின் முள்ளுக்கு அணிற் பல்லும், நீருக்கு மணியின் நிறமும் உவமை. (49)

ஞாழற் பூவிற்கு வெண்சிறுகடுகு உவமை; (50) மற்றோரிடத்தில் (397) ஞாழற் பூவிற்கு (ஆரல் மீன்) முட்டை உவமிக்கப்பட்டிருத்தலும் ஈண்டு அறிதற் பாலது.

மலையிற் படர்ந்துள்ள இற்றிமரத்தினது வெள்ளிய வேருக்கு மலையிலிருந்து விழும் அருவி உவமை. (106)

மருதக் கருப்பொருளல்லாதன மருதத்திற் கூறப்படுதற்கும், அகநானூறு, நற்றிணை முதலியவற்றில் மருதம் என்ற தலைப்பிற் களவிற் குரிய சில துறைகள் காணப்படுதற்கும் அமைதி தொல்காப்பியத்திற் கண்டுகொள்க.

## முடிவுரை

இதுகாறுங் கூறியவாற்றால், மருதத் திணையின் முதல் கரு உரிப் பொருள்களிவையென்பதும், உரிப்பொருளாய ஊடலின் சிறப்பும், குறுந்தொகைப் பாடல்களிற் காணப்படும் மருத நிலத்தின் இயல்பும், தலைவர் பெயர்களும், ஊர்ப்பெயர்களும், தலைவி கூற்று, தோழி கூற்று, பரத்தை கூற்று, தலைவன் கூற்றுக்கள் இன்னின்னவாறு நிகழ்கின்றனவென்பதும், பழமொழிகளும், உவமைகளும், பிறவும் ஒருவாறு புலனும்.

இன்னும் நுணுகி ஆராயின் ஆழமுடைத்தாதலின் அறிஞர்கள் இந்நூலை ஆராய்ந்துணர்ந்து தமக்கும் பிறர்க்கும் பயன்படுத்துவாராக.

---

# ரு. குறிஞ்சி

[ வித்துவான் பா. சொக்கலிங்கம் ]

ஆறறிவுடைய மக்களாவார் ஐம்புல இன்பத்தினும் அறிவானடையும் இன்பத்தையே இனிதெனக் கொள்வர். அவ்வின்பத்தின் உறைவிடமாயிருப்பது நூல்களேயாம். அறம் பொருளின்பம் வீடு ஆகிய நாற்பொருளையும் நல்குதல் நூலின் இயல்பென நுவல்வர். வடமொழியாளர் வகுத்துக் கூறிய இந் நாற்பயனையும் பழந்தமிழ்மக்கள் அகம் புறம் எனும் இருபகுதியி லடக்குவர்.

அகம் என்பது, 'ஒத்த அன்புடையார் உள்ளத்தால் உணர்ந்து இன்னதெனப் பிறர்க்கு இயம்பலாகா இன்ப ஒழுக்கம்' என்பர். ஏனைய உணர்ச்சிகளும் உள்ளத்தேயே நிகழ்வன; வீரம் வெகுளி முதலிய உணர்ச்சிகளும் அகத்தேயே நிகழ்தலால் அவையும் அகவொழுக்கத்தின்பாற் படுமல்லவா? இன்னதெனப் பிறர்க்கு இயம்பலாகா இன்பவொழுக்கமே அகமெனில், இயம்பலாகாப் பொருளினைச் சுட்டியோ எல்லையி லடங்கா நல்லியற் பாக்களைக் கவிஞர் யாத்துள்ளார்? கூறலாகாப் பொருளினைக் குறித்தோ தலைவி, தோழி, தலைவன் பாங்கன் ஆகியோர் கூற்றுக்கள் நிகழ்கின்றன? கலித்தொகையும், நற்றிணையும், நெடுந்தொகையும், குறுந்தொகையும் இன்னதெனக் கூறலாகாப் பொருளினைக் கூறினவெனின் அம்மொழி முன்னொடு பின் முரணுதலாமன்றோ; ஆதலால் அகத்தே நிகழும் இதனை அகமெனல் ஏலாது; அகம் என்பது வீட்டையும் சுட்டுதலால் இல்லிருந்து நல்லறம் செய்யும் ஒழுக்கமே அகமெனப்பட்டது என்பர் ஒரு சாரார். இன்பமாயினும், துன்பமாயினும் எல்லா உணர்ச்சிகளும் சிந்தையின்கண்ணேயே நிகழ்வன; ஆயினும் ஒத்த அன்புடையோரால் உணரப்படும் இவ்வின்பம் ஏனைய உணர்ச்சிகள் போலாது சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாய வீட்டின்பத்திற்கும் காரணமாய் நிற்றலால், தலைமையும் பெருமையும் பற்றி இவ்வொழுக்கமே அகமெனப்பட்டது என்பர் மற்றொரு பாலார்.

இவ் வகைப்பொருளைக் கூறும் செந்தமிழ் நூல்கள் எண்ணிலவாம். அவற்றுள்ளே எட்டுத்தொகையுள் ஒன்றாய குறுந்தொகை பொருளிற் சிறந்து விளங்குகின்றது.

## குறுந்தொகைச் சிறப்பு

"நல்ல குறுந்தொகை" யென்று பல்லோராலும் பாராட்டப்படும் இந்நூல், அளவிற் குறுகியவாய்ப் பொருளிற் பெருகியவாய் விளங்கும் பாக்களை யுடையது. அறத்தையே சிறப்பா யுணர்த்தி எழுகடலனைய பரந்து விரிந்த பொருளெலாம் தன்னகத்தடக்கிய வள்ளுவரின் தமிழ்மறை குறளெனும் பெயர் பெற்றாற்போல, இந்நூலும் குறுந்தொகை யெனப் பெயர் பெற்றதெனல் சாலும். இந்நூல் நாலடிச் சிற்றெல்லையும் எட்டடிப் பேரெல்லையு முடையதாய், இன்பப் பொருளையெல்லாம் ஆடி நிழல்போல் தன்னகத்தடக்கி அறிய விளக்குவதாம். இந்நூலின் பெருமைக்கு, நுண்மாண் நுழைபுல மிக்க நூலாசிரியர் பலரும், புலத்துறை மிக்க உரையாசிரியர் பலரும் இந்நூலை எடுத்தாண்டமையே போதிய சான்றாம். நூலாசிரியர்களும், உரையாசிரியர்களும் ஏறக்குறைய இருபத்தொன்பதின்மர் இந் நூற் செய்யுளினுள்ளே 235 செய்யுட்களை எடுத்தாண்டுள்ளார் எனத் தெரிகின்றது. பல்வேறு புலவர்களாற் பாடப்பட்ட இந் நூற்பாக்களைப் பூரிக்கோ என்பான் தொகுத்தான் என்பர். இதன்கண், முல்லை முதலாப் பாலை ஈறாக ஐவகைத் திணைகளும் உள்ளன. அவற்றுள்ளே குறிஞ்சியும் ஒன்றாம்.

## குறிஞ்சி

குறுந்தொகையின்கண் குறிஞ்சிச் செய்யுட்கள் 146; கபிலர் பாடியவை 28; பரணர் பாடியவை 9; நக்கீரர் பாடியவை 4; ஔவையார் பாடியன 3; தும்பி சேர்கீரன் பாடல் 2; குன்றியன் கூறியவை 2; ஏனைய செய்யுட்கள் தனித் தனிப் புலவரால் ஆக்கப் பெற்றவையாம்.

உலகிலுள்ள பொருளையெல்லாம் தமிழ்ப்புலவர்கள் மூவகைப் பிரிவினுள் அடக்குவர். முதல், கரு, உரி

என்னும் முப்பொருளின் வேறுபட்ட பொருள் ஒன்று இவ்வுலகில் இல்லை என்பதை நுனித்தாய்வார் உணர்வர். முதல் என்பது ஆதியில் தோன்றிய காலமும் நிலமுமாகும்.* தோற்றத்தின் கால எல்லையைக் கணக்கிட முடியாததாய் நிற்கும் நிலத்தையும், காலத்தையும் தமிழர் முதலெனக் கொண்டனர். இந் நிலங்கள் யாவும் ஒரே தன்மையனவாய் இல்லாது, மலையும், காடும், வயலும், கடலும், மணலுமாகக் காணப்பட்டன. மலையையும், மலைசார்ந்த மருங்கையும் குறிஞ்சி யெனப் புலவர் பெருமக்கள் கூறினர். இயற்கையொடு அளவளாவும் இயல்பு வாய்ந்த புலவர்கள் மலையின் மாண்பையெல்லாம் நுனித்தறிந்து மகிழ்ந்தனர். மலைவளம் கண்டு வரும் புலவருளத்தை அம் மலைப் பொருள்கள் அள்ளின. வானோங்கி வளர்ந்த மலையும், நிலனோக்கி வீழும் அருவியும், வெயில் நுழைபறியாக் குயினுழைப் பொதும்பரும், மரமும், செடியும், மணம் வீசு கொடியும் என்று மழியாப் பொருள்களாய்ப் புலவருளத்தில் புகுந்தன. பல காதம் வரையிலும் நறுமணம் வீசி நின்ற குறிஞ்சிச் செடி புலவருள்ளத்தில் குடி கொண்டது. ஏனைய செடியும் கொடியும் போலாது, மரமும் மலரும் போலாது, நறுமணம் வீசிப் பெருந்தேன் பிலிற்றி வண்டும் தேனும் பண்பாட நின்ற கருங்கோற் குறிஞ்சி வளர்ந்தோங்கிச் செழித்துத் தழைத்து நிற்குமிடத்தைக் குறிஞ்சி யெனக் குறிப்பிட்டார். மலரின் பெருமையுணர்ந்த புலவர் அம் மலர் தரும் மலையிடத்திற்கு அந் நறுமலரின் பெயராய குறிஞ்சி என்பதையே கொடுத்தாரெனல் ஏற்குமன்றோ! மலரினாலேயே நிலங்களெல்லாம் பெயர் கொண்டன என்பதனை ஆசிரியர் இளம்பூரணனார் கீழ் வருமாறு குறிப்பிடுவர். "முல்லை குறிஞ்சி என்பன இடு குறியோ, காரணக் குறியோ எனின், ஏகதேசம் காரணம் பற்றி முதலாசிரியர் இட்டதோர் குறியென்றே கொள்ளப்படும். என்னை காரணமெனின்,

---

* முதலெனப் படுவது நிலம்பொழு திரண்டின்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே.
(தொல். அகத்-4.)

" கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே "

என்றவழி மைவரை உலகிற்குக் குறிஞ்சி சிறந்த தாகலானும்,

" ஆர லருந்திய சிறுசிரன் மருதின்
தாழ்சினை யுறங்கும் தண்டுறை யூரன் "

என்றவழித் தீம்புனல் உலகிற்கு மருது சிறந்த தாகலானும்,

" பாசடை நிவந்த கணைக்கால் நெய்தல்
இனமீ னிருங்கழி ஓத மல்குதொறும்
கயமூழ்கு மகளிர் கண்ணின் மானும் "

என்றவழிப் பெருமணல் உலகிற்கு நெய்தல் சிறந்ததாக லானும் இந் நிலங்களை இவ்வாறு குறியிட்டார் எனக் கொள்ளப்படும் என்க. பாலை என்பதற்கு நிலம் இன் றேனும் வேனில்பற்றி வருதலின், அக்காலத்துத் தளிரும் சினையும் வாடுதலின்றி நிற்பதாம் பாலை என்பதோர் மர முண்டாகலின் அச்சிறப்பு நோக்கிப் பாலை என்று குறி யிட்டார்."

இவ் விளம்பூரணர் கூற்றை நச்சினார்க்கினியர் கொண்டாரில்லை. "முல்லை என்ற சொற்குப் பொருள் இருத்தலாயிற்று; "முல்லை சான்ற முல்லையம் புறவின்" என்பவாகலின். கருங்காற் குறிஞ்சி சான்ற' என்பது கரு. 'மருதம் சான்ற மருதத் தண்பணை' என்புழி மருதம் என்பது ஊடியும் கூடியும் போகம் நுகர்தலை. நெய்தற் பறையாவது இரங்கற்பறையாதலின் நெய்தல் இரக்கம்.

" ஐதகல் அல்குல் மகளிர்
நெய்தல் கேளன்மார் நெடுங்கடை யானே "

என வரும்.

இனி, இவ்வாறன்றி முல்லை முதலிய பூவாற் பெயர் பெற்றன இவ்வொழுக்கமெனின், அவ்வந் நிலங்கட்கு ஏனைய பூக்களும் உரியவாகலின், அவற்றாற் பெயர் கூற லும் உரிய எனக் கடாவுவார்க்கு விடையின்மை உணர்க.'

மேற்குறிப்பிட்ட சிறந்த அடிகளால், நச்சினார்க்கினியர்க்குப் பூவினால் நிலங்கள் பெயர் பெற்றனவெனல் பொருந்தாது என்பது கருத்தாம். காரணங்கள் :—(1) முல்லை, குறிஞ்சி முதலியன அவ்வொழுக்கங்களைக் குறித்த பொருளிற் பயின்றுள்ளன. (2) ஏனைய பூக்களும் அந்நிலத்துள்ளன; எனவே, அவற்றானும் பெயரெய்தல் வேண்டுமன்றோ என்பனவாம். இவ்விரண்டு கருத்தையும் எண்ணித் துணிவோம்.

தொன்னூலாசிரியர்கள் பெயர்களை இடுகுறி காரணமென இரண்டாகப் பகுத்துள்ளனர். எல்லாப் பெயர்களும் காரணங்கொண்டே முதலில் தோன்றின * என்பது தமிழாசிரியர் கருத்தாம். பின்னர்க் காலம் செல்லச் செல்ல மக்கள் வழக்காற்றினால், ஒலியிலும், உருவிலும், அவை வேறுபடுவனவாய்த் தம்முரு மாறுபட்டு ஏது தெரிவிக்கும் ஆற்றலை இழந்தன. அவை பின்னர் இடுகுறியென வழங்கப்பட்டன போலும். இவ்வுண்மை, ஆசிரியர் தொல்காப்பியர் "மொழிப் பொருட் காரணம் விழிப்பத் தோன்றா" என்றதிலிருந்து விளங்கும். ஆதலால் எல்லாச் சொற்கட்கும் காரணம் உண்டு என்பதே அவர் கோட்பாடு. உரைவரைந்த சேனாவரையரும், "அவற்றுண் மெய்ம்மையாகிய காரணம் ஆசிரியர்க்குப் புலனாவதல்லது நம்மனோர்க்குப் புலனாகாமையின் மொழிப்பொருட் காரணமில்லை என்னாது, 'விழிப்பத் தோன்றா' என்றார்" என்று கூறியதும் காண்க. இங்ஙனமாகக் காரணமுகத்தான் பொருட்குப் பெயரிடும்போது அப்பொருள் அஃறிணையாயினு மாகுக; உயர்திணையாயினு மாகுக; அதற்குத் தலைமை கொண்டும், பன்மை கொண்டும் பெயரிடல் மரபென்பது,

> "ஒருபெயர்ப் பொதுச்சொல் உள்பொருள் ஒழியத்
> தெரிபுவேறு கிளத்தல் தலைமையும் பன்மையும்
> உயர்திணை மருங்கினும் அஃறிணை மருங்கினும்"
>
> (சொல் : கிளவி, 49.)

என்னும் சூத்திரத்தால் விளங்கலாம். இதற்கு எடுத்துக் காட்டாகப் பிறரும் வாழ்வாருளரேனும் பார்ப்பனச் சேரி யென்றல் உயர்திணைக்கண் தலைமைபற்றிய வழக்கு

* எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே. (தொல்-பெயர், க)

என்றும், பிற புல்லும் மரனும் உளவேனும் கமுகந் தோட்ட மென்றல் அஃறிணைக்கண் தலைமைபற்றிய வழக்கு என்றும், ஓடுவங்காடு என்பது அத் திணைக்கண் பன்மைபற்றிய வழக்கென்றும் காட்டியுள்ளார். இவைகளான் முல்லை, குறிஞ்சி, எனப் பகுத்த நிலங்களில் மற்றைப் பூக்களும் உளவேனும் அவற்றிற்கு அப்பெயர் எய்தியது தலைமை பற்றியேனும் இருத்தல் இயல்பு எனின் இழிபாகாது. இம்முடிபுகொண்டு எண்ணுங் காலத்துப் பன்னீராண்டிற் கொருகால் மலர்ந்து பெரு மணம் வீசும் குறிஞ்சியின் தலைமைபற்றி அந்நிலத்திற்கு அப்பெயரளித்தார் எனல் ஏற்குமன்றோ? இனி, முல்லை முதலியன ஒழுக்கங்களைக் குறித்து வருகின்றன எனக் கூறினர். அதற்குக் காட்டாக "முல்லை சான்ற..." முதலியவற்றை எடுத்துக்காட்டுகின்றார். முல்லை என் பதற்கு இவ்விடத்து ஒழுக்கம் என ஏன் பொருள் கொளல் வேண்டும். 'முல்லை சான்ற' என்பது முதலில் மலரை யுணர்த்திப் பின்னர் அம் மலர் மலிந்த நிலத்திற் காயிற்று என்பதையே நிறுவுதலையுங் காணலாம். என்னெனில் 'முல்லை மலரினாலே சால்புற்றமையால் (சிறப்பு) முல்லை என்று பெயர் பெற்ற அப் புறவி னிடத்தே' என்பதையே அம்மொழிகள் உணர்த்தி நின்றன. மற்றைய மலர்கள் உளவாகவும் அவற்றானும் பெயரெய்தல் ஆகாதோ என வினவுவார்க்கு விடையிறுப் பார்போன்று 'முல்லை சான்ற' என விளக்கிக் கூறினர். இங்ஙனமே, 'குறிஞ்சி சான்ற' 'மருதம் சான்ற' முதலியவற்றிற்கும் முறையே, செடியெனவும், மரமென வும் கொண்டு அவற்றாலே சிறப்பினைப் பெற்ற நிலம் எனக் கூறின் இழுக்கேதும் எய்தாமையோடு, தக்க ஏதுக் களோடும் அப் பெயர் அந் நிலங்கட்கு அமைந்தன என்ப தும் அறியலாம். ஒரு பொருளின் பெயரைக் காரண மறியாது இடுகுறி எனக் கூறுதலினும் காரணம் கண்டு தெளிதல் சிறந்ததன்றோ? அங்ஙனமாயின், 'நெய்தல் கேளன்மார்' என்றவிடத்து நெய்தல் என்பதை மல ரெனக் கொள்ளின் இடர்ப்பாடுடைய தாகாதோ எனின், ஈண்டு நெய்தல் என்பது இரக்கத்தையே குறித்தது. 'நெய்தல்' எனும் சொல் முதலில் மலரை யுணர்த்திப் பின்னர் அம்மலர் மலிந்த நிலத்திற் காய், இறுதியில் அந்நிலத்துச் சிறப்பாக நிகழ்கின்ற

ஒழுக்கமாகிய இரங்கற்கும் ஆயிற்று எனக் கொள்ளல் வேண்டும். இது கொண்டே, அகப்பாட்டு நூல்களி லுள்ள பாக்கட்கு முல்லை குறிஞ்சி எனப் பெயர் கொடுத் தமையும் துணியப்படும். எனவே, குறிஞ்சி என மலைக் கும் மலை சார்ந்த மருங்கிற்கும் பெயர் போந்தமை ஒழுக் கம் பற்றியன்று; ஆனால் மலர் பற்றி என்பது நன்கு பெறப்படும்.

இத்தகைய குறிஞ்சியைக் கூறும் குறுந்தொகைப் பாக்களை முதல், கரு, உரி என்னும் மூவகையான் ஆய்தல் ஏற்கும்.

முதற் பொருளின் இரு பிரிவினுள்ளே இரண்டாவ தாய் நிற்பது காலமாகும். குறிஞ்சிக்குரிய காலங்களுள் கூதிர்க்காலம் பெரும்பொழுதாம். யாமம் சிறுபொழு தாம். இதனைக் "குறிஞ்சி கூதிர்யாமம்"* என்ற வரியால் அறியலாம். கூதிர்காலமும் யாமமும் குறிஞ்சிக்கு ஏற்ற பெரும்பொழுதும், சிறுபொழுதுமாய் அமைந்த காரணங்களை நச்சினார்க்கினியர் அழகுற எழுதியுள்ளார். "குறிஞ்சியாவது புணர்தற் பொருட்டு; அஃது இயற்கைப் புணர்ச்சி முதலியனவாம். இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தபின் களவு நீட்டிப்பக் கருதும் தலை வர்க்கு அக்களவினைச் சிறப்பிக்குங்கால் தலைவி அரிய ளாக வேண்டுமாகவே அவ்வருமையை ஆக்குவது ஐப்பசி யும் கார்த்திகையுமாகிய கூதிரும் அத னிடையாமமு மென்பது. என்னை? இருள் தூங்கித் துளி மிகுதலிற் சேறல் அரிதாகலானும், பாஉட்கங்குலிற் பரந்துடன் வழங்காது மாவும், புள்ளும் துணையுடன் இன்புற்று வதி தலிற் காமக் குறிப்புக் கழியப்பெருகுதலானும், காவன் மிகுதி நோக்காது வருந் தலைவனைக் குறிக்கண் எதிர்ப் பட்டுப் புணருங்கால் இன்பம் பெருகுதலின் இந்நிலத் திற் கூதிர்க்காலம் சிறந்ததெனப்படும்" என இங்ஙனங் கூறிய உரையால் கூதிர்க் காலத்துக் குறிஞ்சி நிலத்துக் கூடலே அவ்வொழுக்கத்தின் இன்பப் பயனை முற்றும் எய்துவிக்கும் என்பது தெளியப்படும்.

---

* தொல். அகத். சூ. 6

## குறுந்தொகைக் குறிஞ்சியும் கூதிர் யாமமும்

இந் நூலின் குறிஞ்சிச் செய்யுட்களிலே கீழ் வரும் காலங்கள் பயின்று வந்துள்ளன. எல்லி (47) அரும்பனி அச்சிரம் (68, 82) கடும்பனி அச்சிரம் (76) நடுநாள் (69, 88, 268, 321) ஆரிருள் நடுநாள் (141) பானாள் (142) தண்வரல் வாடை (76) நள்ளென் யாமம் (160, 249, 261) பானாட் கங்குல் (301, 355) காலை மாலை (346) எல்லை (355) கூதிர் யாமம் (86).

இங்ஙனம் பயின்று வந்துள்ள பொழுதுகளுள்ளே நடுநாள், ஆரிருள் நடுநாள், பானாள், பானாட்கங்குல் என்பன யாவும் ஒரே பொழுதையே உணர்த்தி நின்ற சொற்களெனவே உணரக் கிடக்கின்றன. நாளின் நடுப் பகுதி எனும் பொருளில் நடுநாள் வந்துள்ளதுபோலப் பானாள் என்பதும், நாளின் நேர்ப் பகுதியான அந் நடு நாளையே குறித்து நின்றது எனக் கொள்ளல்வேண்டும். அப்பொழுது, நள்ளிரவு அல்லது யாமமே யாகும். அதுவே பானாட் கங்குல் எனவும் சுட்டப்பட்டது.

இக் குறிஞ்சிப் பாக்களுள் கூட்ட முணர்த்துமிடத்துக் கூதிர்க்காலத்து நள்ளென் யாமமே குறிக்கப் பட்டுள்ளது. ஏனைய பொழுதெல்லாம் செய்யுளிற் பயின்று வந்தனவே யன்றிக் குறிஞ்சிக்குரிய பொழு தெனக் கொள்ளுதற் கிடனில்லை. அன்றியும் பொழுது மயங்கியதாகக் கொள்ளுதலும் பொருந்தும்.

இனி, நிலமும் பொழுதும் நீங்க, நின்ற கருப்பொருளைக் காண்போம். கரு வெனும் சொல் தோற்றமெனப் பொருள் தருமென்பர். நிலத்தையும், பொழுதையும் இடமாய் (முதலாய்)க் கொண்டு முளைத்தன எல்லாம் கருவின்பால் அடங்குவனவாம். ஆசிரியர் தொல் காப்பியர், கருப்பொருளைத்

> "தெய்வம் உணாவே, மாமரம் புட்பறை
> செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
> அவ்வகை பிறவும் கருவென மொழிப"

என்றார். உரையாசிரியர் நச்சினார்க்கினியர் பிறவும் என்றதனானே, இக் கூறியவற்றிற்குரிய மக்கள் பெயரும், தலை

மக்கள் பெயரும் கொள்க என அமைத்துக்கொண்டார். ஆனால், பிற்கால நம்பியாசிரியர் மக்களையும் சேர்த்து,

"ஆரணங் குயர்ந்தோர் அல்லோர் புள்விலங்கு
ஊர்நீர் பூமரம் உணாபறை யாழ்பண்
தொழிலெனக் கருவி ரெழுவகைத் தாகும்"

எனச் சூத்திரித்ததோடன்றிப் பதின்ன்கென வரையறையும் செய்துவிட்டார்.

"பெயரும் வினையுமென் றுயிரு வகைய திணை தொறும் மரீஇய திணைநிலைப் பெயரே" என்றும், "ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்" என்றும், மக்களைச் சுட்டும் நூற்பாக்களை யாத்த தொல்காப்பியர், அம் மக்கட் பகுதியை முப் பொருளினுள் எப் பொருளுடன் சேர்த்துள்ளார் என்பது தெரிதற் கிடனில்லை. எனினும், வகுத்துக் கூறும் கருப்பொருள் யாவும் மக்கட்கே ஆதலால் அன்னாரைத் தனித்துச் சுட்டிச் சேறல் வேண்டுவ தன்றெனக் கொண்டனர்போலும். அன்றியும், உணா முதல் யாழின் பகுதி யீறாக் கூறப்பட்டன யாவும் அஃறிணைப் பொருளாயினமையின் 'உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே' என்று குறித்த உயர்திணையின் பாற்பட்ட மக்கட் பகுதியையும் கருப்பொருளொடு சேர்த்தல் முறையன் றெனக் கருதி விட்டனரெனலும் சாலும். ஆயின், தெய்வத்தை அஃறிணைப் பொருளொடு கூட்டி எண்ணுதல் ஏற்குமோ எனின், தெய்வத்தை அஃறிணை விகுதியானும், உயர்திணை விகுதியானும் வழங்குதல் மரபானமையின் அங்ஙனம் தெய்வத்தையும் உடன் எண்ணினா ரெனக் கொள்க.

## குறிஞ்சிக் கருப்பொருள்

இங்குக் குறிஞ்சியின்கண், மலை நிலத்து வாழ்வாராய்ப் பல திறத்தினர் சுட்டப்படுகின்றனர். கானக நாடன் (54) குறவன் (95) புனவன் (105), சேணோன் (150), குறவர் (208, 339), கானவன், (214, 333, 342, 379, 385) இளையர் அல்லது வீளையர் (272), மறவர் (297), மலையன் (312), வெற்பன் (374) ஆகிய சொற்கள் ஆடவரைக் குறித்து வந்துள்ளன. இவற்றுள்ளே,

குறவர், மறவர், வீளையர் முதலியன பலர்பாலில் வந்தன எனலும் ஏற்கும்.

கொடிச்சி (214, 291, 335, 360, 291) குறமகள் (394) ஆகிய இரு சொற்களும் பெண்டிரைக் குறிக்கும் மொழிகளாய்ப் பயின்றுள்ளன.

இக் குறவரும், மறவரும், கானவரும், வெற்பரும் வில்லுடையராய் விளங்கினர் (272); செங்கோல் வாளிகளுடையரா யிருந்தனர் (272); கானவர், கொடுவிலும், பகழியும் கொண்டு திரிவர் (333); 'சிலைவில் கானவன் செந்தொடை' (282); பகழிக் கொடுவிற் கானவன் (333); என வரும் மொழிகள் வில்லும் பகழியும் ஏந்தி மலை வாழ்வார் திரிந்தனர் என்பதனைத் தெரிவிக்கின்றன.

இனி, கருப்பொருள்களி னுள்ளே தெய்வத்தினை முதலாக வைத்துத் தொல்காப்பியர் கூறியுள்ளார். ஆக்கி அளித்து அழிக்கும் தன்மையும், மூலமும் நடுவு மீறுமில்லா முதன்மையும் பற்றித் தெய்வத்தினை முன்னுற வைத்துப் போற்றினர். 'சிறப்புடைப் பொருளை முந்துறக் கிளத்தல்' தமிழ் மரபாகு மன்றோ?

மலையில் வாழ்ந்துவந்த மக்கள் சேயோனைத் தெய்வமெனக் கொண்டாடினர். * "சேயோன் மேய மைவரை யுலகம்" எனத் தொல்காப்பியர் இதனை எழுதிப் போந்தார். இளமையும் எழிலு முடையோனாய் விளங்கும் சேயோனைக் கூடல் நிகழும் குறிஞ்சிக்குக் கடவுளெனக் கொண்ட தன்மை கருதத்தக்கதாம்.

குறுந்தொகைக் குறிஞ்சியின்கண்ணே, தெய்வமும், அதனைச் சேர்ந்த வேறு பல பெயர்களும், வழிபாட்டு முறைகளும் ஆங்காங்குக் காணப்படுகின்றன. சூர்(52), பேஎமுதிர் கடவுள் (87), கடவுள் (105), நெடுவேள் (11), வேலன் (111, 360, 362), முருகு (362), சேய் (1) ஆகிய சொற்கள் தெய்வத் தொடர்புடையனவாக விளங்குகின்றன.

'பேஎ முதிர் கடவுள்' என்பது மன்றத்தின்கண் மராமரத்திலே யுறையும் தெய்வம்; மறம் செய்த

* தொல். அகத். 5.

கொடியோரை ஒறுக்கும் இயல்புடையது (87). 'பேஎம்' என்பது அச்சம் என்னும் பொருள் தரும்.

முருகு, வேள், சேய் எனும் மொழிகள் சேயோனையே குறித்து நின்றன. காலையில் குணதிசைக்கண் செங்கதிர் பரப்பி ஞாலத் திருளையெல்லாம் அகற்றி எழும் ஞாயிற்றை மலைவாழ் மக்கள் கண்டு மகிழ்ந்து சேயோனென வணங்கி வந்தனரென்பர். வேலன் எனும் சொல் முருகனுக்கு வழிபாடியற்றுவோனைக் குறித்துநின்றது. காதலனொடு கலந்த தலைவியின் மேனி வேறுபாடு கண்ட அன்னை வேலனை யழைத்து வெறியாட்டெடுப்பள். மென்தோள் நெகிழ்த்த செல்லல் நெடுவேளா லாயிற்றென வேலன் கூறுவான் (111). வெறியென்றெண்ணி வெறியாட்டெடுக்கும் வேலன் நோய் தீர்க்கு மருந்தை யறியான் என்பதனை அன்னை அறியாள். அதனை அன்னை உணருமாறு, நாம் அல்லல் அடையினும் இலங்குமலை நாடன் இன்றிரவு வராதொழிவானாக என்று தலைவி கூறும் மொழிகள் வெறியாட்டெடுத்தலை உணர்த்துவனவாம் (360). வெறியுடனாடும் வேலனது மேனியில் முருகு நிற்கின்றான் என எண்ணுவர்; வெறியாட்டெடுக்குங்கால் பல்வேறு நிறத்தினையுடைய சிலவாய அவிழ்களையுடைய சோற்றைப் படைத்தலும்; மறியினை யறுத்தலும் வழக்கம் போலும் (362).

இனி, பொன்போன்ற தினைப்புனத்தைக் காக்கும் காவற் கடவுளும் ஒன்றுண்டெனத் தெரிகின்றது. முதல் தினை விளைந்ததும் காத்தற் கடவுளை உண்பிப்பர். இத்தெய்வம் 'கடியுண் கடவுள்' என வழங்கப்பட்டது (105).

'சூர்' அச்சமளிக்கும் மலைவாழ் சிறுதெய்வம் (107), அஃது அங்குமிங்கும் அசைந்து ஓடு மியல்புள்ளது (52).

**உணவு**

சேயோனை வழிபட்டு வந்த மலைமக்கள் தம் நிலத்து விளையும் தினையையும் (375), தேனையும் (60), அவரையையும் (82), பலாப்பழத்தையும் (83), உணவென உண்டுவந்தனர். தினையில் சிறுதினை (105, 375), செந்தினை (335) என இருபிரிவு உண்டு. சிறுதினை பொன்போன்ற வடிவுடைய தாய்ப் பொலியும் (133).

இவையன்றி வெண்ணெய் உணங்கல் (58), நெய்யிலே ஆக்கிய குறும்பூழ்க் காயம் (389) ஆகிய உணவும் சுட்டப்படுகின்றன.

தேனில், பெருந்தேன் (3), சிறுதேன் முதலிய பிரிவுகள் காணப்படுகின்றன. 'தேனடை' பிரசம் (392) எனப்படும்.

மா குறுந்தொகைக் குறிஞ்சிப் பாக்களில் பல்வேறு விலங்குகளின் பல பெயர்கள் பயின்று வந்துள்ளன. கரும்புலி (47), களிறு (52), யானை (54), கடுவன் (26), மந்தி (29), கலை (69), செந்நாய் (141), கடமா (179), வருடை (187), பிடி (222), ஊகம் (249), காரான் (261), மறி (263), குரங்கு (288), வேழம் (308), மரையான் (317), ஏறு (317), ஆமா (322), மான் (68), முதலியனவாம்.

இரும்புலி என்பது கருநிறத்தினையும், பெருமையினையுமுடைய புலியெனப் பொருள்தரும். இவற்றின் மேனியில் வேங்கைமலர் போன்ற புள்ளிகள் பல உண்டு. இது மிக வலிமை வாய்ந்த விலங்காதலால் 'வயப் புலி' என வழங்கப்படுகின்றது (88) இஃது யானையொடு போர்செய்யும் இயல்புடையது (88, 141). குறுகிய கால்களையுடையதாதலின் 'குறுங்கை யிரும்புலி' எனக் கூறப்படுகிறது. (141) இதன் கண் இரவிலே சிவந்த நிறமுடையதாய் விளங்கும் (321). செங்கணிரும்புலி மரையாக்கள் ஓடுமாறு ஏறட்டுக்கொண்டு சுற்றி வரும் (324).

யானையில் இருபிரிவு உண்டு. களிறு என்பது ஆண் யானையைக் குறிக்கும். வேங்கைமரங்களை வீழ்த்திச் செல்லும். குளகினைத் தின்றால் இதற்கு மதம் பெருகும் (136, 208). இது நீண்ட கையினையும் வலியினையு முடையது என்பதனை 'நெடுங்கை வன்மான்' என்ற தொடர்மொழியுணர்த்தும் (141). சிறியகண்ணுடையதாய்ப் பெரிய வடிவுடையதாய் விளங்கும் (88, 333). கல்லின்மீது காந்தள்மலர்ந்ததனைப்போன்று களிற்றின் முகத்தில் புள்ளிகள் உண்டு (284). பல்லோரும் துயிலும் இரவிலும் யானை துயிலாது திரியும் (244). பள்ளியிலிருக்கும் யானையின் பெருமூச்சு ஓரிடத்துச் சுட்டப்

பட்டுள்ளது (142), வேங்கைமலர்கள் மேனியில் வீழ யானை துஞ்சும் (247). நீண்டகையினால் பிடியினைத் தழுவிச் செல்லும் பெற்றி வாய்ந்தது (332). குன்றங் களி லமைந்த சிறுகுடிகளினருகே சென்றுகொண்டிருக்கும் (332), புனத்திலுள்ள தினையை யுண்டு போகும் (333). கொம்புகள் கூரிய ஆண்யானை இளம் பிடியினை வேட்ட ஏதுவால் குன்றமடைந்த குறவர்கள் அஞ்சி ஓடுமாறு மன்றங்களைப் பிளந்து செல்லும் (346). புலியோடு பொரூஉம் இயல்புடையது (88).

பிடி என்பது பெண்யானையைக் குறிக்கும்; ஆண் யானை இதனைத் தழுவிச்செல்லும் காட்சி ஓரிடத்துக் கூறப்பட்டுள்ளது (332). பாடிவரும் மகளிர்க்குப் பிடிகளைப் பரிசிலாக அளிக்கும் வழக்க முண்டு (298). வேழம் உறங்குங்கால் இளம் பிடி அதன் முதுகைத் தைவரும் (308), வேழம் என்பதும் ஆண்யானையைச் சுட்டிவந்த இடமுண்டு (308).

கடுவன் (24) ஆண்குரங்காகும், கடுவன் என்பது ஆண் குரங்கைக் குறிக்கும் என்பதை 'வரையாடு வன்பறழ்த் தந்தைக், கடுவன்' எனும் மொழியால் உணரலாம் (26). குரங்கு என்பது பொதுமொழியாம். (288) குரங்குகள் பல கூடித் தளிரை யுண்ணும் (288). மிளகுக் கொடி படரும் மலைச்சாரலில் வதியும். (288) மந்தி என்பது பெண்குரங்காகும். இது மகவினை இறுகத் தழுவிக்கொள்ளும் (29). கலையினை இழந்த மந்தி கைம்மை நோன்பு கொள்ளாது மலையினின்று வீழ்ந்து மாயும் (69). குறமகளிர் தினையினைப் பாறையிடத்துப் பரப்பிச் சுனைநீராடும்போது மந்தி பார்ப்பொடு அதனைக் கவரும் காட்சி கூறப்பட்டுள்ளது (335).

கருங்குரங்கு என்பது குரங்கினுள் ஒரு பிரிவாம் (120). மை தோய்ந்தது போன்று அதன் முகம் விளங்கும் என்பதை, 'மைப்பட் டன்ன மாமுக முசுக்கலை' என்பதாலறியலாம். சில கருங்குரங்கின் முகம் வெண்மையாய் விளங்கும் போலும். அது 'நரைமுக ஊகம்' எனக் குறிக்கப்படுகின்றது. ஆண் கருங்குரங்கு தன்னுடைய கரிய விரல்களால் பலாப் பழத்தைப் பிளந்துண்ணும் (373). நீண்ட மயிரும் கூரிய பற்களும் கரிய விரல்களுமுடையது (373).

கலை என்பதும் ஆண்குரங்கைக் குறித்து வந்துள்ளது. (69) கரிய கண்ணையும் தாவும் வன்மையையும் பெற்றது. (69). நிறைந்த மயிரையுடைய கலை பலாக்கனிகளை மரங்களினின் றுதிர்க்கும் (90). ஆண் குரங்கு பலாப் பழங்களைக் கவர்ந்துண்ணுது. கானவன் மரங்கள் தொறும் குரங்கினைப் பிடிக்கும் வலை மாட்டுவன் (342).

கலை என்பது மானைக்குறித்து ஓரிடத்துப் பயின் றுள்ளது (272). குரங்கின் குட்டி பறழ் என்றும் (69) பார்ப்பு என்றும் (335) கூறப்படும். இது மலையிலே ஆடி விளையாடும் (69). தேமாங் கனியைக் கவர்ந் துண்ணும் (26). கூரிய எயிறும் சிவந்த வாயு முடையது (26). மக வென்பது குரங்கின் இளமைப் பெயர் (தொல். மர. பேரா. 14). 'மகவுடைமந்திபோல' என்று ஓரிடத்துச் சுட்டினுர். ஒரு முசுவின் குருளை கானமயிலின் முட்டை யினை வெயிலி லுருட்டி விளையாடுகின்றது (38).

செந்நாயின் கண்கள் பசுமை வாய்ந்தவை (142). இதனைப் புலி உணவெனக் கொள்ள உழலும் (142).

'கலிமா' என்பது குதிரையைக் குறிக்கும் (173). பனை நாரினுற் செய்த மடலேறும் கலிமா இச்செய்யுளிற் சுட்டப்பட்டுள்ளது. குதிரை போர்செய்யு மியல் புடையன வாதலால், செருவுறு குதிரை எனக் கூறப் பட்டுள்ளது (385). குதிரை விரைவுடன் செல்லும் (74).

கடமாவினை நாய்கொண்டு வேட்டையாடுவர் (179). வருடைமான் :— செவ்விய மலைப்பக்கத்தின்கண் தங்கும் இயல்புடையது. இதற்கு எண் கால்கள் உண்டுபோலும். (187) இதன் மறி தாயின் பாலை வயிறுர உண்டு வரை யிடங்களில் குதிக்கும் (187), இதன் குட்டியை வருடை மான்மறி யென வழங்குவர்.

காரான் :—இஃது எருமை போலும்; செங்கண்ணும் கரிய உடலும் அமைந்து விளங்கும். கார்ப்பருவம் தொடங்கிய பின்னர்ச் சேற்று நிலம் வாழ விரும்பாது நள்ளென் யாமத்து ஐயெனக் கரையும் எனக் கூறப் பட்டுள்ளது (261).

மரையா (321) இது மரையா னெனவும் (317) வழங்கப்படும். "ஆமா கோனவ் வணையவும் பெறுமே*"

* நன்னூல் - 162 சூ.

என்பது விதி. இதில் ஆண் விலங்கு மரையானேறு என்று சுட்டப்படும் (317). கருமையும் வெண்மையும் கலந்த நிறமுடையதாய் இது காணப்படும். விரும்பத் தகுந்த மரையாவினை வேட்ட ஒரு கரிய வலிய ஏறு இனிமையமைந்த நெல்லிக் கனியுண்டு கானக மலரெலாம் வாட, காதலால் பெரு மூச்சுவிட்டு, ஓங்கிய பெருமலைப் பைஞ்சுனையி லுள்ள நீரை யுண்ணுகின்றது (317). நள்ளிரவிலே மரையா உள்ளம் நடுங்கச் செங்கணிரும்புலி ஏற்றினைக் கொன்று முழங்கும் (321).

ஆமா :—இதுவும் மரையாப் போன்றதொரு விலங்கு. அமர்த்த கண்ணை யுடையது; இதன் கன்று அழகிய செவியை யுடையது; கானவர் ஓசையால் இனத்தினின்றும் பிரிந்த ஆமான் குழவியொன்று சிறுகுடியடைய, அங்குள்ள சிறுவர் ஓம்ப, மனை வாழ்வு விரும்பி வாழ்ந்ததெனெ ஓரிடத் துரைக்கின்றார் (322).

மான் :—குறிஞ்சி நிலத்துச் சிறந்த விலங்காம். மானினம் அரும்பனி அச்சிரக் காலத்து முதிர்ந்த உழுந்தின் காயைக் கவர்ந்துண்ணும். (68) மானின் கழுத்தி லழுத்தி உதிரத்தொடு உருவிய அம்புபோல் தலைவியின் கண்கள் சிவந்தன என்று குறிப்பிடுதலால் மானை வேட்டுவர் வேட்டையாடுவர் என்பதறியலாம் (272).

## மரமும், செடியும், கொடியும்

குறுந்தொகைக் குறிஞ்சிப் பாக்களின்கண், வேங்கை (47) நரந்து (52) கழை (54) தேக்கொக்கு (26) மாணை (36) உழுந்து (68) சேம்பு (76) கறி (90) நொச்சி (38) பெண்ணை (182) காந்தள் (265) அகில் (286) ஆரம் (286) ஏனல் (291) வாழை (308) நெருஞ்சி (315) நெல்லி (317) பனை (372) பலவு (373) செயலை (214) கூதளி (60) குறிஞ்சி (3) முதலியன சுட்டப்பட்டுள்ளன.

வேங்கை :—இது கரிய காலை யுடையது; கருங்கல் மலைச் சாரலில் ஓங்கி வளரும். (47) முகையின்றி முற்றும் மலர்ந்த வேங்கை மரத்துச்சியில் மயி லிருப்பது சுட்டப்பட்டுள்ளது. (26). அருவிகளி னருகே பெருகி வளரும் (96). வேங்கைமலர் வீழ

மிடத்து உதிர்ந்த மலர்களைப் பள்ளியாய்க் கொண்டு யானைகள் துஞ்சும். (247) சிறுகுடி மருங்கில் வேங்கை நறுமணம் வீசிநிற்கும். (355) மன்றங் களில் வேங்கை மலரும்போது புன்றலைச்சிறார் மரத்தில் ஏறாது, மலர்கள் வீழ இனிய ஓசையைத் தரையினின்று எழுப்புவர் (241). நீண்ட தாளை யுடையது (134). போர் செய்யும் யானையால் வீழ்த் தப்பட்ட வேங்கை, ஏற வேண்டாது குறவர்மகளிர் கூந்தலிற் சூட நறுமலர் பூத்து நல்கும் (208).

கழை :—கானங்களில் ஓங்கி வளரும் கழைகளை யானை உண்ணும்பொருட்டுப் பிடித்திழுக்கும். (54) விசும்பு தோயப் பசுங்கழை குன்றங்களில் நிற்கும். (74) கழை என்பதும், மூங்கில் என்பதும் ஒன்றையே உணர்த்தும் போலும். (201) முள்ளில்லாத மூங்கில் 'முள்ளிலம் பணை மூங்கில்' எனச் சுட்டப்படுகிறது (201).

கொக்கு :—இது தேமா மரமாம். (26) குரங்கின் குட்டிகள் இதன் கனிகளை விரும்பியுண்ணும். (26)

மாணை :—உருண்டைக் கற்களி னருகே நெருங்கி வளரும் ஒருவகைக் கொடி (36). இதன் அருகே யானை துஞ்சு வ:தாகக் கூறப்பட்டுள்ளது.

உழுந்து :—இதன் தாள் சிவப்பாயிருக்கும் என்பதனைச் 'செங்கா லுழுந்தின்' என்பதால் அறியலாம். இது செடி வகையைச் சார்ந்தது (68).

சேம்பு :—சிலம்புகளில் சேம்பு செழித்து வளரும். இதன் இலை அகன்று பரந்து பசியதாயிருக்கும்; யானையின் செவிக்கு இதன் இலையை உவமை கூறுவர் (76).

கறி :—இது மிளகுக் கொடியாம்; மலைச் சாரலிலே படர்ந்து வளரும். ஆதலால் 'கறிவள ரடுக்கம்' எனக் குறிப்பிடப்படுதல் உண்டு (90,288).

நொச்சி :—மயிலின் அடியைப்போன்ற இலையை யுடையது. கரிய பூங்கொத்துக்களை யுடையதாய் விளங்கும். இதன் மலர்கள் நீலமணிபோன்று பொலியும் (138).

பெண்ணை :—சிறந்த தலையையுடைய பெண்ணை மரத்தின் மடலினாற் குதிரை செய்து மடலேறுவனெனத் தலை

மகன் கூறும் வழக்கம் உண்டு (182). இது நீண்டுயர்ந்து கரிய நிறமுடையதாய் விளங்கும்; முழவினைப் போன்ற அடியினை யுடையது; வளைந்த நிலையினையும், கொழுத்த மடலினையு முடையது (251). பெண்ணையில் தூங்கணங் குருவி கூடுகட்டி வாழும் (374.)

**காந்தள்** :—முழைகளிலும் பக்க மலைகளிலும் முளைத்து நறுமணம் வீசும்; அசைகின்ற இதன் பூங் கொத்துக்களில் நீலமணி போன்ற வண்டுகள் நறுந்தாது ஊதிக்கொண்டிருக்கும் (239). காந்தளரும்பு மலர்வதுவரையிலும் காத்திராது வண்டுகள் சென்று வாயில் ஊதும் (265). தலைவியின் நுதல் மணத்திற்குக், கார்மேகங்கள் கூடி எழுந்த மழையுடைய மலையிடத்து அருவியினருகில் வளர்ந்த காந்தளின் வரும்புகள் விரிந்து மணம் வீசுவதை உவமிக்கின்றார் (259). சிறு குடிகளினருகேயும் காந்தள் வளரும் (373). தலைவன் மலையினின்று மாலையிற் பெய்த மழைநீர் கொண்டுவந்த காந்தளை ஒரு தலைவி தழுவுகின்றாள். வேரொடு வந்த அச் செடியை வீட்டில் நட்டு மகிழ்கின்றாள் (361). இதன் மலர்கள் சிவந்த நிறமுடையன. கல்லிலே மலர்ந்த காந்தள் மலர்க்குக் களிற்றின் முகத்திலுள்ள புள்ளிகள் உவமை கூறப்பட்டுள்ளன (284). காந்தள், வேலியாக மலைப்பக்கங்களில் வளரும் (76).

**அகில்** :—இது மணம் வீசு மரம். இதன் கட்டையினைப் புகைத்து மகளிர் கூந்தலுக்கு மணமூட்டுவர் (286). அகில் மணமுடைய தென்பதனை நறையகில் (389) என்பதால் தெளியலாம். இதன் புகை நீரற்ற வெண் மேகம் போன்று விளங்கும் (339).

**ஆரம்** :—இதன் கட்டையை வெட்டி எரித்து அதன் புகையால் கூந்தற்கு மணம் கொடுப்பர் (286), மார்பில் இதை அரைத்து ஆடவர் அணிவர் (161). சாந்தமென்பதும் இதுவேயாகும். 'சாந்துபுல ரகலம்' என்று சுட்டப்படுதல் காண்க (150).

ஏனல் :—இது தினை யென எண்ணக் கிடக்கிறது. (291) கானவர் புனங்களைச் சுட்டெறித்து ஏனலைப் பயிர் செய்து காப்பர் (291).

வாழை :—வாழை சோலையாய் வளரும்; இதன் குருத்து சுருண்டிருக்கும் (308). அருவி மலையிலுள்ள வாழைகளை அடித்துக்கொண்டு வரும் (327).

நெல்லி:—உடன்போக் குடன்படும் தலைவி, நெல்லி தின்ன வேட்டாளெனத் தோழி ஓரிடத்துக் குறிப்பிடு கின்றாள் (262). மரையான் நல்லேறு தீப்புளி நெல்லி யுண்டு பைஞ்சுனைநீரைப் பருகும் (317). நீல மென் சிறை வள்ளுகிர்ப் பறவை நெல்லியம்புளி யருந்தும் (201).

பனை :—பனையின் உச்சி நெடுமடலில் கருக்குண்டு (372). பெண்ணை என்பதும் இதுவே யாகும்.

பலவு :—பலாமரத்தில் வேரிலும், அடிமரத்திலும், கிளையிலும் தொடுத்த போலக் காய்கள் தொங்கும் (257). குரங்குகள் கானவன் மறந்திருந்தகாலை பலாக்கனிகளைக் கவரும் (342). இதன் கனி மிக நறுமணமுடையது. கருங்குரங்கு பறித்துண்ட பலாக்கனியின் வாசனை சிறுகுடியெங்கும் கமழும் (373). பலாமரங்களில் அமர்ந்து பழமருந்தும் குரங்குகள் வில்லையுடைய கானவர் அம்புக்கஞ்சி குதிரையெனப் பாய்ந்து ஓடும் (385).

குறிஞ்சி :—நிலத்திற்கே சிறந்த செடி (3). கரிய தாளை யுடையது. பெருந்தேன் பிலிற்றுவது; பன்னிரண்டு ஆண்டுக் கொருமுறை மலருமென்பர்.

## புள்

குறிஞ்சிப் பாக்களில், தோகை (26) அன்றில் (160) ஆங்கணாங் குருவி (374) மஞ்ஞை (301) வெளவால் (201) தும்பி, மயில் (138) முதலிய பெயர்கள் சுட்டப் படுகின்றன. ஆண் மயிலுக்குத் தோகை

மயில் யுண்டு; ஆதலால் தோகை எனவும் சுட்டப்பட்டது (26). கருங்கால் வேங்கையில் இருந்த தோகை பூக்கொய் மகளிரைப் போலத்

தோன்றும் என ஓரிடத்துச் சுட்டப்படுகிறது (26). 'மஞ்ஞை' என்பது பெண் மயிலாகும் (38). அது பாறையில் விட்ட முட்டையைக் குரங்குருட்டும் காட்சி கூறப்பட்டுள்ளது (38). தினையினை உணவாகத் தின்னும் (105). மயிலினடிகள் நொச்சியிலை போன்று விளங்கும் (138). கானவர் வலையினால் மயிலைப் பிடிப்பர் (244). மயில்கள் கூட்டமாய்ச் சேர்ந்து கூவும் (249). கலிமழை கெழீஇய கான்யாற்றங் கரையில் தழைத்த பீலி விரித்து மயில்கள் ஆடும்.

அன்றில் இது நெருப்பைப் போன்ற சிவந்த தலையை யுடையது; பெண் அன்றிலின் வாய் இறால் மீனைப் போன்று வளைந்து இருக்கும் (160). இரவிலே இது துணையினைப் பிரியின் ஆற்றாது கூவும் (160). இதன் கால்கள் கரியன (301). சிறிய கொம்புகளாலாய கூட்டிலே வாழும் (301).

கிளி வளைந்த வாயினை யுடையதாய் விளங்கும் (141). புனங்களிலே வந்து தினை யுண்ணும் (142). தழையணிந்த தையலார் கிளிகளை விரட்டுவர் (333). தினையின் கதிரை இஃது ஒடித்து உண்ணும் (133). தினையுண்ணும் கிளிகளைக் குளிர் என்னும் கருவி கொண்டு கொடிச்சியர் ஓட்டுவர் (360).

**பூழ்** :—இதனை நெய்யிற் பொரித்து உண்ணுவர் (389). இதன் கால் சிவந்ததா யிருக்கும் (68).

**தூங்கணாங் குருவி** :—இது பனை மரத்தில் கூடு கட்டும் (374).

**வௌவால்** :—நீலமென் சிறையுடையது; கூரிய நகங்களைக் கொண்டது. புளித்த நெல்லிக் கனிகளை விரும்பி யுண்ணும் (201).

## பறை

கோடியர் கொட்டும் முழவும், (78) தொண்டகப் பறையும் (375) சுட்டப்பட்டுள்ளன. குறிஞ்சிக் குரிய யாழ் யாண்டும் சுட்டப்பட்டதாய்த் தெரியவில்லை.

## செய்தி

ஏனலைக் காத்தலும் (54) பூக் கொய்தலும் (26) யானை பிடித்தலும் (129) புனத்து வீழுங் கிளிகளைக்

கடிதலும் (291) ஐவனம் வித்தலும் (100) கிழங்ககழ்த லும் (379) வேட்டையாடுதலும் (272) தொழில்களா யமைந்தன.

காலை முதல் மாலை வரை பெண்டிர் புனத்தினைக் காப்பர். கொல்லையிற் படியும் கிளிகளைக் கொடிச்சியர், குளிர் கொண்டு ஓட்டுவர். கானவன் பலாச் சோலைப் பழங்களைக் குரங்குகள் கவராவாறு வலைகளைக் கட்டு வான் (342). இராக்காலத்தும் பரண்மீதிருந்து புனத் தினைக் காப்பர். ஏனலை உண்ண வரும் விலங்கினை அறிதற்காய்க் கானவன் கையில் கொள்ளிக்கட்டை வைத்திருப்பான் (357). விலங்குகள் அணுகாதிருக்கும் பொருட்டுத் தொண்டகப் பறையினைக் கானவர் யாமத்து முழக்குதல் இயல்பு (375).

யானை பிடித்தலும் கானவர் தொழிலாம். புதிதாகப் பிடிக்கப்பட்ட யானை எல்லோருள்ளமும் கவரும் நிலை யில் பீடும் பெருமையு முடையதாய்ப் பொலியும் (129).

கொடிச்சியர் புனத்து வீழும் கிளிகளைக் குளிர் கொண்டும் தட்டை கொண்டும் ஓட்டுவர் (29). யானை முதலியவற்றைக் கவண் வீசி விரட்டுத லுண்டு (54). இக் குளிர் என்னும் கருவி இசையை யுடையது போலும். தலைவி ஒருத்தி குளிர்கொண்டு கிளிகளைத் துரத்தவும் அதன் இசை கண்டு அவை ஓடாதிருந்தன என்று குறிப் பிடுகின்றார் (291).

கானவன் கிழங்கை அகழ்ந்து எடுக்கின்றான்; அங்கு நின்று தூய மணிக்கற்கள் கிடக்கின்றன எனச் சுட்டப் பட்டுள்ளது (379).

'பிறவும்' என்றதனால் குறிஞ்சித் திணையிற் பயின்ற தாய் இந்நூலிற் காணப்படும் மலர்களும் கொள்ளலாம்.

காந்தள் (76), ஆவிரை (173), பித்தி (222), குவளை (291), ஆம்பல் (300), வேங்கை குறிஞ்சி (3), மலை மல்லிகை (குளவி) (100), நெய்தல் (397) முதலிய பல மலர்கள் சுட்டப்பட்டுள்ளன.

இனி, 'முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே' என்ற தொல்காப்பியர் சூத்திரத்தின்படி மூன்றாவதாகிய உரிப்பொருள்கொண்டு குறுந்தொகைக் குறிஞ்சியைக்

காண்போம். உரிப்பொருளாவது திணைக்குரிய பொருள்.* அன்றி முதலினும் கருவினும் மக்கட்கு உரிமை பூண்டு நிற்கும் பொருள் எனவும் கூறலாம். மக்கட்கு உரிமை பூண்டு நிற்றலாவது, மக்களால் அடையவேண்டிய பயன்களுக்கு முதன்மை பெற்று நிற்றலாம்.† முதன்மை பெறுமாறு யாங்ஙனமெனின் கூறுதும். நாற்பயனுள் வீட்டினைப் பெறுதற்கு இவ் வுரிப் பொருளாகிய இன்பப் பகுதியே துணைசெய்து நிற்கின்றதென இறையனாரகப் பொருளுரையாசிரியர் கூறுகின்றார்.

உரிப்பொருளாவது திணைக்குரிய பொருள்; திணை என்பது ஒழுக்கம். மாநிலமக்கட்கு ஒழுக்கம் உயிரினும் சிறந்தது. ஒழுக்கத்தாலேயே விழுப்பயன் எய்தலாம். விழுப்பொருள், செம்பொருள், மெய்ப்பொருள், பேரின்பம் என்பன ஒரு பொருட்கிளவிகள்.‡ எனவே வீடெனப்படும் அன்பின் ஐந்திணையின் உயர்ச்சியாகிய பேரின்பமே உரிப்பொருளா லெய்தப்படுவ தென்பது தெளியப்படுதலான், உரிப் பொருள் என்பது மக்கட்கு மற்றைய பொருள்களினும் சிறந்து உரியது என்பதுணரலாம். மற்றைய பொருள்களாவன, முதற் பொருளும் கருப் பொருளுமாம். இவ்விரு பொருளினும் உரிப் பொருள் சிறந்த தென்றலையும், செய்யுட்கு உயிர் போன்று தெளிவுபெற உரித்தாதலையும் விளக்குவாராய்,

“முதல் கரு உரிப் பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை”

(தொல். அகத். சூ. 3)

எனப் பகர்ந்துள்ளார். இதற்கு முதலுரை மொழிந்த இளம்பூரணர் இச் சூத்திரத்துட் பாடலுட் பயின்ற

---

* இறையனாரகப்பொருளுரை. சூ. 1.

† மக்கள் எய்தற்பாலனவாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்பன உரிப்பொருள் எனப்படும். உரிய பொருளாகலின் உரிப்பொருள் எனப்பட்டன. (செந்தமிழ். Vol. 5, Page 708.) உயர் திரு. வேங்கடசாமி நாட்டார்.

‡ அளவில் இன்பம் எனும் நாற்கவிராசர் மொழியும், ஒத்த அன்பான் ......பிறந்த பேரின்பம் என்பதும் பேரின்பத்தையே குறித்துநிற்றல் காண்க.

பொருள் மூன்றெனஓதி அவற்றுள் உரிப்பொருள் என ஒன்றை ஓதினமையால்...........அதுவே மற்றிரு பொரு ளினும் மாண்புடைத்தென்று கூறுகின்றார். நச்சினார்க் கினியரும், முதலிற் கருவும், கருவில் உரிப்பொருளும் சிறந்துவரும் என்றுகூறி, அவை மூன்றுள்ளும் உரிப் பொருளே அகப்பாட்டிற்கு உரித்தாய் நின்று சிறப்பைச் செய்வது; மற்றிரு பொருளும் துணைபுரிவனவே என் பதைப் பல செய்யுட்களால் வற்புறுத்துகின்றார்.

இவ்வாறு சிறந்த உரிப்பொருளாய, புணர்தல், பிரிதல், இருத்தல், இரங்கல், ஊடல் எனும் ஐந்தினுள் ளும் குறிஞ்சி புணர்தலும் புணர்தல் நிமித்தமுமாய ஒழுக்கத்தைக் கொண்டது. 'புணர்தல் நறுங் குறிஞ்சி' என்றார் பிறரும்.

இயற்கைப் புணர்ச்சியும், இடந்தலைப்பாடும், பாங் கற் கூட்டமும், பாங்கியிற் கூட்டமும், இரவுக் குறிக் கண் எதிர்ப்பாடும் போல்வன புணர்த லெனப்படும். தலைமகன் தோழியைக் குறையுறும் பகுதியும், ஆண்டுத் தோழி கூறுவனவும், குறைநேர்தலும், மறுத்தலும் முதலாயின புணர்தல் நிமித்தமாகும்.

குறுந்தொகைக் குறிஞ்சிப்பாக்கள் யாவும் ஒரே தொடர்புடையன வல்ல; பல்வேறு துறைகளைக் கொண்டவை.ஒரு துறைபற்றிய பல செய்யுட்கள் உண்டு. ஆயினும் சில செய்யுட்களைத் துறைகளுக் கேற்றவாறு கோவைப்படுத்திக் கூற முயல்வோம்.

திண்மாண்புயத்தன்; திரண்டதோளினன்; நல முடையான்; நல்ல குல முடையான்; திருவும் எழிலும் திருந்தப்பெற்றான்; அறிவும் ஆண்மையும் அமையப் பெற்றான்; தன்னிகரில்லாத் தலைவன், வீர இளைஞர் பலர் சூழ, வில்லும் வேலும் ஏந்தி வேட்டம் கருதிக் காட்டை யடைந்தனன். ஆண்டு எழுந்தோர் கடுமானின் பின்னோடிக் காவலிளைஞரைக் கையகன்று இரும்பொழி லொன்றிடை எய்தினன். ஆண்டுத் தழை விழைதக்கன கொய்து மென்றும், கண்ணி தண்ணறு நாற்றத்தன செய்து மென்றும், போது மேதக்கன கொய்துமென்றும், அருவி யாடி அஞ்சுனை குடைது மென்றும், வாசமலர்க் கொடியில் ஊசலாடுது மென்றும், தோழியரொடு,

தாரகை நடுவண் தண்மதி போன்று வந்து பிரிந்து நின்ற நங்கையைக் கண்டனன். வடகட லிட்ட ஒரு நுகம் ஒரு துளை தென்கட லிட்ட ஒரு கழி சென்று கோத்தாற் போலவும், வெங்கதிர்க் கனலியும் தண்கதிர் மதியமும் தங்கதி வழுவித் தலைப்பெய்தாற் போலவும் ஒருவரை யொருவர் கண்டு கலக்கும் நிலையி லாயினர்.

தமியராய அவ்விருவரும், காவும், காவிடையுள்ள மாவும், மருதும், தேக்கும் அசோகும், சந்தனமும், சண் பகமும், கோங்கும், வேங்கையும், மலையிடை ஒலியொடு பாயும் மலையருவியும், ஓய்யென வண்டு மொய்க்கும் பொய்கையின் கவினும், முல்லை முதலிய மெல்லிய மலர் களின் பல்வித மணமும் உளத்தையும் உடலையும் ஒருங்கே குளிர்விக்க இன்புற்றனர். அதுகாலை, கொம் பொடு பூங்கொடி கூடிப் பொலிவதும், பிடியொடு களிறு பிணைந்து பெயர்வதும், மரையொடு மான் மகிழ்ந்துலாவு வதும், பேடொடு புள்கொஞ்சிக் குலவுவதும், கண்ட வுடனே உள்ளமறியா தொரு காதல் ஊற்றெழுந்து பெருக, அவைபோன்று தாமும்கூடி உலாவ அவாவினர்.

இவ்வாறு முன்பின்னறியாதார், உற்ருர் உறவி னரைத் தம்முள்ளே உணராதார், ஊழ்வினை உருத்தச் செம்புலத்துப் பெய்நீர் போல் வேற்றுமையின்றிக் கலந்து களித்தனர் (40). முன்னறியா இன்ப உணர்ச்சி தன்னுளத் தெழவே, தலைவி* நாணுகின்ருள். நாணி நிற்கும் நங்கையைக் கண்ட தலைவன் 'மலர்தொறும் மணம் தேரும் மணி வண்டே! இவள் நறிய கூந்தலின் நறும்மணம் உண்டோ' என்றவள் நலம் பாராட்டு கின்ருன் (2) பிரிவெனெனக் கருதிப் பேதுறும் தலைவியின் மனத்தினை வஞ்சினத்தால் தேற்றிப் பிரிக்கின்ருன் (36). நலங்கொண்ட தலைவி புலம்புகின்ருள். 'மானினங் களும் விரும்பியன உண்டு பேரின்பம் எய்துகின்றன. யானே இவ்வச்சிரக் காலத்துப் பிரிதலால் இன்னலுறு கின்றேன்(68) என்று புலம்புகின்ருள். முன்னுளிற் புணர்ந்த பொழில் நாடித் தலைவன் போதருகின்ருன்;

---

* அச்சமும் நாணும் மடனும் முந்துறுத்த
நிச்சமும் பெண்பாற் குரிய வான.

(தொல். களவு. சூ. 8.)

ஆவியனைய பூவையின் மேனி புணர்ந்து இன்புறுகின்றான். 'மெல்லிய முல்லையும் நல்லியற் குவளையும் கோடல் முகையும் கூட்டித் தொடுத்த மாலை போன்ற மணமுடையாள்; அன்னாள் மேனி தளிரினும் மென்மையது, கூடுதற்கோ பேரின்பம் கொடுப்பது' என்று (62) கூறி இன்புறுகின்றான். ஆயினும் பிரியுங்கால் பேதுறுகின்றான்; 'ஒளியுடைய நுதலாள்; நீரினும் தண்மை நிறைந்தவள். ஆயின், அவளைப் பிரிய எண்ணுங்கால் ஆற்றாத் துயரைத் தருகின்றவளா யிருக்கின்றனளே' (70) என்று பிரிகின்றான்.

தலைவியின் இன்பம் எண்ணி ஏங்குகின்றான்; மண்ணுலகும், விண்ணுலகும், இவள் தோளொடு கூடி வைகும் ஒரு நாளொடு நிகராமோ (101) என்று புலம்புகின்றான்; மேனி வாட்டம் அடைந்தது; ஆருயிர்ப் பாங்கன், அருகே அணைந்து 'அண்ணலே! வாட்டமேனோ' என வினவுகின்றான். தோழனே! ஏனலம் புனத்தைக் காத்துக் கிளிகளைக் குளிர்கொண்டு ஓட்டுவாள் மழையனைய கண்கள், மலர் போன்றவை; ஆனால், அம்பு போன்று என்னகத்தைப் புண்படுத்தின (72); சிறுகுடிக் குறவனது பெருந்தோட் குறுமகளது நீரனைய சாயல், தீயனைய என் வலியை அழித்துவிட்டது (95); சிறிய அரவு பெரிய யானையை வருத்தினாற்போலச் சின்மென் மொழியாள், வளையுடைய கையள்; என்னை வருத்திவிட்டாள் (119); புதியதாய்ப் பிடித்த யானை எல்லோருள்ளமும் பிணித்தல்போல, கதுப்பயல் விளங்கும் இளையளின் சிறுநுதல் என்னைப் பிணித்தது (129); பாங்கனே! பிரிந்தோரைப் புணர்க்கும் மருந்துமுண்டோ (156); அமுதனைய மொழியும், அதுவனைய இயல்பும் அமைந்தவள் இன்பம் செய்யாது துன்பம் செய்தல் என்னே! (206); கலைக்கழுத்தில் அழுந்தி உதிரத்தொடு உருவப் பெற்ற அம்பனைய கண்ணாளின் அழகிய தோள்களை இனிக் கலத்தலும் எனக்காகுமோ (272); அமிழ்தமூறும் அவள் சிவந்த வாயையும், ஆரம் நாறும், அறலனைய கூந்தலையும், மதர்த்த மழைக்கண்ணையும் இடையீடின்றி எண்ணி மகிழ்வனே (286) என்று பலவாறு அரற்றினன்.

தலைவியின் பிரிவினைத் தாங்கமுடியாத் தலைவன் கூறிய மொழிகளை ஆருயிர்த்தோழன் உளங்கொண்டான். 'இது நினக்கு ஏற்குமோ (58) என்றிடித்துரைக்கின்றான். வானிடிந்து வீழினும் அஞ்சாத உன் நெஞ்சம் நங்கை யொருத்திக்காய் அவலமுறல் அழகன்று என வற்புறுத்துகின்றான். அவையாவும் தலைவன் செவியகத்துச் சென்றில; பின்னரும் பேசுகின்றான்: 'நெருங்கி இடித்துரைக்கும் நேசனே! எமக்குற்ற குறையை உமக்குற்ற குறையாகக் கருதி தீர்த்துவிடுவீர் என்று, சொல்ல முடியாத் துயரை இதுவரையும் சுமந்து நின்றேன். அது மிகவும் நன்றாயிற்று; பாறையில் கதிரவன் காய கையற்ற ஊமையன் காத்திருந்த வெண்ணெய்போல் என் னின்னல் பரந்தது (58); காமம் கடியத் தக்கது என்று கழறுகின்றனை; கவவுக் கடுங்குரையள்; காமர் வனப்பினள்; குவவுமென் முலையள்; கொடிக் கூந்தலள்; சாய் நோக்கினள் ஆகிய இளையளை நான் எவ்வாறு மறந்தமைவேன் (132)! 'இடித்துரைக்கும் கேளிரே! என் நெஞ்சம் பிணித்த அஞ்சிலோதிப் பெருந்தோட் குறுமகளின் மெல்லாகம் ஒருநாள் கூடப் பெறுவனேல், பின்னர் அரைநாள் வாழ்வும் யான் வேண்டலன்' (280) என்றிவ்வாறு கூறிய தலைவனை மாற்ற லரிதெனப் பாங்கன் மனங்கொள்கின்றான். அவனது தீராவேட்கையைத் தீர்க்க வழி தேடுகின்றான். வேண்டிய வினைகள் விரும்பிச் செய்கின்றான்.

பாங்கனால் கூட்டம் பெற்று மகிழ்ந்த தலைவன், தோழியின் துணையைப் பெறின், இடையறாது களவு இன்பமளிக்குமென் றெண்ணுகிறான். தலைவியின் ஆருயிர்த் தோழியைக்கண் டாய்கின்றான். நீராடுங்கால் தலைவி கொள்ளும் புணையை மற்றொரு நங்கையும் கொள்கின்றாள்; தலைவி கடைப்புணைக்கொள்ளின் அவளும் அதுவே கொள்கின்றாள் (272); இவளே தான் இன்னுயிர்த் தோழி போலும் என்றுன்னித் தழையும் மலரும் தாங்கி அவளை அடைகின்றான். குறைகளைக் கூறுகின்றான். 'சுனைமலர் கொய்தும், தினைப்புனம் காத்தும் விளங்கும் பூங்கட் பேதை என்னிலையை உணர்ந்தனளோ இல்லையோ; ஆயின், என்னுள்ளமோ பள்ளி யானைபோல் உயிர்த்து அவள் பின்னிலையிலே யுள்ளது (142) என்று

மொழிகின்றான். தழை கண்ட தோழி 'எங்கள் மலை காந்தளால் நிறைந்தது (1) என்று அத் தழை மறுக்கின் றாள். 'என் குறை மறாதே! காலையும், பகலும், கையறு மாலையும், ஊர் உறங்கு நள்ளிரவும், விடியலும் என்ற இப்பொழுதெல்லாம் வருத்தும் காமத்தைப் பொய்யென மொழிதல் பொருந்துமோ? மா வென மடலைக் கொண்டு வீதியில் வருதலும் தலைமகட்குப் பழியாம். பிரிந்துயிர் வாழ்தலும், துன்பமும் பழியும் எனக்குத் தருவதாம்' (32) என்று தன் குறை மறாதிருக்கக் கூறுகின்றான்.

தோழி தலைவன் ஆற்றாத் துயரையும் ஆழ்ந்த அன்பையும் நன்குணர்கின்றாள். அவனது குறை நீக்க ஆருயிர்த் தலைவியை அடைகின்றாள். 'தலைமகளை நோக்கித் 'தோழி! நாடன் தன்னைக் கருதியிருந்தமையை அவனறியான்; நம் நலத்தை நயந்து வேனிலால் மெலிந்த ஆனேறுபோல வேதனை யடைகின்றான் (74)' என்று கூறித் தலைவியின் மனநிலை உணர்ந்து இருவரையும் கூட்டுவிக்கின்றாள். கூடிய தலைவன் பிரிந்து போகின் றான்; ஆற்றாத் துயரால் தலைவி அலமருகின்றாள். 'பெரு மலை நாடன் நோய் தந்தனனே; குவளை போன்ற கண்கள் பசலை கொண்டனவே' என்று கூறிப் பேதுறு கின்றாள் (13).

இங்ஙனம், ஆற்றியும் தேறாத் தலைவியின் அல்லல் கண்டு இருவரையும் கூட்டுவிக்கத் தோழி தலைவனை இரவிலே வரச் செய்கின்றாள். 'ஒலிக்கும் வெள்ளருவி ஓங்குமலை நாடன் இரவிலே வருவன்; யானையொடு புலி பொரூஉம் சோலையின் வழியாய் நள்ளிரவிலே வருவன். அங்ஙனம் வருதலினால் நமக்குண்டாம் பழிக்கு நாம் நாணோம்' (88) என்று கூறித் தலைமகள் உடன்பாடு பெற்று இருவரையும் இன்புறச் செய்கின்றாள்.

வழக்கம் போல வயப்புலி யனைய தலைவன் இரவுக் குறி நோக்கி வந்தான். வைத்த குறி வழுவியது கண்டான்; ஆற்றானாய், 'நெஞ்சமே! கீழ்க்கடல் நாரை மேற்கடல் மீனை விரும்பியதன்ன செயலும் அரியளு மாயினாளை நினைந்தனை; அடையப்பெறாமையின் நோயினை யுடையையானாய்' (128) என்று நொந்து புலம்புகின்றான். வைத்த குறி வழுவியது கண்டு தலைவி வருந்துகின்றாள்.

'தோழி! நாடன் வருகை உண்மையோ! சாரற் கருங் குரங்கு கொம்பு தாங்கும்படி, பாயாத தவற்றினது பயன், அக் குரங்கை ஏற்றுக்கொண்டு முறிந்த அக் கொம்பினிடத்துச் சென்றுற்போல, தலைவன் குறியை வாய்ப்பச் செய்யாத தவற்றின்பொருட்டு என்னுடைய பரந்த தோள்கள் பசலையடைந்தன (121) என்று அல்ல குறிப்பட்டாள் அல்லல் அடைகின்றாள்.

இடையறாது இரவிலே குறி நாடித் தலைவன் வந்து கொண்டிருக்கின்றான். வரைந்து வாழ்தலே சிறந்ததாம் என்று தோழி எண்ணுகின்றாள். இரவிலே வந்தேகும் தலைவனை நோக்கி 'மலை நாட' செவ்வியை யாதலைச் சிந்தைகொள். தலைவியின் உயிரோ மிகச் சிறிது; ஆயின் உன்பால் அவள் கொண்ட அன்பு மிகப் பெரியது. அவள் துயர்மிகுதியா லாம் கேட்டை அறிந்தார் யார்? (18) என இரவு வருதலை விலக்கி வரைய வேண்டு கின்றாள்.

இரவிலே வந்தொழுகியவனைப் பகற்குறி அமைத் துப் பகல் வருக என்றாள். தினைக்கதிர் முதிர்ந்தது; பகற் குறியும் அரிதாயிற்று. தலைவி இல்லிலே செறிக்கப் பட்டாள். தலைமகன் சிறைப்புறத் துள்ளான். 'சாரல் நாட! ஆரிருள் நடுநாள் வாரல், அன்னை தினைக் கிளி கடியச் செல்க என்றாள் எனச் சொல்லின் எவன்? என்று வரைவு வேண்டுக்' என்பது தெளியத் தோழிக்குத் தலை மகள் கூறுகின்றாள் (141).

இங்ஙனம் இரவுக் குறியும், பகற் குறியும் இல்லை யாகத் தலைவியின் வேறுபாடு பெருகுகின்றது. மேனி பசக்கின்றது; மெய் தளர்கின்றது; தாய் வேளினால் ஆயிற்றோ என வெறியாட் டெடுக்கின்றாள் (111) நரைத்த கூந்தலையுடைய முதியாள் அகவுகின்றாள்; மலைவளம் பல பாடுகின்றாள். (23) அது கண்ட தோழி, 'மென்தோளை நெகிழ்த்தது வேளென வேலன் மொழி கின்றான்; அன்னையும் அதுவென உணர்கின்றாள்; இந் நகையான செய்கையைக் காணத் தலைவன் இன்று வரு வானாக (111); அஞ்சிலோதி அசையியற் கொடிச்சிக்கு நாடொறும் தழை யொருவன் நல்கிச் சென்றமையாற் செயலை மரம் தளிரற்று நின்றது; அதனை யுணராது

அலரி மாலையை முருகனுக்கு அணிந்து இவ்வூர் ஏமுற்றது (214); தோழி! மறியினை யறுத்துத் தினையினைப் பரப்பிப் பல்லியங் கறங்க வெறியாட்டெடுத்தல் நோய்க்கு மருந்தாமோ! வேற்றுத் தெய்வம் பல போற்றி இவள் பேயால் கொள்ளப்பட்டாள் எனப் பேசுதல் வருந்துதற் குரியதன்றோ' (263) என்று கூறுகின்றாள்.

இவ்வாறு கூறித் தோழி அறத்தொடு நிற்கத் தாய் உண்மை உணர்கின்றாள். தன்னையர் முதலியோர்க்கு அறத்தொடு நிற்கின்றாள். தாயுணரா நிலையில் ஏதிலார் வரைவுஎதிர்தலுமுண்டு. அந்நிலையில் தோழி அறத்தொடு நின்று உண்மை யுரைப்பள். 'அன்னாய்! நின் தோளொடு பொருந்தும் துணைவன், சுனைப் பூங்குவளைச் சுரும்பார் கண்ணியன், நள்ளிரவில் நம் மனை வந்து மீள்கின்றான். அக் காலத்தில், மரையா நீங்க அதன் ஏற்றைக் கொன்று புலி முழங்கும்; அதனால் நம் களவு இனி மறைத்து வைத்தற்குரிய தன்று; அன்னையொடு அறத்தொடு நிற்றலே சாலும் (321) என்றுரைக்கின்றாள்.

தலைவி இற்செறிப்புண்டகாலைத் தாங்க முடியாத் துயரால் தளர்கின்றாள்; வருவலென வாக்களித்துப் பொருள் நாடிப் போய தலைமகன் வந்து வரைந்திலனே என வாடுகின்றாள்; ஏதிலார் மணம் நாடி வருதல் எல்லையற்ற அல்லல் அளிக்கின்றது; தமரோ கலந்த காதலனை அறிந்து அவனுக்களியார் போலும்! அந்நிலையில் தலைவன் வருகின்றான்; தமரது மனநிலையை உணர்கின்றான்; தலைவியைத் தன்னுடன் கொண்டுபோக உன்னுகின்றான். உடனிருந்து அதற்குதவும் தோழி உள்ளமுடைகின்றாள்; தாலுடனூட்ட, பாலுடனூட்டச் சீருடன் வளர்ந்த செல்வத் தலைவி, பெற்றோரைப் பிரிந்து, உற்றாரைத் தணந்து கற்புக் கடம்பூண்டு காதலனொடு செல்லுங்கால், மனமுருகிய தோழி மாற்றம் சில கூறுகின்றாள். "மரையா இலையுண்டு மகிழும் நாடனே! நினக்குப் பல்வகையிலும் இன்பம் தரும் நிலையில் இதுகாலை இவள் உள்ளாள்; பேருதவி செய்வாரைப் பேணுதல் உலகியல்பு; ஆதலின், இதுபொழுது பெறும் இன்பம் எய்தலாகாத முதுமையிலும், இவள் உன்பால் வைத்துள்ள அன்பொன்றையே கருதிப் பாதுகாத்து வருவாயாக;

நின்னையன்றி வேறொரு துணையினை நினைத்தும் அறியாள்; அன்னவளைக் காத்தல், ஐயனே உன் அருங்கடமை" என்று மனமழிந்து கூறிக் காதலனோடு விடுக்கின்றாள்.

இதுவரையும், இயற்கைப் புணர்ச்சி முதலா உடன் போக்கீறாக உட்பட்ட களவுத் துறை சில கூறும் செய்யுட்களைக் கோவைப் படுத்திக் கூறினோம். இங்ஙனமே ஏனைய செய்யுட்களையும் கோத்துக் கூறின் கற்புத் துறை எல்லையற்ற இன்பம் அளிக்கும் என்பதற்கு ஐயமில்லை.

## உவமையும் பொருளும்

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியர் உவமையணி ஒன்றே கூறினார். உருவகம் முதலிய பலவகை அணிகளும் உவமையினின்றே பிரிந்தன என்பது அவர் கருத்தாம். பண்பும், தொழிலும், பயனும் என்ற இவற்றின் ஒன்றும் பலவும், பொருளொடு பொருள் புணர்த்து ஒப்புமை தோன்றக் கூறுவது உவமையாகும். இவ்வுவமையன்றிப் பொருள்களின் இயல்பைக் கண்டது கண்டவாறே கூறுவது தன்மையணி என்பர்.

குறுந்தொகைக் குறிஞ்சியில் ஏறக்குறைய 63 உவமைகள் சிறந்தனவாகப் பயின்றுள்ளன. உள்ளுறை உவமம் கொள்ளத்தக்க இடம் பல உண்டு. இறைச்சிப் பொருள் ஏற்று நிற்கும் செய்யுட்களும் சிலவாம். அவற்றுட் சிலவற்றை அடியிற் காண்போம்.

1. தலைவனொடு கொண்ட நட்பிற்கு நிலத்தின் அகலமும், நீரின் ஆழமும், வானின் உயரமும் உவமங்களாகக் கூறப்பட்டுள்ளன (3).

2. உருண்டையான பாறைக் கற்கள் மாசு நீங்கக் கழுவிய யானைபோல வயங்குகின்றன (4).

3. மெல்லிய இளைய நங்கையின் தாங்கமுடியாப் பெருங்காதல், சிறிய கொம்பில் பெரும் பழந் தூங்குதல் போலும் (18).

4. முதிய மகளின் நரைத்த கூந்தல், சங்கினைக் கோத்து வைத்தது சாலும் (23),

5. குருகின் கால்கள், அரிந்த தினைத்தாளைப் போல்வன (25).

6. முகையின்றி முற்றுமலர்ந்த வேங்கையில் வீற்றிருக்கும் மயில், பூக்கொய் மகளிரைப் போலப் பொலியும் (26).

7. அகத்தடக்க முடியா அன்பு புறத்து வெளிப் படல், பசுங்கலத்துப் பெய்த நீர் பொசிதல் போலும்(29).

8. விடாது தழுவுதல், மகவினை மந்தி தழுவிக் கொள்ளுதல் மானும் (29).

9. வான மழையும் செம்புலமும் கலந்து ஒன்றுதல், தொடர்பற்ற காதலர் உள்ளங் கலந்த தொக்கும் (40).

10. வேங்கைமலர் வீழ்ந்த கரிய கல், புலிபோலப் பொலியும் (47).

11. கானக யானை பிடித்துக் கைவிட்ட மூங்கில், மீனெறி தூண்டில் போல் வானியுயரும் (54).

12. அடைதற் கரிய தலைவனைக் கண்டேனும் களித்தல், மலைத் தேனைக் கண்ட முடவன் இரு கையும் குவித்துச் சாரலி விருந்து தேனைச்சுட்டி உண்பதுபோலக் கைகளை நக்குவது போலாம்.

13. வேனிற் காலத்தில் கையற்ற ஊமையனால் காக்கப்படும் பாறையின்மேல் உள்ள வெண்ணெய் வெம்மையாற் பரத்தல்போல், நீக்கமுடியாப் பெருங் காதல்நோய் பரந்தது (58).

14. தலைவியின் மேனி, மாலைபோல் மணமும், தளிர் போல் மென்மையும் வாய்ந்தது (62).

15. தலைவியின் கண் திசையெலாம் அளப்பதால் பூப் போல் சுழல்வன ; புண்செய்தலால் அம்பு போன்று கொடியன (72).

16. குதிரை தாவுதல்போல் பசுங்கழை வானிலாடி வயங்கும் (74).

17. சேம்பின் இலை, யானையின் செவியை யொக்கும் (76).

18. கோடியர் முழவென வெள்ளருவி முழங்கும் (78).

19. தலைவியின் சாயல் நீரனையது; தலைவனின் வலி தீயனையது; நீர் போன்ற சாயல் தீப்போன்ற வலியை அழித்தது (98).

20. மலரனைய கண்கள்; பொன்னனைய மேனி (101).

21. தெய்வத்திற்கிட்ட தினை யுண்ட மயில், வெறியாடு மகள் போன்று வெய்துற்று நடுங்கும் (105).

22. எதிர்கொள்ளுதற்கு, நெய் பெய்த தீ உவமையாகக் கூறப்படுகிறது (106).

23. கல்மீது படர்ந்து ஓடும் இற்றிவேர், மலையினின் றிழியும் அருவி போலும் (106). கருமணல் வார்ந்தனைய கரிய கூந்தல் (116).

24. சிறிய அரவு பெரிய யானையை வருத்தியதொப்ப இளைய நங்கை வலியனாய என்னை வருத்தினாள் (116).

25. மை பூசியது போன்று கரிய முகமுடையது குரங்கு (121).

26. கீழ்க்கடல் நாரை மேற்கடல் மீனை விரும்பியது போல் அரியளாய தலைவியின் மீது ஆசையுற்றனை (128).

27. சிறிய நுதல், எண்ணாட் பக்கத்துப் பசுவெண் திங்கள் போலும் (129).

28. சிறிய ஆன் கன்று தாயினைப் பார்த்தல் போலும் பார்வை யுடையாள் (132).

29. சிறு தினையின் நிறம், பொன்போலும் (133).

30. தலைவனால் நலமிழந்து அவன் தண்ணளி நினைத்து உயிர் வாழும் நங்கை, கிளியுண்ட தினைக்கட்டைமழை பெறுதலால் சிறிது குருத்து நிற்றலை ஒத்தாள் (133).

31. அரவுபோல் மலையினின்று அருவி வளைந்து வீழும்.

32. நொச்சியிலை மயிலினடி போலும்.

33. பள்ளியிற் கிடக்கும் யானை விடும் பெருமூச்சுப் போல் பிரிந்த தலைவன் பெருமூச்சு விட்டான் (142).

34. யாமங்காவலர் பரணில் மாட்டிய விளக்குகள், வானமீனினைப் போலப் பொலியும் (150).

35. அன்றிலின் தலை, நெருப்புப் போன்று சிவந்தது (160).

36. மழைக்காலத்து இரவினில் குறிநாடிவரும் தலைவன், மாரி யானைக்கு ஒப்பாவான் (161).

37. ஆவிரைமலர் பொன்போன்று விளங்கும் (173).

38. வரைமுதிர் தேனைப் போல, தலைவன் பிரிந்து போயினன் (176).

39. பாம்பு படம் சுருக்குதல்போல் காந்தள் குவிந்தது (185).

40. தலைவியின் கடைக்கண்கள் மழைக்காலப் பித்திமலர் முகையின் புறம்போன்று சிவந்தவை.

41. வண்டு பாம்புமிழ் மணிபோல, வயங்கும் (239).

42. ஓரி முருங்கவும், பீலி சாயவும் மயில் வலையிற் பட்டதுபோல, தாயின் கையில் இரவில் தலைவி காவல் பட்டாள் (244).

43. கலையின் கழுத்தில் ஊன்றி உதிரத்தொடு உருவிய அம்புபோன்றன கண்கள் (272).

44. யானையின் முகத்துப் புள்ளிகள் போலக், கல்லின் மீது காந்த ளவிழும் (284).

45. தலைவன் ஞாயி றனையான்; யானே நெருஞ்சி மலர் நேர்வேன் (315).

46. அகிற்புகை மகளிர் கூந்தல்போல் வயங்கும்.

47. பிடியினது துதிக்கை போன்று தினைக்கதிர் தோன்றும் (360).

## இறைச்சி

'இறைச்சி தானே பொருட்புறத் ததுவே' என்பது சூத்திரம். பொருட்புறத்தில் தோன்றுவதாய இறைச்சிப் பொருள் சிலவற்றைக் காண்போம்.

" கருங்கட் டாக்கலை பெரும்பிறி துற்றெனக்
கைம்மை யுய்யாக் காமர் மந்தி
கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி
ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்
சார னாட........." (69)

'காதலனை இழந்த மந்தி கைம்மையைக் காதலியாது மலை பாயும் சாரனாட' என்றதனால் உன் வரையிடத்து அஃறிணையாகிய விலங்கும் பேரறிவுடையதாய் ஒழுக, தலைவனாகிய நீ களவின்மீது கொண்ட காதலால் நல்லறமாகிய இல்லறம் கொண்டாயல்லை; ஆதலின், நின் பெருமைக்கு இது தகாது; அன்றியும், இரவிலே நீ வரும்போது ஆறும், பிறவும் அல்ல விளைத்தால் தலைவி என்னுவள் என்பதும் உணர்வாய் எனும் பொருள் தோன்றினமை அறிக.

" ............செங்கா லுழுந்தின்
ஊழ்ப்படு முதுகா யுழையினம் கவரும்" (68)

விலங்கும் தன் இனத்தொடு வேண்டிய துண்டு இன்பத்தொடு நிற்கும் காலத்து, யானே, துணையின்றி, இன்பமுமின்றித் துன்புறலானேன்; என் செயவல்லேன்! எனும் பொருள் காண்க.

" சினைதொறும் தீம்பழம் தூங்கும் பலவின்
ஓங்குதலை நாடன் " (83)

இனிமைதரும் சுளைகளை அகத்தே கொண்டிருந்தும் புறத்தே இன்னாத முட்களை யுடையனவாய்க் காணப்படும் பலாக்கனிகளையுடைய நாடன் என்றதனால், உள்ளே வரைந்துகொண்டு இல்லறத்தொழுகி இன்பம் செய்வதாயிருந்தும், புறத்தே இன்னல்தரும் களவிலே காதலுடையான் போல் காணப்பட்டான் என்பதாம் (83).

" புல்வீ ழிற்றிக் கல்லிவர் வெள்வேர்
வரையிழி யருவியிற் றோன்று நாடன் " (106)

எதற்கும் பயனற்ற இற்றிவேர் யாவர்க்கும் பயனுடைய அருவிபோலத் தோன்றும் நாடன் என்றதனானே, நம்மை ஆற்றுவிக்கப் பயன்படாத தூதும் அவற்கு அனுப்பினம் என்ற அளவிலேனும் பயன்பட்டது, என்ற பொருள் தோன்றுவ துணர்க.

## சிறந்த பாக்களுட் சில பகுதிகள்

மலர்தலை உலகின்கண் உள்ள பொருள்களைப் புலவர்கள் இருவகையாகப் பிரித்து எண்ணுவர். ஐம்பொறி உணர்வுக்கு உட்பட்டன யாவும் தலைமைபற்றிக் காட்சிப் பொருளெனக் கருதப்படும். உள்ளத் துணர்வால் அறியப்படும் மன நிகழ்ச்சிகள் யாவும் கருத்துப் பொருளாக எண்ணப்படுகின்றன. புறத்தே காணப்படும், மலை, காடு, நிலம், கடல் முதலிய காட்சிகளைப் புனைந்து செய்யுளால் சித்தரிக்கும் திறமையினும், அகத்தே தோன்றும் பலவித எண்ணங்களையும், உணர்ச்சிகளையும் கற்பார்பால் மெய்ப்பாடு தோன்றக் கவி செய்யும் திறமையே சிறந்ததாகும். இந் நூற் செய்யுட்கள், காட்சிப் பொருள், கருத்துப் பொருள் ஆகிய இரு பொருளையும் உயிரோவியம்போல் கற்பார் கருத்திற் காட்டுந் தகையன என்பதற்கு எட்டுணையும் ஐயமில்லை. பயில்தொறும் நூல் நயம் இப் பாக்களிற் காணப்படும். சில செய்யுட்களின் பொருளை இங்குக் காண்போம்.

ஆம்; அவனொரு கள்வன். என் உள்ளம் கவர்ந்தான்; உடல் நலம் கவர்ந்தான். அழகெலாம் திருடினன். காட்டிடத்து வேட்டையாடப் போந்தவன் கான்யாற்றிடத்துக் கலந்து எழிலெலாம் நுகர்ந்து இன்சொலால் சூளுரை கூறினன். அவன் என் நலந் திருடியதை இல்லையென்பனேல், யானென்ன செய்வேன்! ‘அக் களவினை வேறு எவரும் அறியாரே! ஐயோ! என் செய்வேன்? .........ஆம்; அவன் இல்லையெனப் பொய்த்தானாயினும் அதனை மெய்ப்பிக்க வழி அறிவேன். இனி ஏன் கவலல் வேண்டும்! எனது ஆக்கத் தொழிலை அக் கள்வன் கவர்ந்த காலத்துக் குருகொன்று கொம்பில் கண்டிருந்த தன்றோ? அஃது எனக்குறு துணையாய் அவன் கள்வனே என்பதற்குக் கரியாய் நிற்கும். ஆனால்......? அக் குருகு ஓடுகின்ற நீரில் வருமீனை யன்றோ எதிர்பார்த்திருந்தது? உயிர் கொன்றுண்டு உடல் வளர்க்கும் கொக்கு எனக்குதவியாய் நிற்குங்கொல்? அவன் மணந்த காலத்துக் கொக்கன்றி வேறொன்றும் கண்டதில்லையே? இனி யான் என் செய்வேன்? எங்குறுவேன்? இங்ஙனம் அலையும் தலைவியின் மனநிலையைக் கபிலர் சித்தரித்துக் காட்டுகின்றார். (செய். 25)

"தோழி! கலந்து சென்ற காதலனைக் காணேம். களவிலே உளம் வைத்து வாழ்வதன்றி மணம் செய்து இல்லிருந்து நல்லறம் செய்யும் மனமுடையோ" னல்லன் போலும்! மெய்போல் மொழிந்த சூளுரை பொய் போலாயினவே! என்னே உனது அன்பு! "தோழி! அங்ஙனம் கூருதே. குறிஞ்சியின் சிறிய மலரிலிருந்து பெருந்தேன் ஈட்டும் மலையனெடு கொண்ட அன்பை என்னென்பேன்! அளவிலே அது ஞாலத்திலும் அகன்றது; தன்மையில் வானினும் உயர்ந்து சிறந்தது; இரு நிலம் பிளக்க வேரூழ்த்த அன்பு கடலினும் ஆழமுடையது; ஆதலின், அங்ஙனம் அவனது இயலைப் பழித்துரையாதே" என்ற தலைவியின் இன்ப அன்புரை எண்ணி மகிழத் தக்கதாம். (3)

"சின்மொழி! இத் தழையும் கண்ணியும் தளர்ந்து வாடின; என் உள்ளமோ பள்ளத்திற் பாயும் வெள்ளம் போல் பைந்தொடிபாற் சென்றது. வேட்கையுற்ருேனின் தாகம் தணிப்பது அறமுடையார் தன்மையன்ருே!" "யாவிரோ நீவிர்' தழை சுமந்து தளர்கின்றீர். காந்தளும் வேங்கையும் மலிந்தது எங்கள் மலை." "பேதாய்; இது வரையும் பின்னின்றிரந்தேன். உன்னுலாம் உதவி ஆற்றிலையாயின், என்னும் என்பதை அறிவாய்! காமங் காழ்கொளின் மா வெனப் பனைமடலும் கொள்வர்; மல ரென எருக்கங் கண்ணியு மணிவர். அணியென வெள்ளென் பணிந்து யாவரும் எள்ளவும் தோன்றுவர். ஆதலால், என் வேண்டுகோளைப் புறக்கணித்தனையாயின் நேர்வதை உணர்வாய் (செய். 17).

"வேரிடமும் பழம் கனியும் பலா மலிந்த சாரனுட! உன் நல்லறிவுகள் வாழ்வதாக! தலைவியோ வல்லியனைய மெல்லியல்; மிகச் சிறு கொம்பில் தாங்க முடியாப் பெருங்கனி தூங்குவதுபோல் மெல்லியலாகிய இந் நல்லியலாள் சிறியளாயினும் அவள் உன்பாற் கொண்ட அன்பு மிகப் பெரிது. கனி தாங்க முடியாது தளரும் கொம்பு முறிந்துபோதலும் இயல்பாம். இவள் கொண்ட பேரன்பை இகழ்ந்துவிடுவையேல் அவள் என்னுவள் என்பதனை யாரறிவார் (18).

"இளையள்; முளைவ வெயிற்றள்; வளையுடைக் கையள் என்னை வருத்தினுள். யானினி என் செய்கோ!"

என்றான் தலைவன். "மன்னனே! என்னே உன்னுளம் உடைந்தது? நங்கை யொருத்தியால் இந்நிலையை நீயே எய்துவையேல் ஏனையோர் நிலை என்னாம்" "அன்ப! பாறை மீது, கையற்றவன்; ஊமையன்; வெண்ணெயைக் காத்திருந்தான்; கதிரவன் காய்கின்றான்; வெம்மையால் வெண்ணெய் உருகுகின்றது; கையில்லையே; என்செய்வான்; பிறரை அழைத்து வெண்ணெயை எடுக்கவேண்டுமாயினு பேச வாயில்லையே! பாறையிலே வெண்ணெ யுருகிப் பரக்கின்றது; யானுற்ற நோயும் அந்நிலையிலேயே அமைந்தது. கையற்றவன்போல் செயலற்றவனானேன்; வாயற்றவன்போல் வகையற்றவனானேன். வெண்ணெய்போல் துன்பம் பரந்தது" (58).

"தலைவனை அடைதலோ அரிதாயுள்ளது. பொருள் தேடிப் பிரிந்தனன் போலும். காவலிலிருந்த காலத்துக் கலந்து மகிழ்தல் இல்லையாயிற்று; ஆயினும், கண்டு களித்தேன். ஓங்கிய உயர்ந்த பெருமலை யுச்சியிலே பெருந்தேனைக் காலற்ற முடவன் கண்டான். மலைத் தேனை உண்ணவேண்டு மென்ற ஆசை அலைபோலப் பெருகி நிற்கின்றது. ஆசைக்கு அளவில்லை; சாரலில் அமர்ந்தான்; அங்கை இரண்டையும் ஒன்றாய்க் கூட்டிக் கொண்டான். மனங் கவர்ந்து நின்ற மலைத்தேனைக் கண்ணார நோக்கினான். அகமகிழ உண்பவன்போல் அங்கை இரண்டையும் நக்கி மகிழ்ந்தான்! தோழி! நலங்கவர்ந்த நாயகன் இன்பம் நல்கினும் ஆகுக; நயவா னாயினுமாகுக! பலபொழுதும் காண்டலேனும் களிப்பை யளிக்குமே யன்றோ!" (60) இவள் இன்பம் எத்தன்மையது!

பூப் போலும் கண்கள்; பொன் போன்ற மேனி! மெல்லிய முல்லையும், நல்லியற் குவளையும் கோடல் முகையும் கூட்டித் தொடுத்த மலர்மாலை போன்ற நறிய மணம் வீசுகின்றது. தளிரினும் மென்மையில் மேம்பட்டது. கூடுதற்கோ பேரின்பம் கொண்டது. இடந் தலைப்பட்டு எய்திய இவ்வின்பமன்றோ இன்பம்! (62)

வளம் பொருந்திய மலைநாடனே! ஓங்கிய மலைவாழும் கருங்கண்ணை யுடைய ஆண்குரங்கு மாய்ந்ததாக, உயிர் ஓம்பி வாழ்தலை விரும்பா மந்தி பெருந்துயருற்றது; கைம்மை நோன்பு கொண்டு வாழ்தலிற் காதலில்லை.

மரமேற அறியாக் குட்டியை உற்றாரிடம் ஒப்புவித்தது. பெருமலை உச்சியை அடைந்தது. மலையினின்று மண்ணை நோக்கி வீழ்ந்து தன்னுயிரை மாய்த்தது. காதலன் மாண்ட பின்னர், கைம்மையுடன் வாழக் குரங்கும் காதலியாக் குன்ற நாடனே! இரவிலே நீ வருதல் எங்கட்குப் பெருவருத்தம் நல்குவதாம். இரவிலே வந்தொழுகும் உனக்கு ஏதம் வரும் என்பதை, எண்ணித் தலைவி உடல் வாடுகின்றாள். உயிர் துடிக்கின்றாள். உன்மலையிலுள்ள குரங்கினது கற்பின் உயர்வையும் உணர்ந்த நீ தலைவியின் தன்மையை அறியாதிருத்தல் தகுமோ! இரவிலே வரல் ஒழித்து வரைந்துகொளல் நலமன்றோ!" என்பவற்றை உள்ளடக்கிக் கூறும் கடுந்தோட் கரவீரன் கவித்திறமை வியக்கத் தக்கதாம். (69)

"பகலிலே வருதலையும் நிறுத்திவிட்டாள்; இரவிலே குறி நேர்ந்துங்கூட இடம் கொடுத்தாளில்லை;" "ஆ! அவன் மார்பு மலை போன்றது! ஆரம் நாறும் வீர மார்பு; குவளையும் காந்தளும் குலவிய மார்பு; கூடியபோது என் வாடிய மார்பு குளிர்ந்தது. "உடல் தழைத்தது; உயிர் தளிர்த்தது" என்பாள் இரவும் பகலும் கூடுதற் கில்லாது இரு குறியும் மறுத்து விட்டனளே!" "தோழி! மகிழ்நன் மார்பின் மீது கொண்ட காதலால் அழியாதே! அவலமுறாதே!" "களவு நீடிக்கு மாயின் வரைந்து மகிழ்ந்து வாழ்தல் என்றோ? ஒன்றுமொழிக் கோசர்போலச் சூழ்ச்சியும் சிறிது வேண்டும் என்பதனைச் சிந்தை கொள்வாய்" (73).

"தோழி! சிறுதினை மறுகாலில் கொழுத்த அவரை தழைத்துப் பூத்தது; அரும்பனி அச்சிரம் தொடங்கியது; பிரிந்த காதலர் வாராதிருப்பர்கொல்! அவர் அன்பென்னே! நீண்டு தொங்கும் கூந்தலைத் திண்டி வாரி முடித்து மகிழ்வார்; கதுப்பினை நீவிக் களிப்பார், பிரிதலை எண்ணி வருந்துங்கால் பின்புறம் போந்து, அழாதே என்று நம் அழுத கண் துடைப்பார். இன்பத்துள் இன்பமுற்றும், துன்பத்துள் துன்பமுற்றும் பிரிந்த நம் காதலர் எந்நிலையினர் என்பதனை நீ ஓராயோ" (82).

"பூவெனப் பொலியும் கண்கள்; பொன்னெனப் பொலியும் மேனி; மாண் வரி அல்குல் இளையள்; அவள்

வேயெனத் திரண்ட தோளொடு கலக்கும் ஒருநாளின் பம் எங்கிலேயது? பேரலை வீசும் கடலால் சூழ்ந்தது இம் மண்ணுலகு; பரந்து விரிந்தது; எண்ணிலாத இன்பப் பொருளைத் தன்னகத் தடக்கியது. அடைதற் கரியது விண்ணுலகம்; உண்ணத் தெவிட்டா ஆரமுதமுடையது. இவ்விரு உலகாலும் எய்தும் இன்பம் ஒரு நாள் தோளொடு கலக்கும் இன்பத்திற் கீடாகுமோ? ஆகாது" (101).

"தோழி! உன் மேனியழகைச் சிதைத்தது வேளென வேலன் கூறுகின்றான். அன்னையும் அதுவென உன்னு வாள் போலும்; அங்ஙனமாயின், நம் இல்லோரது நகைத் தற் கிடமாய இச் செய்கையைக் காண மலை நாடனும் விரைந்து வருவானாக" (111).

"ஆடவரை அறியா அணங்கு நாணமுறுகின்றாள். என்று முணர்ந்தறியா உணர்ச்சியால் அவள் உள்ளம் குழைகின்றது. ஆதலால் அவளைத் தேற்றல் என் கடமை! 'மலர்தொறும் உலாவும் மணி நிற வண்டே! எண்ணற்ற மலர் நண்ணி நறுமணம் தேர்ந்து வரும் வண்டே! ஓரம் போகாது உண்மையாய் நீ உணர்ந்தது உரைத்தல் வேண்டும். எழுமையும் என்னோடு பழகுதல் அமைந்த அன்பையும், மயில் போன்ற சாயலையும், நெருங்கிய பற்களையு முடைய இந் நங்கையின் கூந்தலின் நறிய மணம் கண்டதுண்டோ?" (1).

"தோழி! என் குறையை நீ இகழ்கின்றாய்! அமிழ் தம் அமைந்து சிவந்த வாயையுடைய வஞ்சியை, கூரிய எயிறுடைய சின்மொழிக் கோதையை மடலேறியும் பெறுவேன்; பெற்றபின் இவ்வூரார் அறிவாராக. ஆயின், வீதியில் இந் நல்லாளுடைய கணவ னிவனெனப் பல்லோர் சொல்ல நான் சிறிது நாணமடைவேன்" (14).

தேமா மரங்கள் செறிந்த சோலை; குரங்குகள் குட்டியொடு கனியருந்திக் குனிக்கும் சோலை. அச் சோலையிடத்துக் கூடிய செயலை, மலைநாடன் இல்லை யென மறுப்பனோ! மலர்ந்த வேங்கையில் அமர்ந்த மயில், பூக் கொய்யும் பூவை போல் தோற்றும். நாடன் பொய் யென மொழியினும், அன்று கண்டிருந்த கடுவன் அவனை நன்கறியு மன்றோ! இது வரையும் வரையாது என்னை

வருத்தும் அக் கொடியோனை அது நன்கு கண்டிருந்த தன்றோ? ஆதலின், பொய்ப்பினும் மெய்ப்பிக்க வழி யறிவேன்" (26).

"நெஞ்சே! ஆற்றா றஞ்சி இரவுக்குறி இல்லாது போயிற்றென நீ நீடு துன்ப முழல்கின்றனை. பசுங் கலத்துப் பெய்த நீர் பொசிதல்போலத், தாங்க முடியாத் துயரால் தளர்வுற்றனை; மகவுடை மந்தி போன்று அகனுறத் தழுவி உன் துயரைக் கேட்குநர் உளரா? அங்ஙனமாயின், நீ அல்லல் அடைதலும் சாலும்" (29).

ஆற்றாளெனத் தோழி அல்ல லடைகின்றாள். அதற்குத் தலைவி மறுமொழி கூறுகின்றாள். "தோழி! நீ பெரிதும் பேதுறுகின்றனை; மாணை மாக் கொடியருகு யானை யுறங்கும் நாடன் என் தோளை மணந்தான். உன் மனத்தினின்று மாறேனென சூளுரைத்தான். என்னிடமன்றோ சூளுரை கூறினன். என்னிடம்கூறிய மொழிகள் உனக்கு வருத்தம் தரவல்லவோ?" (36)

"அவன் நட்பு ஏனையோர்க்கு மிக அழகிது; ஆயின், என்போல்வார்க்கு இனியதன்றாம். பிரிந்த காலத்து மையுண் கண்ணினின்று மழை யென நீர் வார அப் பிரிவை நினைந்து வருந்தாதிருப்பார்க்கு அவனொடு செய்யும் அன்பு நன்றாம் (38).

"ஆருயிர் அணங்கே! நீ யாரோ? யான் யாரோ? உந்தையும் எந்தையும் எவ்வழி உறவினர்? இருவரும் இதுவரையும் எவ் வழியும் அறிந்தவராகோமே? விண்ணிற்கும் மண்ணிற்கும் எவ்வகைத் தொடர்பு மில்லையே! வான மழை செம்புல மண்ணொடு வேற்றுமை யின்றிக் கலந்து விளங்குதல் காணுமா! அதேபோன்றே எவ் வழியும் தொடர்பற்ற நம்மிருவ ருள்ளமும் கலந்தன" ஆதலால் கவலையடையாதே."

"இரவிலே இடைவிடாது வருகின்றான். இது நீடிக்குமாயின் மணம் நிகழ்தல் என்றோ? தடுக்கும் வழி வேண்டுமே! மலை நாடன் சிறைப்புறத்துள்ளான். ஆகுக; இங்ஙனம் மொழிதல் ஏற்கும்" வானிலொளி வீசி வயங்கு மதியமே! நீ மிகப் பேதமை யுடையாய்; நல்லையு மல்லை. எல்லியில் எம் இல்லம் நாடி வருபவர்க்குத்

தடையா யிருக்கின்றாயே ; இஃது எற்குமோ" இங்ஙனம் இரா வந்தொழுகும் தலைவனுக்கு முன்னிலைப் புறமொழி யாய்த் தோழி கூறுவன நயமுடையனவாம்" (47).

"செங்கா லுழுந்தெலாம் செழித்துக் காய்த்து விட்டன ; மானினம் மறியொடு காயுண்டு மகிழ்கின்றன. ஐயோ ! இப்பணியை என்னால் தாங்க முடியவில்லையே ! பனிப்பருவத்தால் வரும் துன்பம் மணியில் தீருமா ? வேறு மருந்தில் தீருமா ? தணந்து சென்ற அவர் மணந்த மார்பன்றி இந்நோய் தீர்க்க வேறு மருந்தில்லையே" (68).

"நெஞ்சே ! நீடுநினைந் திரங்குகின்றாய். நெய் பூசிய கூந்தலாள் ; ஒளியுடைய நெற்றியாள். ஆயினும் பிரிந்த காலத்துப் பெருந் துன்பம் தருபவள். ஆண்டிலே இளையள் ; அழகிலோ பெரியள் ; அவள் அழகினைப் புனைந்து கூற அறியேன். சின்மென் மொழியாள் ; கூடுங் கால் பஞ்சணை போன்ற மென்மையுடையாள் ; வேறு என் கூறவல்லேன்" (70).

"ஆ ! அவள் கண்கள் மழைபோன்ற தன்மையுடை யன ; மலர்போன்று சுழலும் தன்மையன ; ஆனால் ஊரார் யாவரும் என்னிலை உணர்ந்தனர் ; என்னை அறிந்தனர். என்வேறுபாடு தெரிந்தனர். மக்கள் எல்லாம் அறிய என் மனத்தியல் மாற்றிப் புண்செய்த லால் அவள் கண்கள் அம்புபோன்றவை (72).

தலைவனது வேண்டுகோளை நிறைவேற்ற விரும்பு கின்றாள். தலைவியிடம் எங்ஙனம் மொழிவதென எண்ணுகின்றாள். "தலைவி ! விசும்பு தோய் பசுங்கழை நாடனை நாமும் விரும்பினம் ; அதனை அவன் அறியான். வேனிலால் ஆனேறு மெலிந்தாற்போல நம் நலம் நயந்து வாடுகின்றான்" எனும் நய மொழிகள் இன்ப மளிப்பன வல்லவோ !

"நண்பா ! காம மென்பது பேதைமை யுடையது. மிக்க அறியாமை யுடையது. வெறுக்கத் தக்கது ; வேண்டுவா ரிடத்து அது சென்றதாயின் நன்றாம் ; அது பொருத்த மாம். எனைத்தும் நன்றெனன எண்ணாது வெறுத்திருப் பாரையும் அடுத்து ஒறுக்கின்றது' இதனை அறிவுடைய தெனக் கூறலாகுமோ ? (78).

"வருவனே? என்னை வந்து வரைவனே"? வானோங்கி வளர்ந்த மரங்கள் பல; எங்கு நோக்கினும் பலா மரங்கள்; தூங்கும் கனிகள்; ஓங்கிய மலைகள்; இவையுடைய நாடன் என்னை வரைந்து செல்ல வருவான் என்றாள் அன்னை!

மலைநாடன் என்னை மணக்க வருவானெனக் கூறிய அன்னை ஆண்டு பல்லாண்டு வாழ்வாளாக. பெறற்கரிய அமிழ்தம் உண்ணும் தேவ நல்வாழ்வு எய்துவாளாக." (83).

"வரைந்து செல்ல விரைந்து வருவேன்" என வாக்களித்தேகினரே! கூறிய காலம் குறுகிவிட்டதே! ஐயோ! மன்றத்தில் தெய்வ முண்டல்லவா? அது கொடியவரை வருத்தும் எனக் கூறுவார்களே? ஆ! தெய்வமே! என் கணவர் கொடியரல்லர்; நான் அவரை விரும்பினேன்; ஆதலால் பசலை அடைந்தேன்; என் தோளும் நெகிழ்ந்தன; ஆனால் அவர்பாற் பிழை எதுவுமில்லை" (87).

"தோழனே! அதோ பார்! பெரிய மலையிலிருந்து அருவி வீழ்கிறதன்றோ? அதனருகே மலர் மலிந்த சோலை தெரிகின்றதன்றோ? அப் பூஞ்சோலையிலுள்ள சிறிய குடியிலுள்ள குறவன் மகள்; பெருந் தோளையுடையாள்; இளையள்; நீரினும் தண்மையுடையாள்; என் வலியோ தீயன்னது என்பது நீ தெரிவாயன்றோ! நீரனைய அவள் சாயல் தீயனைய என்வலிமையை அழித்துவிட்டது" (95).

"தலைவனே! மூங்கில் ஓங்கிய சாரல், இலையுண்டு மரையா துஞ்சும் மலை நாடனே! இல்லிருந்து இந் நல்லாளைக் கொண்டு செல்கின்றாய்; தாயினும் தமரினும் பிரிந்து வருகின்றாள்! பெரு நன்மையினைச் செய்த காலத்து அதனைப் பேணுதாரு முண்டோ? இவளோ சிறிய நன்மை யுடையாள்; நின்னையன்றி வேறு துணை இல்லாள்; இவளைக் காத்தல் உன் கடமை" (115).

"வெண்மையான அரவு; உருவிலே மிகச் சிறியது; வலியிலே குறைந்தது. யானையோ வடிவிற் பெரியது; உருவில் உயர்ந்தது; வலியிற் சிறந்தது. ஆயின் சிறிய அரவினால் பெரிய யானை வருந்துதலும் உண்டு. இவளோ

ஆண்டிலே இளையள்; வளை யணிந்த கையள். உலையாத உள்ளமுடைய என்னை வருத்திவிட்டாள்" (119)
"பேதை நெஞ்சே! உன் அறியாமையை என்னென்று பேசுவேன்! பொருளற்றவன், போகமெல்லாம் விரும்பியதுபோல் பெறுதற்கு அரியதை நீ விரும்புகின்றாய். தலைவி எத்துணை இனியளும் நல்லளுமா யிருக்கின்றாளோ அத்துணை அவளும் நம்மால் அடைதற்கரியள் என்பதை அறியாதிருக்கின்றாயே."

செந்தமிழ் மொழியின்கண் சிறுகதைகள் இல்லை என்பார் சிலர்; பழந்தமிழ்ப் பாக்கள் ஒவ்வொன்றும், உயரிய வாழ்க்கை நிலையைத் தன்னகத் தடக்கிய சிறிய கதைச் செய்யுட்கள் என்பதனைக் கற்பார் அறிவர். ஈண்டு எடுத்துக் காட்டியவாறு குறிஞ்சிப் பாக்களையெல்லாம் கற்பனைச் சிறு கதைகளாகவும், உயிரினையுடைய ஓவியங்களாகவும் கண்டு மகிழலாம் என்பது கற்கும் எம்போன்ற மாணவரது கருத்தாம்.

## சில பெயர்கள்

குறிஞ்சிப் பாக்களின்கண், மக்கள் பெயர் சிலவும், ஊர் துறை முதலியனவும் சுட்டப்படுகின்றன. ஓரி, அகுதை, நன்னன், ஒன்றுமொழிக் கோசர், பொறையன், மலையன், பிரிந்தோர்ப் புணர்ப்பவர், கணக்காய் வகையின் காவலர் முதலிய சொற்கள் ஆராய்ச்சிக்குரியனவாம்.

ஓரி:—வன்மை வாய்ந்த வில்லை யுடையவன்; மேற்றிசைக்கணுள்ள கொல்லிக் குடவரையை யுடையவன். கொல்லி மலையில் கொல்லிப் பாவை உண்டென்று சுட்டப்பட்டுள்ளது (100). சிறுபாணாற்றுப்படையிற் கூறப்படும் கடையெழு வள்ளல்களுள் ஒருவனாய ஓரி என்பான் இவனே என எண்ணக் கிடக்கிறது. 'கைவள்ளோரி' என்ற தொடர் காணத் தக்கது (199).

அகுதை:—கடுமையும், இனிமையும் அமைந்த கள்ளையுடையவன்; அகவன் மகளிர்க்குப் பரிசாகப் பிடிகளை அளிப்பவன். (298).

**நன்னன் ;**—பெண் கொலை புரிந்தவன். நன்னன் சோலை நறுமாங் கனியொன்று நீரில் வீழ்ந்து ஆற்றொடு சென்றது. புனலாடி நின்ற பூவையொருத்தி அரசன் சோலைக் கனியென அறியாது அருந்தினள். அப் பிழைக்காக எண்பத்தொரு யானைகளும், அக் கன்னி நிறையுடைய பொன்னும் அளிக்க அவள் தமர் இசைந்தும், இக்கொடியோன் அதற் கிசையானாய் அக் கோதையைக் கொன்று நரகில் வீழ்ந்தான் (292).

மாதினைக் கொன்ற பாதக மறிந்த கோசர் சூழ்ச்சி சில செய்து அத் தேமா மரத்தை வெட்டி எறிந்தனர் (73).

**ஒன்றுமொழிக் கோசர் :**—பெண்கொலை புரிந்த நன்னனது நறுமாவினை வெட்டியவர் (73). ஔவையாரால் பாலைச் செய்யுளில் (15) சுட்டப்படும் நாலூர்க் கோசர்க்கும் இவர்க்கும் ஏதேனும் தொடர்புண்டோ என ஆய்தல் அமையும். நாலூர்க்கோசர் முதிர்ந்த ஆலுடைய பொதியில் தோன்றியவர். மோகூர்ப் பழையனுடைய அறக்களத்தில் இருந்தவரென மதுரைக் காஞ்சி (508-9) அடிகளால் புலனாகின்றது.

**பொறையன் :**—வலிமை வாய்ந்த தேர்ப்படை யுடையான்; மேற்றிசை யுள்ள தொண்டி முன்துறை யுடையான் (128).

**மலையன் :**—எஃகு விளங்கு தடக்கையன் (198). செவ்வேலுடையான் (312). இவனது கானம் முள்ளூர்க் கானம் என்பதாம் (312). மலையனது முள்ளூர்க் கானச் சந்தனம் நறுமணம் மிக்கது (198). இவன் மிக்க வலியுடையான் (312).

**பிரிந்தோர்ப் புணர்ப்பவர் :**—(391) தலைவன் பார்ப்பனப் பாங்கனை நோக்கி இவ்வூரில் பிரிந்தோர்ப் புணர்ப்பவர் இருந்தனரோ என வினவுகின்றான்.

**கணக்காய் வகையின் காவலர் :**—இவர் இரவில் துயிலாது நாழிகை வட்டிலைக் கூர்ந்து நோக்கி யாமக் கணக்கை அறிவிப்பவர்; அவர்கள் துயிலாதிருத்தல் போல் தலைவியும் ' தலைவன் வருகை எண்ணி என்

கண்கள் துயின்றில' என்று கூறுவதாய்க் குறிப்பிட்டுள்ளார் (261).

அகவன்மகளிர் :—பாடும் ஒருவகைப் பெண்கள். கட்டுவிச்சியாகவும் கருதப்படுகின்றூர்கள்.

## வேறு சில

கொல்லி :—இது குடபாற் கொல்லி எனக் கூறப்பட்டுள்ளது. ஓரிக் குரியதாய் ஓரிடத்தும் (100), பொறையனுக் குரியதாய்ப் பிறிதோரிடத்தும் (89) குறிக்கப்பட்டுள்ளது. அச்சமளிக்கும் கொல்லி மலைத் தெய்வத்தால் எழுதப்பெற்ற பாவை அங்கிருந்த தென்பதைப்,

" பேஎமுதிர் கொல்லி—
கருங்கட் தெய்வம் குடவரை எழுதிய
நல்லியற் பாவை " (89)
என்பதாலும்,
' கொல்லிக் குடவரைப் பாவையின் ' (100)

என்பதாலும் உணரலாம்.

தொண்டி :—இது பழந் துறைமுகப் பட்டினம். 'துறைமுகம்' என்ற சொல்லுக்கு ஏற்ற பழைய சொல் முன்றுறை போலும். இது பொறையனுக் குரியதாயிருந்தது (128).

முள்ளூர்க் கானம் :—மலையனுக் குரியது (312). இது மிக்க நறுமணம் வீசுவது (198).

## மக்கள் எண்ணங்களில் சில

விண், நரகம் போன்ற சிலவற்றில் எண்ணமுடையரராய் அக்கால மக்களும் அமைந்திருந்தனர் என அறியக் கிடக்கிறது.

மறுமையுலகம் (199), நிரயம் (73), புத்தேள் நாடு (101), தேவரமுதம் (83) அல்லது அமிழ்தம் (200), அமிழ்து (206) முதலியன சுட்டப்படுகின்றன.

## பழக்க வழக்கங்கள்

தழையணிதல் அக்கால வழக்கமென அறியலாம் (159). மங்கையர், சந்தனப் புகையும் அகிற்புகையும் கூந்தலுக்கு ஊட்டுவர் (286); எண்ணெய் தலைக் கணிவர் (312); இள மகளிர் கூந்தலைப் பின்னி விட்டிருப்பர் (246); தொடி யணிவர்(239). தோளில் வளை யணிவர் (252); தொய்யிலை மார்பிலும் தோளிலும் எழுதுவர் (276); வரிசையாக வளையல்களை அணிவர் (335); சங்கினைப் பிளந்து வளை செய்வர்போலும் (365); நெருக்கமாகத் தொடி யணிதல் உண்டு(329); பூக் கொய்தும் (26) சுனை யாடியும் (335) விளையாடுவர். புதல்வர் கழுத்தில் புலிப்பல்லா லாய தாலி அணிவர் (161).

ஆடவர், ஆர மணிவர் (161); சுனைப் பூங்குவளை மாலை யணிவர் (321); தேரேறிச் செல்வர் (336); வெறியாட்டெடுக்குங்கால் மறி யறுத்துத் தினை பரப்பிச் சில்லவிழ் சிதறி வேலனை வணங்குவர் (362). குறிஞ்சி மக்கள், ஊர் (335), மன்றம், (346) சிறுகுடி, (355) நாடு (371) முதலியன வகுத்து வாழ்ந்தனர்.

கூற்று என்பது கூறுதற் குரியாரை அறிந்து, அவருள் 'இன்னார் கூறினார் இப்பாட்டு' என்று அறிதலாம். களவில் கூற்று நிகழ்த்தற்கு அறுவகையார் உரியராவர் என்பதை,

> "பார்ப்பார், பாங்கன், தோழி, செவிலி
> சீர்த்தகு சிறப்பின் கிழவன் கிழத்தியொடு
> அளவியல் மரபின் அறுவகை யோரும்
> களவினில் கிளவிக் குரியர் என்ப"
>
> (தொல். செய். 190)

என்னும் நூற்பாவால் அறியலாம். இவ் வறுவகைக் கூற்றுக்களும் குறுந்தொகைக் குறிஞ்சியின்கண் உள்ளன எனக் கூறுதற்கில்லை. ஆயின், சில கொண்டு கூட்டிக் கூறும் கூற்றுக்களும் உண்டு. அவற்றையெல்லாம் தொகுத்துக் கூற்று வகையினைக் கூறுபடுத்தின், நால்வகைக் கூற்றுக்களைக் காணலாம். 146 குறிஞ்சிச் செய்யுட்களுள்ளே, தலைவன் கூற்றாய் 39 செய்யுட்களும், தலைவி கூற்றாய் 48 செய்யுட்களும்,

தோழி கூற்றாய் 57 செய்யுட்களும், பாங்கன் கூற்றாய் 2 செய்யுட்களும் பயின்று வந்துள்ளன.

## இலக்கண முடிபு சில

" ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்

..............................................

இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல"

(கிளவி. சூ. 27)

என்பது தொல்காப்பியம்.

'கொடிய ரல்லர்எம் குன்றுகெழு நாடர் (87)

'ஆரிருட் கங்குல் அவர்வரின்' (153)

என்பன புலவர்க்குரிய உரிமைகளெனவே கொள்ளல் வேண்டும் போலும் !

"சிறுபசுங் கால குருகும் உண்டுதாம்"

கால என்னும் பன்மைச் சொல், குருகு என்னும் ஒருமை கொண்டு முடிந்தது. இது தொகுதியொருமை பற்றியாம்.

'இயலி' என்னும் சொல், இயன்று, இயங்கி என வந்துள்ளது. (264)

'கண்டிசின்' என்பது முன்னிலை வினைமுற்றாகவும் வந்த இடமுண்டு (112).

இதுகாறும், குறிஞ்சிப்பாக்களுள்ளே முதல், கரு, உரி மூன்றும் ஆய்ந்தும், உரிப்பொருட் பகுதியில் சில செய்யுட்களைக் கோவையாக உரைத்தும், உவமத்துள் சிறந்தன சுட்டியும், சிறுகதைப் பகுதியாய் வருவன சில சொல்லியும், கூற்றும், பழக்க வழக்கமும், இலக்கண முடிவு சிலவுந் தேர்ந்தும் ஈண்டுத் தந்துள்ளோம்.

கழக வெளியீடு: ௨௬௫

# குறுந்தொகைச் சொற்பொழிவுகள்

*Publishers* :
THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS
PUBLISHING SOCIETY, TINNEVELLY LTD.
6, CORAL MERCHANT STREET, MADRAS, 1.
*Head Office* :
24, EAST CAR STREET, THIRUNELVELI.

**Price Rs. 2-4-0**